# நற்றிணையில் மொழிதல்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (Ph.D.) பட்டத்திற்குப்
பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**கா. சத்தியமூர்த்தி**

பதிவு எண்: 0256

நெறியாளர்

**முனைவர் மு. சுதா**

உதவிப் பேராசிரியர்






**தமிழ்த்துறை**

**அழகப்பா பல்கலைக் கழகம்**

(தேசியத் தர மதிப்பீட்டுக் குழுவால் 'ஏ' தகுதி பெற்றது)

காரைக்குடி-630 003.

தமிழ்நாடு

இந்தியா


**ஆகஸ்டு - 2015**

**கா.சத்தியமூர்த்தி,**
*முனைவர் பட்ட ஆய்வாளர்,*
*பதிவு எண்.256,*
*தமிழ்த்துறை,*
*அழகப்பா பல்கலைக்கழகம்,*
*காரைக்குடி - 630 003.*

*நாள் :*

# ஆய்வாளர் உறுதிமொழி

**"நற்றிணையில் மொழிதல்"** *என்னும் தலைப்பில் தமிழ் முனைவர் (Ph.D.) பட்டத்திற்காக எழுதப்பெற்ற இவ்வாய்வு எனது சொந்த முயற்சியில் உருவானது என்றும் இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதியளிக்கின்றேன்.*

**(கா.சத்தியமூர்த்தி)**
ஆய்வாளர்

**முனைவர் மு.சுதா,**

*உதவிப்பேராசிரியர்,*

*தமிழ்த்துறை,*

*அழகப்பா பல்கலைக்கழகம்,*

*காரைக்குடி - 630 003.*

நாள் :

# நெறியாளர் சான்றிதழ்

**"நற்றிணையில் மொழிதல்"** *என்னும் தலைப்பில்* **கா.சத்தியமூர்த்தி** *அவர்கள் தமிழ் முனைவர் (Ph.D.) பட்டத்திற்காகச் செய்த இந்த ஆய்வு, அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பெற்றது என்றும் இந்த ஆய்விற்காக வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.*

**(மு.சுதா)**

நெறியாளர்

# நன்றியுரை

**“நற்றிணையில் மொழிதல்”** *என்னும் தலைப்பில் முனைவர்பட்ட ஆய்வு மேற்கொள்வதற்கு வாய்ப்பளித்த அழகப்பா பல்கலைக் கழகத்திற்கும் ஒப்புதல் நல்கிய தமிழ்த்துறைத் தலைவர்* ***முனைவர் மு.பாண்டி*** *அவர்களுக்கு என் இதயம் கனிந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.*

*ஆய்வுக்குத் தக்கதோர் வழிகாட்டியாக அமைந்து அறிவுரைகள் கூறி ஆய்வேடு செம்மையுற அமைய பல்லாற்றானும் நல்லுதவி புரிந்து ஆற்றுப்படுத்திய மதிப்பிற்குரிய எனது ஆய்வு நெறியாளர்* ***முனைவர் மு.சுதா*** *அவர்களுக்கு என் உளங்கனிந்த நன்றியினை உரித்தாக்குகிறேன்.*

*தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் அனைவருக்கும் என் நன்றி உரியது.*

*நான் நன்னிலை பெற்றுயர நாளும் தன்னை வருத்திக்கொண்டு என்னை உயர்த்தும் என் அன்புக்குரிய பெற்றோர்கள்* ***அ.காளியப்பன்-பஞ்சவர்ணம்*** *அவர்களுக்கு நன்றிகூறக் கடப்பாடுடையேன்.*

*நான் முனைவர் பட்டம் பயிலுவதற்கு தூண்டுகோளாய் இருந்து உதவிபுரிந்த திரு.**த.முத்துக்குமார்**, உதவிப் பேராசிரியர், ஜோசப் கல்வியியல் கல்லூரி அவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். ஆய்வுக்குத் துணைபுரிந்த எனது மனைவி ச.அமலா மற்றும் எனது உடன்பிறவா சகோதரர் முனைவர் சங்கரதாஸ், முனைவர் இரா.மாரிமுத்து ஆகியோருக்கும் எனது உடன் பயிலும் முனைவர்பட்ட ஆய்வாளர்கள் நிவேதிதா, ராசேந்திரன், முகமதுஹுசேன், கோகுலவர்த்தினி, வெண்ணிலாதேவி ஆகியோருக்கும் என் நன்றியினை உரித்தாக்குகிறேன்.*

எனது ஆய்வுக்குத் துணைபுரிந்த பல்கலைக்கழக மைய நூலகத்திற்கு எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்வேட்டைச் செம்மையாகவும், நேர்த்தியாகவும் கணினியில் அச்சாக்கம் செய்தளித்த **காரைக்குடி மகேஷ் கணினி அச்ச**க நிறுவனத்திற்கு நெஞ்சார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நன்றியுடன்

**கா.சத்தியமூர்த்தி**

# பொருளடக்கம்

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | - | அகநானூறு |
| இளம். | - | இளம்பூரணர் |
| உ.ஆ. | - | உரை ஆசிரியர் |
| கலி. | - | கலித்தொகை |
| கற்பு. | - | கற்பியல் |
| களவு. | - | களவியல் |
| குறுந். | - | குறுந்தொகை |
| தொல். | - | தொல்காப்பியம் |
| நச். | - | நச்சினார்க்கினியர் |
| நற். | - | நற்றிணை |
| நூ. | - | நூற்பா |
| ப. | - | பக்கம் |
| ப.ஆ. | - | பதிப்பாசிரியர் |
| பக். | - | பக்கங்கள் |
| பா. | - | பாடல் |
| பொருள். | - | பொருளதிகாரம் |
| மேலது. | - | மேல் குறிப்பிட்டது |

சங்க இலக்கியங்களான எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும் காலத்தை வென்று வாழும் கருத்துக் கருவூலமாகத் திகழ்கின்றன. அகம், புறம் என்ற இரண்டையும் பாடுபொருளாகக் கொண்டு எழுதப்பெற்றத் தனிப்பாடல்களின் தொகுப்புகளான இச்சங்க இலக்கியங்களை ஆய்ந்து நோக்க, நோக்க புதுப்புதுக் கருத்துக்கள் தோன்றியவண்ணமே உள்ளன. சங்க காலத்தில் வாழ்ந்த மக்களின் வாழ்வியற் கூறுகள் மற்றும் உள்ள உணர்வுகளை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பெற்ற இச்சங்க பாக்கள் எக்காலத்தும் ஏற்றுப் போற்றத்தக்க வகையில் அமைந்திருப்பது இதன் தனிச் சிறப்பிற்கு காரணமாகின்றது. மனித உணர்வுகளை உளவியலடிப்படையில் பொதுநிலையில் இன்பியல், துன்பியல் எனும் இரு நிலைகளில் பகுத்துக் கூறுவர். துன்பியல் மனித மனங்களில் மன அழுத்தம், உளைச்சல், சோகம், வெறுப்பு போன்ற எதிர்மறை விளைவுகளை வெளிப்படுத்தும்போது உள்ளப் போராட்டங்கள் நிகழ்தல் இயல்பானதாகும். இவ்வுளவியல் அடிப்படையில் நற்றிணையில் தலைவன், தலைவி, தோழி மற்றும் பிற மாந்தர்களின் கலங்கி மொழியும் கூற்றுக்கள் குறித்ததாக இவ்வாய்வு அமைந்துள்ளது.

## ஆய்வுத் தலைப்பு

‘**நற்றிணையில் மொழிதல்**’ என்பது ஆய்வுக்குரியத் தலைப்பாகிறது.

## ஆய்வு நோக்கம்

சங்க இலக்கியங்களில் தலைவன் தலைவியின் அகவாழ்வைப் பற்றிப் பகரும் அக இலக்கியங்கள் குறிப்பிடத்தக்கது. சுட்டி ஒருவர் பெயர் கொளப் பெறா நிலையில் எக்காலத்திற்கும் எம்மக்களுக்கும் வைத்துப் பொருத்திப்பார்க்கும் நிலையில், உள்ளத்து உணர்வுகளை வெளிப்படுத்துதலை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பெற்றன இவ்வகைப் பாக்களாகும். தொல்காப்பியர் மாந்தர்களிடத்து உண்டாகும் புறப்புலப்பாடுகள் குறித்து மெய்ப்பாட்டியல் எனும்

தனித்த இயலில் தொகுத்துரைத்துள்ளார். அவற்றிலும் குறிப்பாக அகத்திணைக்கேயுரிய மெய்ப்பாடுகளாகக் குறிக்கப்பட்டனவற்றுள் ஒன்று 'கலங்கி மொழிதல்' என்பதாகும். தன்னால் இயலாத சூழலில் கலங்கி உரைத்தல் என்பது மாந்தரியல்பு. இந்த உளவியல் அடிப்படையில் சங்க இலக்கியப் பாக்களுள் பல அமைந்திருப்பதை காணமுடிகிறது. குறிப்பாக நற்றிணையில் மட்டும் 224 பாக்கள் காணப்படுகின்றன. இப்பாக்களின் எண்ணிக்கை கொண்டு நோக்குகையில் இன்பம், துன்பம் என்ற இரு நிலைத் தத்துவங்களை புலவர் பெருமக்கள் உணர்வுப்பூர்வமாக உளவியல் அடிப்படையில் கண்டறிந்து பதிவுசெய்திருப்பதைக் காணமுடிகின்றது.

அவ்வகையில் நற்றிணையில் அமைந்துள்ள மனம் அழிந்து மொழியும் கூற்றுக்களைத் தொகுத்து அவற்றுள் பதிவு செய்யப்பட்டுள்ள ஆய்விற்குரிய அக உணர்வினை எடுத்துரைப்பதும் அது கூற்றாளருக்குத் தக்க எங்ஙனம் வேறுபட்டு அமைந்துள்ளன என்பதையும், அவர்களது உள்ளத்தில் அக்கலக்கம் ஏற்படுவதற்கு உகந்த காரணிகளாகவும், சூழல்களாகவும் அமைவன எவை, எவை என்பதை ஆராய்ந்து வெளிப்படுத்துவதே இவ்வாய்வின் நோக்கமாகும். மேலும் அதன்வழி சங்க இலக்கியம் மற்றும் சங்கப் புலவர்களின் திறனுக்கு மற்றுமொரு சான்றாய் இக்கருத்தைப் பதிவுசெய்வதும் ஆய்வு நோக்கமாகின்றது.

**ஆய்வு கருதுகோள்**

எக்காலத்து எம்மக்களும் ஏற்றுப் போற்றத்தக்க வகையில் அமைந்திருக்கும் அக உணர்வுப் பாக்களை தன்னகத்தே கொண்டது சங்க இலக்கியங்கள் என்பதும், இவ்வுணர்வுகளையும் உளவியல் அடிப்படையில் ஆய்ந்து உணர்ந்து அதனைத் தங்கள் பாக்களிலே சங்கப்புலவர்கள் பதிவு செய்துள்ளனர் என்பதும், இதன் வழி சங்கச்

சமூகத்தை அறிந்துகொள்ள இயலும் என்பதும் கருதுகோளாகும். இது ஆய்வின்வழி நிறுவப்பட்டுள்ளது.

**ஆய்வு எல்லை**

நற்றிணையில் இடம்பெற்றுள்ள 400 பாடல்களில் தலைவன் கூற்றில் கலங்கி மொழிதல் 32 பாடல்களும், தலைவி கூற்றில் கலங்கிமொழிதல் 65 பாடல்களும், தோழிக் கூற்றில் கலங்கி மொழிதல் 116 பாடல்களும், செவிலிக் கூற்றில் கலங்கி மொழிதல் ஒன்பது பாடல்களும், பரத்தை கூற்றில் கலங்கி மொழிதல் இரண்டு பாடல்களும் சேர்த்து 224 பாடல்கள் கலங்கி மொழியும் பாக்களாக உள்ளன.

நற்றிணைப் பாக்களுள் இன்பத்து மொழிதல், துன்பத்து மொழிதல், அறிவுறுத்தல் போன்ற பல நிலைகளில் கூற்றுகள் அமைந்தாலும், மனம் அழிந்து கலங்கி மொழியும் பாடல்கள் மிகுதியாகக் காணப்படுவதால் ஆய்வு விரிவு கருதி கலங்கி மொழியும் கூற்றுகள் மட்டும் இங்கு ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டுள்ளன.

**முதன்மைச் சான்றாதாரங்கள்**

சங்க இலக்கியங்களில் ஒன்றான நற்றிணை முதன்மைச் சான்றாதாரமகிறது.

**துணைமைச் சான்றாதாரங்கள்**

தொல்காப்பியம் முதலான அகப்பொருள் இலக்கணங்களைக் குறிக்கும் இலக்கண நூல்களும், கலைக்களஞ்சியங்கள், அகராதிகள், நிகண்டுகள், ஆராய்ச்சிக் கட்டுரைகள், கருத்தரங்கக் கட்டுரைகள், ஆய்வேடுகள், இதழ்கள் போன்றவைத் துணைமைச் சான்றாதாரங்களாக அமைந்துள்ளன.

## ஆய்வு அணுகுமுறைகள்

*ஆய்வுப் பொருளை விளக்கி வரைய விளக்கவியல் அணுகுமுறை பயன்படுத்தப்பட்டுள்ளது. தொல்காப்பியர் மாந்தர்கள் மனம் வருந்தி கலங்கி மொழியும் சூழல்களை விரித்துரைத்துள்ளார். இக்கோட்பாட்டினை நற்றிணையில் தலைவன், தலைவி, தோழி மற்றும் பிற மாந்தர்கள் கூற்றுப் பாடல்களில் காணப்படும் மனம் அழிந்து மொழியும் கூற்றுகளோடு ஒப்பிட்டு ஆராயப்படும் அளவில் ஒப்பீட்டு அணுகுமுறை மேற்கொள்ளப் படுகிறது. தலைவன், தலைவி, தோழி மற்றும் பிற மாந்தர்களின் உளப்போராட்டங்களை ஆராயுமிடத்து உளவியல் அணுகுமுறை மேற்கொள்ளப் பட்டுள்ளது. சங்ககாலச் சமூகச் சூழல் அறியப்படுதலுக்காகச் சமூகவியல் அணுகுமுறையும் மேற்கொள்ளப் பட்டுள்ளது.*

## முன் ஆய்வுகள்

*தொல்காப்பியப் பொருளதிகார மெய்ப்பாட்டியலின் வழி கலங்கி மொழிதல் பற்றி ஆராயும் இவ்வாய்விற்கு*

1. *"சங்க இலக்கியத்தில் நெஞ்சொடு கிளத்தல்" எனும் தலைப்பில் சோ.முத்தமிழ்ச்செல்வன், முனைவர் பட்ட ஆய்வேடு*
2. *"நற்றிணையில் தோழி கலங்கி மொழிதல்" எனும் தலைப்பில் கா.சத்தியமூர்த்தி, ஆய்வியல் நிறைஞர் பட்ட ஆய்வேடு*
3. *"நற்றிணையில் எண்வகை மெய்ப்பாடுகளும் சமூகக் கட்டமைப்புகளும்" எனும் தலைப்பில் மா.தமிழ்இலக்கியா, ஆய்வியல் நிறைஞர் பட்ட ஆய்வேடு*
4. *"குறுந்தொகையில் துன்பியல் மெய்ப்பாடுகள்" எனும் தலைப்பில் மு.செண்பகவள்ளி, ஆய்வியல் நிறைஞர் பட்ட ஆய்வேடு*
5. *"தொல்காப்பிய பொருளதிகாரவழி நற்றிணையில் ஓர் ஆய்வு" எனும் தலைப்பில் நா.பாலகிருட்டிணன், ஆய்வியல் நிறைஞர் பட்ட ஆய்வேடு*

6. “பரணர் - ஔவையார் பாடல்களில் உளப்போராட்டம்” எனும் தலைப்பில் ஆறு.முத்துக்கருப்பன், முனைவர் பட்ட ஆய்வேடு
7. “எட்டுத்தொகை அக இலக்கியங்களில் தலைவன் நெஞ்சுக்குச் சொல்லுதல்” எனும் தலைப்பில் மு.சுந்தரமூர்த்தி, ஆய்வியல் நிறைஞர் பட்ட ஆய்வேடு

ஆகியன ஆய்வு முன்னோடிகளாகின்றன.

**இயல் பகுப்புகள்**

‘நற்றிணையில் மொழிதல்’ எனும் தலைப்பினில் மேற்கொள்ளப் பெறும் இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களைக் கொண்டமைந்துள்ளது. அவையாவன,

1. கலங்கி மொழிதல் - விளக்கமும் வரையறையும்
2. தலைவன் கூற்றில் கலங்கி மொழிதல்
3. தலைவி கூற்றில் கலங்கி மொழிதல்
4. தோழி கூற்றில் கலங்கி மொழிதல்
5. பிற மாந்தர் கூற்றுக்களில் கலங்கி மொழிதல்

என்பனவாகும்.

**இயல் விளக்கங்கள்**

முன்னுரையில் ஆய்வுத் தலைப்பு, ஆய்வு நோக்கம், கருதுகோள், ஆய்வு எல்லை, முன்ஆய்வுகள், ஆய்வு அணுகுமுறைகள், முதன்மைச் சான்றாதாரங்கள், துணைமைச் சான்றாதாரங்கள், இயல்பகுப்பு, இயல் விளக்கங்கள் ஆகியன விளக்கப்படுகின்றன.

‘கலங்கி மொழிதல் - விளக்கமும் வரையறையும்’ எனும் முதலியல் மொழிதல் என்றால் என்ன? என்பது குறித்தும் அவற்றுள் துன்பத்துள் மொழிதல் என்றால் என்ன? என்பது குறித்தும் விளக்கப்பெற்றுள்ளன. மேலும் தொல்காப்பியர் பொருளதிகாரத்தில் அகத்திணையியல், களவியல், கற்பியல், குறிப்பாக மெய்ப்பாட்டியல் போன்ற இயல்களில்

மாந்தர்களின் கூற்று குறித்தும், அம்மாந்தர்களிடத்து மனம் வருந்தி கலங்கி உரைக்கும் கூற்றுகள் நிகழும் இடம் குறித்தும் விரித்துரைத்துள்ளார். இச்செய்திகள் முதலியலில் விரிவாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

'தலைவன் கூற்றில் கலங்கி மொழிதல்' எனும் இரண்டாமியலில் நற்றிணையில் தலைவன் கூற்றில் மனம் அழிந்து கூறும் கூற்றுக்களாக அமைந்த பாடல்கள் ஆராயப்பெற்றுள்ளன. நற்றிணையில் தலைவன் கூற்றில் இவ்வாறு அமைந்த பாடல்கள் 32 ஆகும். தலைவன், தலைவி, பாணன், தோழி மற்றும் தன் நெஞ்சிடத்துக் கலங்கிமொழியும் பாடல்களாக இம்முப்பத்து இரண்டு பாடல்களும் அமைந்துள்ளன. இப்பாக்களுக்குரிய திணை, துறை, கலங்கி மொழிவதற்கான சூழல், அவற்றுள் உள்ள மெய்ப்பாடு போன்றவை இவ்வியலில் விரித்துரைக்கப் பட்டுள்ளன.

'தலைவி கூற்றில் கலங்கி மொழிதல்' என்னும் மூன்றாமியலில் தலைவி கூற்றில் அமைந்த கலங்கி மொழியும் பாக்கள் மட்டும் ஆராயப்பெற்றுள்ளன. தலைவி தன் நெஞ்சிடம் கலங்கி மொழிதல் மற்றும் தோழியிடம், கிளி, நாரை போன்ற உயிரினங்களுடன், உயிரற்றப் பொருள்களுடன் மனம் கலங்கி கூற்று நிகழ்த்தியமை போன்றன இவ்வியலில் விரித்து ஆராயப்பெற்றுள்ளன. இவ்வாறு தலைவி கூற்றில் அமைந்த 65 பாக்களும் இவ்வியலில் விளக்கிக் காணப்பட்டுள்ளன.

'தோழி கூற்றில் கலங்கி மொழிதல்' என்னும் நான்காமியலில் தோழி கூற்றாக அமைந்த 116 கலங்கிமொழியும் பாடல்களும் விரித்துரைக்கப் பட்டுள்ளன. தோழி, தலைவி, நெஞ்சு, தலைவன், விறலி, பாணன், தெய்வம், செவிலி, உயிருள்ள, உயிரற்றப் பொருள்கள் என அனைவரிடத்திலும் கலங்கி மொழியும் பாக்கள் நற்றிணையில் மிகுதியாக உள்ளன. அகப்பாக்களைப் பொறுத்தவரையில் தோழி கூற்று

பாடல்கள் மிகுதி. தோழியும் சொற்திறன் உடைய மாந்தராகச் சுட்டப்படுபவள். மேலும் மாந்தர்கள் அனைவரோடும் தொடர்புடையவள். ஆதலால், தோழி கூற்றுப் பாடல்கள் உளவியல் அடிப்படையில் நோக்கத்தக்கவை. அந்த அடிப்படையில் தோழி கூற்றுக் கலங்கிமொழியும் பாக்கள் அவை அமைந்த திணை, துறை, சூழல் அதன் வழியாக அறியப்படும் அக்காலச் சமூகம் பற்றியும் இவ்வியலில் விரித்துரைக்கப்பட்டுள்ளன.

'பிறர் கூற்றில் கலங்கி மொழிதல்' என்னும் ஐந்தாமியலில் செவிலி, நற்றாய், பரத்தை ஆகியோர் கூற்றுகள் ஆராயப்பெற்றுள்ளன. நற்றாய் தன் நெஞ்சிடம் கூறியதாக ஆறு பாடல்களும், செவிலி நற்றாயிடம் கூறுவதாக ஒரு பாடலும், செவிலி தோழியிடம் கலங்கியுரைக்கும் இரண்டு பாடலும், பரத்தை பாணனிடமும், தலைமகளிடமும் மனம் வருந்தி கூறியதாக இரண்டு பாடலுமாக மொத்தம் பதினொரு பாடல்கள் நற்றிணையில் உள்ளன. இப்பாக்கள் கூறும் கருத்துகள் அமைந்த சூழல், அப்பாக்களுள் காணலாகும் மெய்ப்பாடுகள் போன்றன இவ்வியலில் விரித்துரைக்கப்பட்டுள்ளன.

ஆய்வில் கண்டறியப்பட்ட முடிவுகள் முடிவுரையில் கொடுக்கப் பட்டுள்ளன. ஆய்விற்குப் பயன்பட்ட நூல்கள் துணைநூற்பட்டியலாக இணைக்கப்பெற்றுள்ளன. மேலும் ஆய்வுத் தொடர்பான தகவல்கள், அட்டவணைகள் பின்னிணைப்பாக இணைக்கப்பட்டுள்ளன.

எட்டுத்தொகையும் பத்துப்பாட்டுமாய் அமைந்து தமிழின் பெருமையை உலகளாவிய நிலையில் அறியச்செய்தன சங்க இலக்கியங்கள். இதன்கண் கூறப்படாத எச்செய்திகளும் இல என்று அறுதியிட்டு உரைக்கலாம். காதல், வீரம் என இருபெரும் பொருள் இதன் பாடுபொருள் எனச் சுட்டப்பட்டாலும், முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்ற மூன்று நிலைகளில் சங்க காலச் சூழலையும், புறப்பொருள் வழி பண்டைச் சமூகத்தையும் கண்முன் நிறுத்தும் சங்க இலக்கியங்கள் தனக்கெனத் தனித்துவம் பெற்றவை. இதன்கண் ஆழ்ந்து நோக்க, நோக்க கிடைக்கும் அரிய கருத்துகள் ஏராளமானவை. அவற்றுள் ஒன்று 'மொழிதல்' பற்றிய சிந்தனையுமாம்.

மொழி என்பது ஆதிகாலத்து மனிதரின் படிப்படியான வளர்ச்சிநிலையின் உச்சமாகும். தொடக்ககாலம் முதல் மொழி, உள உணர்வு வெளிப்பாட்டிற்கு உதவும் பெரிய கருவியாய் நின்றது. இம்மொழியினைப் பயன்படுத்தி, கருத்தினை வெளிப்படுத்துதல், மொழிதல் எனப்பட்டது. தமிழில் உள்ள அனைத்துச் சொற்களும் பொருள் உடைய சொற்களேயாகும். தொல்காப்பியம் இதனை,

'எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே'[1] (தொல்.640)

என்று குறிப்பர். மொழிதல் என்னும் சொல்லும் சொல்லுதல் அல்லது பேசுதல் என்று பொருளுரைப்பர்.

ஒருவர் தன் மனத்தில் தோன்றிய உணர்வுகளைச் சொற்களின் வழியே பிறரும் அறியச் செய்வது மொழிதலாகும். இம்மொழிதல் பலவற்றுக்காக நிகழும். இங்கு ஆய்வுக்குரியது 'கலங்கி மொழிதல்' மட்டுமேயாகும். உணர்வுகள் எனும் பொழுதே இன்ப, துன்ப உணர்வுகள் என்ற இருபெரும் பாகுபாட்டில் அடங்குகின்றன. இன்ப நிலையில் வெளிப்படும் கூற்றுகளைவிட, துன்பநிலையில் வெளிப்படும் கூற்றுக்கள் குறிப்பிடத்தக்கச் சிறப்பிடம் பெற்றுவிடுகின்றன. எனவே

உணர்வு வெளிப்பாடாய் அமையும் அவை தனிச்சிறப்பிடம் பெறுவதாய் அமைந்துவிடுவது குறிப்பிடத்தக்கது. சங்க இலக்கியங்களிலும் ‘கலங்கிமொழியும் கூற்றுகள்’ முக்கியத்துவம் பெற்றுத் திகழ்வதை காணமுடிகின்றது.

சங்க இலக்கியங்களில் அகம் மற்றும் புறப்பாடல்களில் பல்வேறு நிலைகளில் கலங்கிமொழியும் கூற்றுகள் அமைந்துள்ளன.

குறிப்பாக அகப்பாக்களுள் இக் கலங்கி மொழியும் எனும் ஒரு மெய்ப்பாடு குறிப்பிடத்தக்க இடம் பெறுகிறது. சங்கப்பாக்களுள் காணப்படும் இம் மெய்ப்பாடு குறித்தப் பதிவுகள், இவை தொடர்பான கூற்றுகள், இதன் வழி அறியலாகும் செய்திகள் போன்றன ஒரு காலகட்டச் சமூகத்தை அறிய உதவும், சான்றுகளாக நிற்கின்றன. இம்மெய்ப்பாட்டை ஒருகாலம் சார்ந்த கலாச்சார பிரதிபலிப்பு எனலாம். மாறிவரும் காலத்திலும் மாறாதவை அக உணர்வுகள். இவ்வகம் தொடர்பான வெளிப்பாடுகளும் மாறக்கூடாதவை. ஆனால் மாறிவரும் காலச்சூழலில் வரலாற்றில் பதிவுசெய்யப்படவேண்டிய, நம் முன்னோர்களின் பண்பாட்டை, இவ்விலக்கியங்களின் வழி மீட்டெடுக்க வேண்டியது இன்றியமையாததாகும். அந்த வகையில் ‘கலங்கிமொழிதல்’ என்னும் இம்மெய்ப்பாடு தொடர்பான செய்திகளை ‘நற்றிணை’ என்ற அக இலக்கியத்தின் வழி இவ்வாய்வு எடுத்துரைக்கிறது.

தொல்காப்பியம் பொருளதிகாரத்தில் மெய்ப்பாட்டியலில் கற்பு ஒழுக்கத்திற்கான அடையாளங்களாகச் சில மெய்ப்பாடுகள் சுட்டும்போது, ஒருவரையொருவர் கண்களால் கண்டு களித்துக் கருத்தில் கலந்து, மனத்துள் புகுந்து மகிழ்ந்து புதுமுகம் புரிதல் முதலாக தொடங்கி தகுமுறை இறுதியாக நான்கு மெய்ப்பாடுகளை ஆறு நிலைகளாகப் பிரித்துச் சுட்டுவார். அவற்றுள்,

"புறம்செயச் சிதைத்தல் புலம்பித் தோன்றல்

கலங்கி மொழிதல் கையறவு உரைத்தலொடு

விளம்பிய நான்கே ஆறு என மொழிப"[2] (தொல்.மெய்.1208)

எனும் நூற்பாவில், 'வெளியே செய்துகொள்ளும் அலங்காரங்களை நீக்கிக் கொள்ளுதல், சுற்றத்தார் பலரிருந்தும் அவர்களிடையே தனியாளாய் நின்று தவித்தல், என்ன மொழிகிறோம் என்று புரியாது கலக்கமுற்றுத் தடுமாறு மொழிபேசுதல், செயலற்ற நிலையில் இருப்பதைச் சொல்லுதல் ஆகிய மெய்ப்பாட்டின் ஆறாம் பகுதி என உரைக்கையில் 'கலங்கி மொழிதலைச் சுட்டிச் செல்கின்றார்.

இனிமையான சூழல் மாறியநிலையில் தன்நிலை செய்வதறியாச் சூழலில் தனக்குத்தானே தனிமைப்படுத்துதுல், தன்னைத்தானே வெறுத்தல், அதன் காரணமாக புலம்பிப் பேசுதல் நிகழும். இதுவும் ஒரு மெய்ப்பாடே என்கிறார் தொல்காப்பியர். இன்றைய உளவியலாளர்கள் இதனைத் 'தன்வதைப்பு' எனச் சுட்டுகின்றனர்.

இந்தப் புலம்பியழும் மெய்ப்பாடு கைக்கிளைக்கும் உரியது என்பதனை,

'அவையும் உளவே அவை அலங்கடையே'[3] (தொல்.மெய்.1211)

என்கின்றார்.

ஐந்திணை ஒழுக்கத்தில் சேராத ஒருதலைக் காதலாய் சுட்டப்படும் கைக்கிளை ஒழுக்கத்தின் போதும் இப்புலம்புதல் தோன்றும் என்பது இங்கு சுட்டப்படுகின்றது. மேலும்,

'இன்பத்தை வெறுத்தல், துன்பத்துப் புலம்பல்

..............................................................

நலத்தக நாடின் கலக்கமும் அதுவே'[4] (தொல்.மெய்.1212)

எனப் பொருந்தாக் காமமாகிய பெருந்திணை ஒழுக்க மெய்ப்பாடுகள் பற்றிச் சுட்டும்போதும், 'பூவும் காந்தும் அணிந்து மகிழ்தல்,

துடிப்பாடிக்களைத்தல் ஆகிய இன்ப நுகர்வுகளை வெறுத்தல், பிரிவுத்துன்பத்தைத் தாங்கிக் கொள்ள மாட்டாது அழுது புலம்புதல் மற்றும் அல்லாதன கூறக் கேட்டால் மனம் கலங்கி அவை பொய்யாகி நல்லதே நடக்கவேண்டும் என்று வேண்டுதலும் 'மெய்ப்பாட்டின் அடையாளமே' எனச் சுட்டுகிறார்.

இவற்றிலிருந்து ஐவகை ஒழுக்கங்களிலும், களவிலும், கற்பிலும், கைக்கிளை, பெருந்திணை என்னும் அனைத்து நிலைகளிலும் துன்பத்தின் காரணமாகக் கலங்கி மொழிதல் நிகழும் என்பதும், இது மக்களின் வாழ்வியலோடு இரண்டறக் கலந்திருந்தமையும் புலப்படுகிறது. மேலும், இப்புலம்பும் மொழிக்கு முன்னதாக தன் இன்பங்களை வெறுத்து, தன்னை வெறுத்து, செயலற்ற நிலையில் கூற்றுக்களை வெளிப்படுதலும் அறியப்படுகிறது.

உளவியலார் கருத்தின்படி இம்மெய்ப்பாட்டின் வெளிப்பாட்டால் மன அமைதி தோன்றும் என்பது குறிக்கத்தக்கது. இத்தகைய மன அமைதியை உருவாக்கும் மெய்ப்பாட்டிற்கு பண்டைய இலக்கியங்களும், இலக்கணங்களும் முதன்மை அளித்துப் பதிவு செய்திருப்பது, சங்ககால மக்களின் உளவியல் அறிவை எடுத்துக்காட்டுவனவாய் உள்ளன. குறிப்பாக அகப்பாக்களில் தானே கூற்று நிகழ்த்துவது, நெஞ்சிற்குரைப்பது, உயிரினங்கள் மட்டுமல்லாது உயிரற்றப் பொருள்களிடம் கூற்று நிகழ்த்துவது, உடனிருப்போரிடம் எடுத்துரைப்பது எனப் பலநிலைகளில் உள்ள கூற்றுக்களுக்கு முக்கியத்துவம் அளித்திருப்பதைக் காணமுடிகின்றது.

தொல்காப்பியர், உள்ளுறை உவமம் பற்றிக் கூறுகையில்,

'இனிதுறு கிளவியும், துனிவுறு கிளவியும்
உவம மருங்கில் தோன்றும் என்ப'[5] (தொல்.உவமம்.1247)

என்கிறார்.

இன்பத்திலும், துன்பத்திலும் உள்ளுறை உவமம் தோன்றும் சொல் வெளிப்படும் என்கிறார். இது வெளிப்படையாகவோ, மறைமுகமாகவோ தன் உணர்வை வெளிப்படுத்துவதைச் சுட்டுகிறது. அதாவது இன்பமான சூழலிலும், துன்பநிலையிலும் கூற்றுரைக்கும் போது அச்சொற்களில் உள்ளுறை உவமம் இடம்பெறும் என்கிறார். இங்கு துன்பநிலையில் கலங்கி மொழியும் கூற்று நிகழ்வது சுட்டப்படுகிறது. அப்போது தன்நிலை பிறர் அறிய உள்ளுறை உவமத்தோடு அம் மொழிதல் நடைபெறும் என்பது அறியப்படுகிறது.

**கலங்கிமொழிதல் - விளக்கம்**

காதல் உணர்வுகளைச் சங்க அகப்பாடல்கள் பிரதிபலிக்கின்றன. இச்சங்க அகப்பாடல்கள், தொல்காப்பியர் கூறும் மெய்ப்பாட்டியல் உணர்ச்சி கோட்பாடுகளோடும் ஒப்பு நோக்கத்தக்கன. தொல்காப்பியரின் உணர்ச்சிக் கொள்கை, வடமொழியாளர்கள் உள்ளப்போராட்டம் ஆகியவற்றால் எழும் கலக்கமொழிகள் குறித்து கலைக்களஞ்சியங்கள் தரும் பொருள் இவற்றில் விளக்கப்படுகின்றன.

“மெய்ப்பாட்டியலில் மனித உணர்வுகளை உடலியல் மற்றும் உளவியல் சார்ந்து விளங்குகின்றன.”[6]

முத்துவீரியத்தில் ‘மெலிதல்’ என்னும் துறை தலைமகனை நினைத்து தலைவி வருந்தி உடல்மெலிதல் என்னும் பொருளிலும், தன்னைவிட்டு ஒருபோதும் நீங்காத நாணம், மெழுகு போல நீங்காத் தலைவி, பிரிவாற்றாது வருந்துதல் என்ற பொருளில் வருகின்றன என்று கா.சுந்தரபாண்டியன் விளக்குகின்றார்.”[7]

பெருஞ்சொல்லகராதி “அனங்குதல் - வருத்துதல், அனங்கு - வருத்தம், அதிர்த்தல் - கலங்குதல், அலவுதல் - வருந்துதல், அலவு - மனத்தடுமாற்றம், வருத்தம்”[8] என்று விளங்குகின்றது.

*நர்மதாவின் தமிழ்மொழி அகராதி குறிப்பிடுகையில், "கலங்கல்- அஞ்சல், அழுதல், கலங்குதல், துன்பமுறல், கண்ணீர் மல்குதல், வருந்துதல், துயரமடைதல்"[9] என்று விளங்குகின்றது.*

*சங்க இலக்கிய பொருட்களஞ்சியம் மனக்கலக்கம் என்பதை விளக்குகையில், "தலைவன் தலைவியின் முன் கையைப்பற்றி துமர்தர நடறி நன்மனம் விரைந்து அயர்வோம் இடையேயுள்ள சிலநாள் 'கலங்கல்' மனக்கலகம் வேண்டா என்று நன்மொழிக் கூறிச் சென்றாள்"[10] என்று நற்றிணை **153**வது பாடல் சான்றாக விளக்குகிறது.*

*தொல்காப்பியம் 'புலம்பு' என்பதை விளக்கும் போது "புலம்பே தனிமை" புலம்பு என்னும் உரிச்சொல் 'தனிமை' வருத்தம் குறித்து நிற்கும் என்று விளக்குகின்றது. (எ.கா.) புலிப்பல் கோத்த புலம்பு மணித்தாலி"[11] (அகம்.7) என்று சான்று கூறுகின்றது.*

*இத்தகைய 'கலங்கி மொழிதலாகிய' மெய்ப்பாடு, தலைவன், தலைவி, தோழி, செவிலி, நற்றாய், கண்டோர் எனக் கூற்றுக்களாய் அனைவரிடத்தும் வெளிப்படுவதை நற்றிணை கொண்டு அறியமுடிகின்றது.*

*நற்றிணைக் கூற்றுக்களைக் காணும் முன் தொல்காப்பியர் கலங்கி மொழியும் நிலைக்களன்களாகச் சுட்டுவனவற்றைக் கூறுதல் இன்றியமையாததாகும்.*

*"பார்ப்பன் பாங்கன் தோழி செவிலி*
*சீர்த்தகு சிறப்பின் கிழவன் கிழத்தியொடு*
*அளவு இயல் மரபின் அறுவகை யோடும்*
*களவின் கிளவிக்கு உரியர் என்ப"[12] (தொல்.செய்.**1436**)*

*எனத் தொல்காப்பியர் கூற்று நிகழ்த்துவோர் பற்றிக் குறிப்பிடுகிறார்.*

*பார்ப்பன், பாங்கன், தோழி, செவிலி, தலைவன், தலைவி ஆகிய அறுவகையோரும் களவில் கூற்று நிகழ்த்துதற்குரியவர் எனவும்,*

“பாணன் கூத்தன் விறலி பரத்தை
யாணம் சான்ற அறிவர் கண்டோர்
பேணுதகு சிறப்பின் பார்ப்பன் முதலா
முன்னுறக் கிளந்த கிளவியொடு தொகைஇத்
தொன்நெறி மரபில் கற்பிற்கு உரியர்”[13] (தொல்.செய்.1437)

என்னும் தொல்காப்பியம் சுட்டிச் செல்கின்றது.

பார்ப்பன், பாணன், கூத்தன், விறலி, பரத்தை, தகைமை சான்ற பெரியோர் ஆகியோர் கற்பில் கூற்று நிகழ்த்துவதற்குரியவர் என்பதனையும் சுட்டுகிறார். இதனைப் போன்று மற்றவர்களுக்குக் கூற்று நிகழுமிடங்களையும் கூறிச் செல்லும் தொல்காப்பியர், அக் கூற்றுக்களைக் கேட்போர் பற்றியும் நான்கு நூற்பாக்களில் சுட்டிச் செல்கிறார். குறிப்பாக,

“ஞாயிறு திங்கள் அறிவே நாணே
கடலே கானலே விலங்கே மரனே
புலம்புறு பொழுதே புள்ளே நெஞ்சே
அகையல பிறவும் நுவலிய நெறியால்
சொல்லுந போலவும் கேட்குந போலவும்
சொல்லியாங்கு அமையும் என்மனார் புலவர்”[14] (தொல்.செய்.1447)

என்பது அந்நூற்பாவாகும்.

ஞாயிறு, திங்கள், அறிவு, நாணும், கடல், விலங்கு, மரம், புலம்புறு மாலைப் பொழுது, பறவை போன்றன கேடயச் சொல்வதும் உண்டு என்கிறார். குறிப்பாக கலங்கிமொழிதலுக்குரியதாக, மாலைப்பொழுது சுட்டுவது நோக்கத்தக்கது. அகப்பாக்களுக்கும் கலங்கி மொழிதலுக்கும் தொடர்புப்படுத்தப் படுவதை இப்பாக்களில் காணமுடிகின்றது.

இவ்வாறு மொழிதலுக்கு குறிப்பாகக் கலங்கி மொழிதலுக்கு அளிக்கப்படும் இன்றியமையாமையை முதல் இலக்கணமாகக் கருதப்படும் தொல்காப்பியத்தில் காணமுடிகின்றன.

இலக்கியங்களுக்காக வகுக்கப்படுவது இலக்கணம். அந்த அடிப்படையில், சங்க இலக்கியத்தில் குறிப்பாக நற்றிணையில் உளப்பாங்கில் காணப்படும் கலங்கிமொழியும் கூற்றுக்களையும், அதன் வழியாக அறியப்படும் அக்காலச் சூழலையும், பண்பாட்டையும், அக்கூற்று நிகழ்த்துவார் குறித்த இலக்கண வகைப்பாடு, அதன்படி அமைந்த இலக்கியப் பாக்களின் முறைமை, அக்கூற்றுகள் உணர்த்தும் உளவியல் கருத்துகள் போன்றன பின்வரும் இயல்களில் கூற்று அடிப்படையில் விரித்துரைக்கப்படுகின்றன.

**பொருளதிகாரம்**

அகத்திணையியலில் கலங்கிமொழிதல் பற்றிய பதிவுகள் தனது பொருளதிகாரத்தில் தலைவன் கலங்குதலைப் பற்றி கூறுகையில் "கொண்டு தலைக்கழிதலும் பிரிந்து அவண் இரங்கலும் உண்டு' என மொழிப 'ஓர் இடத்தான' தலைவன் தலைவியைத் தன்னுடன் உடன் கொண்டு செல்லுதல் உடன்போக்கு என்றும் பெயர். பிரிந்த தலைவனும் தலைவியும் பிரிவை எண்ண வருந்துதல் இறங்கல் எனப்படும். இவ்விரண்டும் ஓரிடத்து எப்போதாவது நிகழும்"[15] என்று எடுத்துரைக்கிறார. மேலும், நற்றாய் கலங்குதல் பற்றி தொல்காப்பியர் குறிப்பிடுகையில்,

"தன்னும் அவனும் அவளும் சுட்டி
மன்னும் நிமித்தம், மொழிப் பொருள் - தெய்வம்
.....................................................
தோழி தேஎத்தும் கண்டோர் பாங்கினும்
போகிய திறத்து நற்றாய் புலம்பலும்
ஆகிய கிளவியும் அவ்வழி உரிய"[16] (தொல்.பொ.அகத்.985)

என்று தொல்காப்பியர் கூறிச் செல்கிறார்.

உடன்போக்கில் தலைவன் தலைவியை அழைத்துச் சென்றபின்னர், நற்றாய் தன்நிலை பற்றியும், தலைவன் நிலை பற்றியும், தலைவி நிலை பற்றியும் குறிப்பிட்டு, நிமித்தம் பார்த்தல், விரிச்சி கேட்டல், தெய்வத்தை வழிபடல், அவர்க்கு ஏற்படுகின்ற நன்மை தீமை பற்றிச் சிந்தித்தலால் ஏற்படும் அச்சம் அவரைச் சார்தல் போன்றவைகளை மூன்று காலங்கள் பற்றியும் விளக்கித் தோழியிடமும், கண்டோரிடமும் நற்றாய் கூற்றும், புலம்புதலும் நிகழும் என்கிறார்.

தொல்காப்பியர் அகத்திணையியலில் தோழிக் கூற்று நிகழுமிடங்களைச் சுட்டுகையில்,

- ♦ வருகின்ற துன்பநிலையை எடுத்துக் கூறும்போதும்,
- ♦ தலைவனைப் பொருள்பிரிவு போன்றவற்றிற்கு விடுக்கும் போதும்,
- ♦ உடன்போக்கில் இருவரையும் அனுப்பும் போது வழியில் ஏற்படும் துன்பங்களைப் பற்றிப் பேசும்போதும்,
- ♦ நற்றாய், செவிலித்தாய், கண்டோர் கூறிய வாய்மை பொய்மையான செய்திகளைக் கேட்டு அவர்கள் உற்ற துயரை நீக்குமிடத்தும்,
- ♦ பிரிவு காரணமாக நோய் மிகப்பெருகி வருந்தி இருக்கும் தலைவியை, போனதை மறந்துவிட்டு கடந்ததைக் கூறி தலைவன் அன்பை வற்புறுத்தும் போதும்,

இவ்வாறு பலநிலைகளில் தோழி கூற்றுக்கள் அமையும் என்கிறார்.

'தலைவரும் விழும்நிலை எடுத்து உரைப்பினும்
போக்கற் கண்ணும், விடுத்தற் கண்ணும்
நித்தலின் வந்ததம்உறு விழுமமும்
வாய்மையும் பொய்ம்மையும் கண்டோர் சுட்டிக்
..................................................
என்று இவை எல்லாம், இயல்புற நாடின்
என்றித் தோன்றும் தோழி மேன'[17] (தொல்.பொ.988)

எனத் தோழி கலங்கி மொழியும் இடங்களைச் சுட்டிச் செல்கின்றார்.

இதனைப்போன்று அகத்திணையியலில் தலைமகளுக்குரிய கூற்று நிகழுமிடங்களைக் கூறுகையுல்,

- ♦ சுற்றத்தார் வரைவு உடன்படாத இடத்தும்,
- ♦ உடன்போக்கிற்குப் பருவம் பொருந்தாத இடத்தும்
- ♦ காட்டுவழிப் பாதையிலும்
- ♦ காட்டுவழி இடைப்பாதையில் தலைவியின் தமர் எய்தி அவளைத் திரும்ப அழைத்துச் செல்லுமிடத்துத் தலைவி கலங்கி துன்புறும்போது எழும் அலர் காரணமாகவும்,
- ♦ பொருள் ஈட்டச் செல்லப் பிரியும் காலத்தும்
- ♦ புகழையும் பெருமையையும் எடுத்து வற்புறுத்தித் தூதுக்காகப் பிரியுங்காலத்தும்
- ♦ போர்ப் பாசறையில் தனித்துப் புலம்பும் போதும்
- ♦ காத்தல் கடமைக்கு பிரியும் போதும்
- ♦ பரத்தையர் பிரிவால் ஏற்பட்ட ஊடலை நீக்கத் தலைவியை இரக்கும் போதும், தெளிவுபடுத்தும்போதும் ஆகிய இருவகை நிலையிலும் தலைவன் கூற்றுக்கள் நிகழுகின்றன.

**களவியலில் கலங்கி மொழிதல் பற்றிய பதிவுகள்**

அகத்திணையியலில் கலங்கி மொழியக்கூடிய இடங்களைச் சுட்டியத் தொல்காப்பியர், அடுத்ததாகக் களவியலில் இக்கூற்றுகள் குறிதது்ப் பதிவு செய்துள்ளார். களவியலில் தலைவன் கூற்றுப பற்றிக் கூறுகையில்,

"ஒன்றாத் தமிரினும் பருவத்தும் சுரத்தும்
ஒன்றிய மொழியொடு வலிப்பினும விடும்பினும
இடைச்சுர மருங்கின் அவள் தமர் எய்திக்
..................................................
பாசறைப் புலம்பலும், முடிந்த காலத்துப்

*பாகனொடு விரும்பிய வினைத்திற வகையினும்*

*..................................................*

*இரத்தலும் தெளித்தலும் என இருவகையொடு*

*உரைத்திற நாட்டம் - கிழவோன் மேன”[18] (தொல்.பொருள்.990)*

*என்று எடுத்துரைக்கிறார்.*

*களவியலில் தலைவன் கூற்று நிகழுமிடங்களைக் கூறுகையுல்,*

- ♦ *இடையூற்றை மிகுதியாக நினைந்து இரங்குதல்*
- ♦ *தன் தீராத காதல் தன்மையைக் கூறல்*
- ♦ *அவள் பிரிந்த வழிக் கலங்கலும்*
- ♦ *விரும்பிய வாயிலாகிய தோழியை இரந்து வலியுறுத்தும் போது*
- ♦ *நிறைவுற்று அமையாது இரத்தலும்*
- ♦ *களவு நீட்டித்தலால், தோழி இவனைக் குறை கூறும் போதும்*
- ♦ *தோழி இவன் குறையை நீக்காத வழியும்*
- ♦ *மடலேறுவேன் என்று கூறும் போது கலங்கி மொழிவான் என எடுத்துரைக்கிறார்.*

*இதனைப்போன்று தலைவிக்குக் கூற்று நிகழும் இடங்களைச் சுட்டும் போது,*

*‘இருவகைக்குறி பிழைப்பு ஆகிய இடத்தும்*

*கணா வகையின் பொழுது நனி இகப்பினும்*

*..................................................*

*காடசி ஆசையின் களம் புக்குங் கலங்கி*

*வேட்கையின் மயங்கிக் கையறு பொழுதினும்*

*..................................................*

*வரைவு உடன்படுதலும் ஆங்கு அதன்*

*புறத்துப் புரைபட வந்த மறுத்தலொடு தொகைஇ*

*கிழவோள் மேன என்மனார் புலவர்’[19] (தொல்.களவு.1051)*

மேலும் தலைவிக்கு நிகழுங் கூற்று பற்றி எடுத்துக்காட்டுகையில்,

- காணாத போது பொழுது மிகுதி கழியுமிடத்தும்
- பொருள் முயற்சிக்காக ஏற்படும் பிரிவின் கண்ணும்
- பிறருக்கு மணம் செய்ய நினைந்தபோது அதை மறுக்கும் போதும், கலங்கி மொழிதல் நிகழும் என்கிறார்.

‘மறைந்து அவற் கான்டல, தற்காட்டுறுதல

..............................................

கைப்பட்டுக் கலங்கினும் நானுமிகவரினும்

இட்டுப்பிரிவு இரங்கனும், அருமை செய்து அறிபதும்

..............................................

தன்வயின் உரிமையும், அவன் வயின் பரத்தையும்

அன்னவும் உளவே - ஓர் இடத்தான’[20] (தொல்.களவு.1055)

என்பது அந் நூற்பாவாகும். மேலும் பல இடங்களில்,

- அவன் கைபடலால் தான் கலங்குதல்
- காரணங்களை கூறிப் பிரியும் போது வருந்துதல்
- நெட்டு உயிர்த்து வருந்துதல்
- அச்ச மிக்க இடத்தும்
- பிரிந்த இடத்தும் கலங்கல்
- வரும் தொழிற்குரிய துன்பங்களை வாயிலாகிய தோழி கூறும் போதும்
- தோழி தான் கூறியதை ஏற்றுக் கொள்ளாத போதும்
- தன் உயிர் போகும்படி பிற திருமண ஏற்பாட்டை மாற்றுதற்காகவும்
- தலைவன் மடலேறுவேன் எனக் கூறி பொய்மைக் கண்ணும்,
- செயலற்ற தோழி தலைவியின் கண்ணீரைத் துடைக்கும் போதும்
- வெறியாட்டிடத்து அச்சமுற்ற போதும்
- தன் களவு பிறருக்கு தெரிந்த இடத்தும்
- தலைவன் பிழையில்லை தன் பிழையே என்று கருதிய இடத்தும்.

- காலமும் வழியும் தந்த இடரால் துன்பம் வந்தபோது மனஅழிவு ஏற்பட்ட போதும்

கூற்று நிகழும் என்கிறார்.

- உலக வழக்கப்படி தலைவியை மணம் செய்து கொள்க என்று கூறும்போதும்
- அஞ்சி அச்சுறுத்தலும்
- பிரிவு வேண்டினும்
- தலைவியைப் பாதுகாத்து கொள்க எனக் கூறுமிடத்தும்
- தலைவன் வரும் வழிக்கண் ஏற்படும் தீமையால் ஏற்படும் கலக்கத்தினும்
- காவல் கடுமையானதால் செயலற்று இடத்தும்
- வரைதல் வேண்டும் பொழுதும்
- மணத்திற்கு உடன்பட்டபின் தலைவனை விரைவு படுத்தக் கோரும் போதும்
- தலைவியைக் காத்திருக்குமாறு வற்புறுத்துவது

போன்ற நிலையிலும் கலங்கி மொழியப்படும் எனச் சுட்டும் தொல்காப்பியர்.

செவிலி கலங்கி மொழியும் இடங்களாகச் சிலவற்றைச் சுட்டுகிறார்.

- களவு வெளிப்பட்ட போதும்
- தலைவியைப் பிரிந்த காலத்தும்
- மகள் நெஞ்சு திண்மையான போதும்

♦ தலைவி, தலைவனின் குடிப் பெருமையினை நினைக்கும் போதும் எனத் தலைவிக்குக் கூற்று நிகழும் இடங்களை தொலகாப்பியர் வரையறுத்துள்ளார்.

கற்பியலில் கலங்கி மொழிதல் பற்றிய பதிவுகள்,

- அஞ்சும் வண்ணம் தலைமகளிடத்து வந்து உரிமைக் கண்ணும்

- களவில் அஞ்சிய காலத்து வருந்தாதே, அஞ்சாதே என்று களவுக் காலத்தை கூறி தலைவியிடம் குறித்த காலத்து வராத செய்திகளைக் கூறும் போதும்
- நெருங்கமுடியாத அளவு ஊடல் மிகுத்தோளை அவளுக்கு நெருங்கிய பெண்டீர் வழி ஊடலை நீக்க முயன்ற போதும்
- பிரிவுக் காரணமாக வருந்திய இருவரை அவர் வருத்தத்தினை நீக்கிய இடத்தும்
- மிகுந்த பிரிவின் அஞ்சிய வருத்தத்தின் கண்ணும்
- பொருளைவிட அன்பின் வலிமையை உணர்ந்த இடத்தும்
- பிரிந்தவிடத்து அவள் அச்சம் கருதியும்
- பிரியேன் என்று கூறிப் பிரிந்து பிழை செய்த இடத்தும்
- வேற்று நாட்டிற்குச் செல்லும்போது ஏற்படும் வருத்தத்தின் கண்ணும்
- சென்ற இடத்து ஏற்பட்ட துன்பத்தினை விளக்கித் தலைவியிடம் கூறும்போதும்
- பாணன் முதலியோர் கூற்றுக்கு எதிர் பேசும் போதும் கற்புக்காலத்துத் தலைவனுக்குக் கூற்று நிகழும் எனக் குறிப்பிடுகிறது. இதனைப்போல
- தலைவனைத் தலைவி பிரிந்த தனிமை பெரிதாதலால் மனச் சுழற்சி பொருந்திய அன்பின் மிகுதிக் கண்ணும்
- இன்பமும் துன்பமும் தன்பால் தோன்றுமிடத்தும்
- புதல்வன் பிறந்தபோது நெய்யணி விழாவில் தலைவியை விரும்பிய தலைவனை நெஞ்சு புண்படுமாறு செய்து நெருக்கத்தை நீக்கிய இளிவருநிலையிலும்
- புற ஒழுக்கத்தில் தங்கிய தலைவனை நீ உன் அன்பை என் தங்கையராகிய பரத்தையர்க்குக் கூறுக என இரந்து வேண்டுதற்கண்ணும்
- அவ்விடத்தே தோன்றிய தலைவன் இல்லறம் புரியும் எண்ணத்துடன் அவனிடம் ஊடலைப் போக்க விரும்பிய இடத்தும்

- தந்தையைப் போன்றவன் மகன் என மகனைப் பழித்துக் கூறுவது போன்று கூறும்போதும்
- தன்னிடமுள்ள அன்பின் சிறப்பையும், அவனிடமுள்ள பிரிவின் நிலையையும் நினைந்து, முன்பு அவன் சூள் உரைத்ததை எடுத்த போதும்
- தலைவன் புறத்தொழுக்கத்தின்கண், தோழி கூறியவற்றை எல்லாம் கேட்டுத் தன் கற்பினின்றும் திரியாது சினந்தும், மகிழ்ந்தும், பரிந்தும் கூறும் நிலைகளிலும்
- தலைவன் பிரிந்து சென்றபோது தோழியுள்ளிட்ட வாயில்களைத் தலைவனிடம் தூதாகப் போகவிட்ட காலத்தும், கற்புக்காலத்துத் தலைவி கலங்கி கூற்று நிகழ்த்துவாள் எனக் கூறப்பட்டுள்ளது.

தோழிக்குரிய கூற்றாகக் கற்பியலில்,

- களவுக் காலத்து தாம் உற்ற இடையூறுகளை நீக்கியத் திறத்தைச் சொல்லும் போதும்
- புகழுடைய பெரும் பொருளாகிய இல்லறத்தில், தலைவன் சிலவற்றை மறந்த போதும்
- புறத்தொழுக்கம் உடைய கணவனை, தலைவி மனம் வருந்திக் கூறியபோது அவளை ஊடல் போக்க வேண்டிய இடத்தும்
- பரத்தையர் வழிச் சென்று தவறிச் சென்றுவந்த கணவனை நெருங்கி, தலைவியைச் சரிபடுத்தி அவள் அன்பிற்குரியவனாக ஆக்கிக் கொடுத்தற் கண்ணும்.
- பரத்தைப் பிரிவு விளையாட்டில் விரும்பிய அன்பினையும் புதல்வன் வழி ஊடல் தீர்க்க முயன்ற போது தலைவி ஏற்காதபோதும்
- தலைவன் சூள் உரை பிழைத்ததால் ஏற்படும் துன்பத்தை எண்ணித் தலைவி வருந்திய போதும்

♦ பெரியோர் ஒழுக்கம் பெரிது எனச் சொல்லித் தலைவனைத் திருத்தும் இடத்தும்

♦ ஊடல் உற்ற தலைவியைத் தலைவன் சார்பாக நின்று சிறிது சினந்து சரிப்படுத்தும் தகுதிக் கண்ணும்

♦ களவுக் காலத்துப் பெருமை காட்டிக் கற்புக் காலத்து எளிமை காட்டி இரங்குமிடத்தும்

♦ பாணர், கூத்தர், விறலியர் இவர் கூறிய குறைகளை நீக்கும் போதும்

♦ பரத்தையிற் பிரிந்த தலைவனைக் கண்டித்து மறுபடியும் இல்லற வாழ்வில் ஒழுகுமாறு செய்யும் போதும்

♦ அவன் பிரியும் காலத்து அதை எதிர்த்து நின்று விலக்கிய தன்மையும்

**காமக் கிழத்தியருக்கு**

♦ தலைவன் பிறரொடும் சேர்தலை அறிந்து புலக்குமிடத்தும்

♦ களவொழுக்கம் ஒழுகி மணந்து கொண்ட மனைவி செய்கின்ற செயல்களால் தம் பொறுமையைக் கடந்து துன்புறும் போதும்

**தலைவனுக்கு**

பின்பு மக்கட் பேறாகிய பெரும் பொருளைக் கருதிச் செய்த திருமணத்தால், தொன்முறை மனைவியாகிய தலைவி எதிர்ப்பட்ட நிலையிலும், ஒளி பொருந்திய அணிகலன்களை கொண்டு புகும் போதும் பரத்தையர் ஒழுகல் போன்ற கடந்த கால நிகழ்ச்சிகளை நினைத்த தலைவன் உள்ளம் கலங்கலும் உண்டு.

**தலைவிக்கு**

கற்பு வழிப்பட்ட தலைவி (பரத்தையைப் புகழ்ந்து) பேசினாலும், தன் உள்ளத்தில் ஊடல் குறிப்பு உண்டு.

இவ்வாறு அகத்திணையியலில் களவியல், கற்பியல், மாந்தர்களுக்கு கலங்கிமொழியும் கூற்று நிகழுமிடங்களைச் சுட்டும் தொல்காப்பியர் மெய்ப்பாட்டியலில் துன்பம், அழுகைக்கான காரணங்களைச் சுட்டும்போது அவலத்தின் தொடர்ச்சியான கலங்கிமொழிதல் எனும் மெய்ப்பாடு குறித்தும் எடுத்துரைக்கிறார். அழுகை எனும் மெய்ப்பாட்டின் நிலைக்களன்கள் பற்றிக் கூறுகையில் இழிவு, இழப்பு, தளர்ச்சி, வறுமை, அழிவில்லாத கொள்கை நான்கால் அழுகை ஏற்படும் என்கிறார்.

இளிவரல் எனும் மெய்ப்பாடு பற்றிக் கூறுகையில் முதுமை, நோய், துன்பம், எளிமை இவற்றால் இளிவரலாகிய இழிவு ஏற்படும் என்கிறார்.

**பார்ப்பார் கூற்று**

தலைவனது உள்ளக் குறிப்பினைத் தலைவிக்கு கூறுதலும்,

**கூத்தருக்கு**

தலைவன், தலைவியர் ஊடலைத் தணிக்கும்போதும்,

கற்பியலில் களவுக் காலத்துப் பல துன்பங்களுக்கிடையிலும் ஏனைய பிரிவுக் காலங்களிலும், தலைவியை வற்புறுத்தி அல்லது சொல்லுதல் இல்லை எனச் சுட்டும் தொல்காப்பியர் இக்கூற்றுகளுக்கு உரியவர்களையும், கேட்போர்களையும் செய்யுளியலில் விரித்துரைக்கிறார்.

இவ்வாறு இன்பமும், துன்பமும் கலந்த மக்களின் வாழ்வில் இரண்டறக் கலந்த துன்பநிலை குறித்தும், அத்துன்பச் சூழலில் வெளிப்படும் கூற்றுகள் குறித்தும், அக்கூற்று நிகழ்த்துவோர் குறித்தும் தொல்காப்பியத்தின் வழி அறியமுடிகின்றது. இலக்கியங்களுக்கான வரையறைகளைச் சுட்டும் தொல்காப்பியம் அக்கால அகவாழ்வுகளையும் இதன் வழி பதிவுசெய்துள்ளமை குறிப்பிடத்தக்கது. உளவியல் நோக்கில்

ஆராயப்படவேண்டிய இத்தகைய இன்ப, துன்பச் சூழல் கூற்றுக்களில் துன்பியலில் வெளிப்படும் 'கலங்கி மொழிதல்' என்பது பண்டைக்கால மக்களின் வாழ்வியலில் எவ்வாறு பின்னிப் பிணைந்திருந்தது என்பது குறித்துப் பின்வரும் இயல்களில் விரித்துரைக்கப்படுகிறது.

**நற்றிணை**

இன்றுள்ள தமிழ் நூல்களில தொல்காப்பியத்திற்கு அடுத்தபடியாகத் தொன்மை சார்ந்த நூல்கள் சங்க இலக்கியங்களாகும். பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும் சங்க இலக்கியங்கள் என்பது சான்றோர் கருத்தாகம். எட்டுத்தொகை நூல்கள் ஒவ்வொன்றும் பழந்தமிழகத்தின் பல்வேறு பகுதியில் பல்வேறு காலக்கட்டத்தில் வாழ்ந்த பல்வேறு புலவர்களால் பாடப்பெற்ற தனிப்பாடல்களின் தொகுப்பாகும்.

எட்டுத்தொகை நூல்களுள் அகப்பொருள் சார்ந்த நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, நெடுந்தொகை எனப்படும் அகநானூறு ஆகிய நான்கும் அடிவரையறை கருதிக் கொடுக்கப்பெற்றவை.

இவற்றுள் குறுந்தொகைப் பாடல்களின் அளவுக்கும் நெடுந்தொகைப் பாடல்களின் அளவுக்கும் இடைப்பட்ட அளவுடைய பாடல்களைக் கொண்டது நற்றிணையாகும்.

இந்நூலில் உள்ள பாடல்கள் ஒன்பது அடிச் சிற்றெல்லையும், 12 அடிப் பேரெல்லையும் உடையவை, நற்றிணை நூனூறு என்றும் இந்நூல் கூறப்படும். இந்நூலில் பாடல்களைப் பாடிய புலவர்கள் 175 என்பர். ஆனால் 192 புலவர்களில் பெயர்கள் இப்போது காணப்படுகின்றன. இதனைத் தொகுத்தவர் யார் என்ற பெயர் தெரியவில்லை. தொகுப்பித்தவர் பன்னாடு தந்த பாண்டியன் மாறன் வழுதி ஆவர். இவர் பாடிய பாடல்கள் இரண்டு (97, 301) இத்தொகை நூலில்

*காணப்படுகின்றன. இந்நூலுக்குப் பின்னத்தூர் அ.நாராயணசாமி ஐயர் உரை வரைந்துள்ளார்.*

*சங்க இலக்கிய நூல்களில் குறிப்பாக எட்டுத்தொகை நூல்களில் நற்றிணை முதலாவதாக கூறப்பட்டுள்ளது. நற்றிணையில் சிறப்பு ஆகும். இப்பாடல் வருமாறு,*

*"நற்றிணை நல்ல குறுநுந்தொகை ஐங்குநூறு*
*ஒத்த பதிற்றுப்பத்து ஓங்கு பரிபாடல்*
*கற்றறிந்தோர் ஏத்தும் கலியோடு அகம் புறம் என்று*
*இத்திறத்த எட்டுத்தொகை"*

*திணை என்பது ஒழுக்கத்தை குறிக்கும் நற்றிணை என்பது பண்டைத் தமிழர்கள் போற்றி வாழ்ந்த நல்ல ஒழுக்க நெறியைப் படம்பிடித்துக் காட்டுவதாகும், நற்றிணையில் பாடல்கள் வாழ்க்கையிலும் காதல் நெறியிலும் ஒழுக்க நெறியைச் சாற்றும் தன்மையாது.*

*இத்தகைய தனிச்சிப்புகள் நிரம்பிய நற்றிணை பண்டைக்கால மக்களின் பழக்கவழக்க, பண்பாட்டு மரபுகளையும், அவர்தம் ஒழுக்கலாறுகளையும் எடுத்தியம்பும் இலக்கியமாகும். ஆதலால் உளவியல் அடிப்படையில் நோக்கத்தக்க பொருத்தமான இலக்கியம் நற்றிணை என்ற அடிப்படையில் இவ்விலக்கியம் நன்கு ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டுள்ளது.*

*நற்றிணை அகப்பாக்கள் தனிச்சிறப்புடையன. குறிப்பாக இரவுக்குறி வேண்டிச் சென்ற தலைவன் தன்னை உடன்படுத்துமாறு யாம் வருந்துகின்றோம் என்று தலைவியிடத்து ஒருவர் சென்று கூறினால் யாரோ என்று எண்ணாது, யான் வந்துள்ளேன் என மகிழ்ந்து, களிப்பின் மயங்குவாள் அவ்வாறு கூறுவோரை நான் பெறவில்லையே என்று தலைவியைக் காணாத நிலை (நற்.6) தனது வருத்தத்தை தன் நெஞ்சிடம்*

சொல்லிப் புலம்புகிறாள். பரணர் இதனை,

"நீர் வளர் ஆம்பல் தூம்புடைத்திரள் கால்
நார் உரித்தன்ன மதன் இல் மாமை
குவளை அன்ன ஏந்து எழில் மழைக் கண்
றிதலை அல்குல் பெருந்தோள் குறுமகட்கு
எய்தச் சென்று செப்புனர்ப் பெறினே
இவர் யார்? என்குவள அல்லள் முனாஅது
..........................................................
..........................................................
இரும்பல் ஒலிவரும் கூந்தல்
பெரும் பேதுருவள், யாம் வந்தனம் எனவே"[15] (நற்.6)

என்னும் நற்றிணைப் பாடலால் உணர்த்துகின்றார்.

ஒத்த அன்புடைத் தலைவனும், தலைவியும் கொண்ட அன்பு வாழ்வும், இருவர் கொண்ட காதலும் இங்கு உணர்த்தப்படுகின்றன. தன்மீது தீராக் காதல் கொண்ட தலைவி தற்போது தன்னுடன் சில்லாத நிலை வந்ததே என மயங்கும் தலைவன் அவளை நினைத்துப் புலம்பும் இப்பாடல் சிறந்த கலங்கிமொழியும் அகப்பாடலாகும். இது போன்ற சிறந்த பொருளுடைய, பண்டைய மக்களின் வாழ்வியலைச் சுட்டும் அகப்பாக்கள் அமைந்துள்ளமை நற்றிணையில் தனித்தன்மைக்கு காரணமாகும்.

இத்தகைய சிறப்புடைய இலக்கியத்தில் உள்ள கூற்றுகளை நிகழ்த்துவோன் தலைவன், தலைவி, செவிலி, நற்றாய், பிறரும் ஆவர். இவற்றுள், தலைவன் கூற்றுள் கலங்கி மொழிதல் மொத்தம் 32 ஆகும். அவற்றுள் குறிஞ்சி 13, முல்லை ஒன்று, மருதம் ஒன்று, நெய்தல் மூன்று, பாலை 14 ஆகியனவாகும்.

தலைவி கூற்றுள் கலங்கி மொழிதல் மொத்தம் 65 ஆகும். அவற்றுள் குறிஞ்சி 16, முல்லை ஐந்து, மருதம் நான்கு, நெய்தல் 19, பாலை 21 ஆகியனவாகும்.

தோழி கூற்றுள் கலங்கி மொழிதல் மொத்தம் 116 ஆகும். அவற்றுள் குறிஞ்சி 46, முல்லை இரண்டு, மருதம் எட்டு, நெய்தல் 44, பாலை 16 ஆகியனவாகும்.

பிறர் கூற்றுள் செவிலி, நற்றாய் கலங்கி மொழிதல் எனும் அடிப்படையில் அமைந்துள்ள பாலைத்திணையில் மட்டும் ஒன்பது பாடல்கள் அமைந்துள்ளது. பரத்தை கலங்கி மொழிதல் மொத்தம் ஒன்று ஆகும். அவற்றுள் மருதம் ஒன்று, நெய்தல் ஒன்று ஆகியனவாகும். மொத்தம் பிறர் கூற்றில் 11 பாடல்கள் கலங்கி மொழியும் பாடல்களாகும்.

தொல்காப்பியம் கூற்றுகளுக்கு உரிய வரையறையைக் கூறிச் செல்கின்றது. பின்வந்த சங்க இலக்கியங்கள் கலங்கி மொழியும் கூற்றடிப்படையில் அமைந்த பாக்களைத் தன்னகத்தே கொண்டு அமைந்துள்ளன. இப்பாக்களும் தொல்காப்பியத்தைப்போல் பண்டைக்கால மக்களின் வாழ்வியலை எடுத்துக்காட்டுவதுடன், உளவியல் அடிப்படையில் ஆழ்ந்து நோக்க, தமிழர்களின் பண்பாடு, பழக்க வழக்கப் பதிவுகளைக் கொண்ட இலக்கியப் படைப்புகளாகத் திகழ்வதைக் காணமுடிகின்றது. சங்க இலக்கியங்களின் வழி இக்கூற்றுகளையும் அது தரும் செய்திகளைக் காணும் முன் இலக்கியம் உரைக்கும் 'கலங்குவதற்கான காரணங்களைக் காண்பது' ஆய்வில் கலங்கி மொழிதலுக்கான வரையறையை உருவாக்க உதவும் என்ற நிலையில் இப்பாடல்கள் அமைந்துள்ளது. பின்வரும் இயல்கள் நற்றிணையில் உள்ள தலைவன், தலைவி, பிறர் கூற்றில் உள்ள கலங்கிமொழியும் கூற்றுகளை ஆராய்வதாக அமைகின்றது.

**தொகுப்புரை**

*சங்க இலக்கியங்கள் காலத்தை வென்று வாழ்வன. சங்ககாலத்தில் வாழ்ந்த மக்களின் வாழ்வியற் கூறுகள் மற்றும் உள்ளத்து உணர்வுகளை அடிப்படையாககக் கொண்டு எழுதப்பெற்றன சங்கப்பாக்கள்.*

*மனித உணர்வுகளை உளவியலடிப்படையில் இன்பம், துன்பம் என இருநிலைகளில் உளவியலாளர் பகுப்பர். இந்நிலைகள் பாக்களைப் பகுத்தாராயும் போது பண்டைக் கால மக்களின் வாழ்வியலை அறியமுடிகின்றது.*

*ஆய்வுக்குரிய துன்பநிலையில் வெளிப்படும் கலங்கிமொழிதல் என்னும் சங்கப்பாடல்களில் காணலாகும் மாந்தர்கள் கூற்று ஆய்வுக்கு உட்படுத்தப்பட்ட நிலையில் ஆழ்ந்து நோக்க இக்கலங்கிமொழிதல் குறித்துத் தொல்காப்பியம் பொருளதிகாரத்தில் பதிவுசெய்திருக்கும் கருத்துகள் ஏராளமானவையாகும்.*

*இலக்கியங்களில் இன்பநிலையில் அமையும் கூற்றுகளைவிட துன்பநிலையில் வெளிப்படும் கூற்றுகள் சிறப்பிடம் பெற்று வருகின்றன. ஆதலால் சங்க இலக்கியங்களில் இக்கலங்கி மொழிதல் கூற்று அதிகம் இடம்பெற்றுள்ளன.*

*தொல்காப்பியரும் மெய்ப்பாட்டியலில் இக்கலங்கிமொழிதல் பற்றி எடுத்துரைத்துள்ளார். இன்றைய அகராதிகளும் கலைக்களஞ்சியங்கள் இக்கலங்கிமொழிதல் குறித்து விவரித்து விளக்கம் தருகின்றன.*

*தொல்காப்பியர் இனிமையான சூழல் மாறிய நிலையில் தன்நிலை செய்வதறியாச் சூழலில் தனக்குத்தானே தனிமைப்படுத்தல், தன்னைத் தானே வெறுத்தல், அதன் காரணமாக புலம்பி பேசுதல் நிகழும் என்னும் மெய்ப்பாடுகள் தலைவன் கூற்றில் காணப்படுவதை வெளிக்கொணரப் படுகிறது.*

ஐந்திணை ஒழுக்கத்தில் சேராத ஒருதலைக்காதல் எனச் சுட்டப்படும் கைக்கிளை ஒழுக்கத்தின் போதும் இப் புலம்புதல் தோன்றும் என்பதும் இங்கு சுட்டப்படுகிறது.

ஐவகை ஒழுக்கங்களிலும் களவிலும், கற்பிலும், கைக்கிளை, பெருந்தினை என்று அனைத்து நிலையிகளிலும் துன்பத்தின் காரணமாக கலங்கி மொழிதல் நிகழும் என்பதும் அறியமுடிகிறது.

தொல்காப்பியம் வழியில் அகத்திணையியல், களவியல், கற்பியல், தலைவன், தலைவி, தோழி, செவிலி, நற்றாய், பரத்தை ஆகியோரின் வாயில்களை அறியமுடிகின்றது.

பொருளதிகாரத்தில் தலைவன் தலைவியை விட்டுச் செல்லும் பொருட்டு தலைவி தலைவனை நினைத்து வருந்துவதை காணமுடிகின்றது. மேலும் தலைவியைத் தலைவன் பொருள் முயற்சிக்காக பிரிவின்போது மிகுதியாக காணப்படுகின்றது.

இத்தகைய உணர்வு நற்றிணையில் பெரிதும் வெளிப்படுத்தப் பட்டுள்ளது. தலைவன், தலைவி, தோழி, பாணன், பாங்கன், நற்றாய், செவிலி, எனப் பலரும் இக்கலங்கிமொழியும் கூற்றுக்களுள் இடம் பெறுகின்றன. இவையன்றி நெஞ்சிடம், அஃறிணைப் பொருள்களுள் இடம்பெறுகின்றன. இவையன்றி நெஞ்சிடம், அஃறிணைப் பொருள்களுடன் புலம்புதல்களும் இடம்பெறுகின்றன.

நற்றிணையில் தலைவன் கூற்றில் கலங்கிமொழிதல் மொத்தம் 32, தலைவி கூற்றில் 65, தோழி கூற்றில் 116, பிறர் கூற்றில் 11 பாடல்களுமாகக கலங்கிமொழியும் கூற்றில் அமைகின்றன. இத்தகைய கூற்றில் பண்டைக்கால மக்களின் வாழ்வியலில் பின்னிப் பிணைந்திருந்தமையை இப்பாடல்வழி அறிமுடிகின்றது.

## சான்றெண் விளக்கம்

*1.* தொல்காப்பியம், பொருளதிகாரம், நூ.*640*

*2.* தொல்காப்பியம், மெய்ப்பாட்டியல், நூ.*1208*

*3.* மேலது, நூ.*1211*

*4.* மேலது, நூ.*1212*

*5.* தொல்காப்பியம், உவமையியல், நூ.*1247*

*6.* தமிழில் பொருளிலக்கண வளர்ச்சி, ப.*78*

*7.* மேலது, ப.*78*

*8.* பெருஞ்சொல் அகராதி, ப.*382*

*9.* நர்மதாவின் தமிழில்மொழி அகராதி, ப.*234*

*10.* சங்க இலக்கிய பொருட்களஞ்சியம், தொகுதி - *2*, ப.*153*

*11.* தொல்காப்பியம், பா.*814*

*12.* தொல்காப்பியம், செய்யுளியல், நூ.*1436*

*13.* மேலது, நூ.*1437*

*14.* தொல்காப்பியம், செய்யுளியல், நூ.*1447*

*15.* தொல்காப்பியம், பொருளதிகாரம், நூ.*963*

*16.* தொல்காப்பியம், பொருளதிகாரம், நூ.*985*

*17.* மேலது, நூ.*988*

*18.* தொல்காப்பியம், பொருளதிகாரம், நூ.*990*

*19.* தொல்காப்பியம், களவியல், நூ.*1051*

*20.* மேலது, நூ.*1055*

*21.* நற்றிணை, நூ.*6*

காதல் வாழ்வில் ஈடுபடுவோர் தலைவனும், தலைவியும் ஆவர். இவ்விருவரும் உணர்வுநிலையில் நிற்பவர்கள். இவர்களின் நடைமுறையை நெறிப்படுத்துபவள் தோழி ஆவாள். தலைவனது உணர்வுப் போராட்டங்களில் ஏமாற்றம், கலக்கம், ஆற்றாமை, ஏக்கம் ஆகியவை அடிப்படையாக இருக்கின்றன. தலைவியை அடையவேண்டும் என்ற அவனுடைய எண்ணத்திற்கு இடையூறு ஏற்பட்டால் ஏமாற்றம் அடைகின்றான். இதன் விளைவாக தலைவன் உள்ளத்தில் 'கலக்கம்' ஏற்படுகின்றது. சில சூழ்நிலைகளில் இவை இரண்டும் சேர்ந்தும் தலைவன் உள்ளத்தில் உணர்வுப் போராட்டத்தை ஏற்படுத்துகின்றன.

தலைவன் பொருள்தேடச் செல்லும்போதும், தலைவியை சந்திக்க முடியாத நிலையில் தன் நெஞ்சுக்கு கூறும் நிலையிலும் வினை மேற்கொள்ளும்போதும் தலைவியை சந்தித்து பிரியும் நிலையிலும், தலைவன் கலக்கம் அடைகிறான். இதனையே தொல்காப்பியர் தலைமகன் கூற்று பற்றி விளக்கும்போது அகத்திணையியலில் ஒன்பது இடங்களில் வருந்துவதாகவும், களவியலில் எட்டு இடங்களில் கலங்கி மொழிவதாகவும் கற்பியலில் 13 இடங்களில் வருந்திப் பேசுவதாகவும் தொல்காப்பியர் கூறுகின்றார். மேலும் தலைவன் நிலை பற்றி விளக்கும்பொழுது கற்பியலில்,

"பின்முறை ஆக்கிய பெரும்பொருள் வதுவைத்
தொல்முறை மனைவி எதிர்ப்பாடு ஆயினும்
இன்இழைப் புதல்வனை வாயில்கொண்டு புகினும்
இறந்தது நினைஇக் கிழவோன் ஆங்கண்
கலங்கலும் உரியன் என்மனார் புலவர்"[1] (தொல்.1116)

என்கிறார். களவில் கலந்து பழகியவளையே பின்னர் முறைப்படி மிகச் சிறந்த பொருளுடையதான வாழ்வியலுக்குத் துணையாக விளங்கப் பழமையான குலமுறைப்படி திருமணம் செய்து வைத்த பின்னர்

பரத்தையிடமிருந்து வந்த தன்னை எதிர்கொண்ட நிலையிலும் தன் மகனுக்கு காமக்கிழத்தி அணிவித்த நகைகளை அணிந்துகொண்டு வந்த புதல்வனைச் சாக்கிட்டு முன்வந்த இடத்தும், திருமணத்திற்கு முன்பு நடந்த இனிய நிகழ்வுகளை எண்ணிப்பார்க்கும் நிலையிலும் தலைவன் மனம் கலங்கும் என்பார் புலவர்.

இந்த அடிப்படையில் நற்றிணையில் தலைவன் பாடல்கள் இங்கு காணப்படவுள்ளது. சங்க அக இலக்கியங்களில் திணை இன்றியமையாத இடத்தைப் பெற்றுள்ளது. அகச் செய்திகள் திணைசார்ந்து கட்டமைக்கப் பெறுவதில் கவனம் செலுத்தப் பட்டுள்ளன. இவற்றின் உரிப்பொருள்கள் ஒவ்வொரு திணைசார்ந்த தலைவன், தலைவியரிடையே நிகழும் உணர்வை நுட்பமாக எடுத்தியம்புவதில் இணையற்றவனாக அமைந்துள்ளன. ஒவ்வொரு பாத்திரங்களும் தம் தம் கூற்றுக்கள் வாயிலாக தலைவன் - தலைவி அன்பொழுக்கத்தை விளக்குவதில் கவனம் செலுத்தியுள்ளனர். அவ்வகையில் நற்றிணையில் தலைவன் கூற்றுப் பாடல்களில் 32 பாடல்கள் கலங்கி மொழியும் பாடல்களாக அமைந்துள்ளன. அவற்றை திணை அடிப்படையில் பார்க்கும்பொழுது குறிஞ்சித்திணையில் 13 பாடல்களும், முல்லைத்திணையில் 1 பாடலும், மருதத்தில் 1 பாடலும், நெய்தல் திணையில் 3 பாடல்களும், பாலைத்திணையில் 14 பாடல்களும் ஆக மொத்தம் 32 பாடல்கள் காணப்படுகின்றன.

**தலைவனுக்கு இரங்கல் உணர்வு தோன்றும் சூழல்கள்**

1. இடைச்சுரத்தில் தலைவியை நினைந்து வருந்துதல்
2. பாசறைக் கண் இருந்து தலைவியை நினைந்து வருந்துதல்
3. புணர்ச்சி மறுக்கப்படும் சூழலில் வருந்துதல்.

மேற்கூறிய சூழல்கள் வாயிலாக வருத்தம் தோன்றும் பொழுது, தலைவன் நெஞ்சிடத்தும், தலைவி, தோழி, பாணன், பாங்கன் என்ற நிலைகளில் தன்னுடைய உணர்வுகளை வெளிப்படுத்துகின்றான்.

**தலைவன் நெஞ்சிடம் கலங்கி மொழிதல்**

தலைவனின் கூற்றுக்கள் பிரிய விரும்பும் நெஞ்சினை ஒருட்டிச் செலவழுங்க விரும்பும் அவனது விருப்பத்தை வெளிப்படுவனவாக அமைந்துள்ளன. "பிரிய நினையும் நெஞ்சிற்குப் பொருளால் தோன்றும் பயன்கள் நினைவுக்கு வருகின்றன. பிரிய மறுக்கும் தலைவனுக்குப் பொருளின் நிலையாமை மனதில் படுகிறது. தனது விருப்புடன் நெஞ்சோடு கலந்துரையாடி தலைவியை பிரியும் நிலை"[2] எடுத்துரைக்கப் படுகின்றன.

பிரிதலை நன்று எனக் கருதிய நெஞ்சினைத் தலைவி தரும் இன்பத்தை எடுத்துரைக்கும்பொழுது தலைவியைப் பிரிய நினையாத தன் நிலையை விளக்கியும் பொருளில் நிலையாமையைச் சுட்டியும் செலவழுங்குமாறு தலைவன் தெருட்டுகிறான். மூப்பின் வரவு, காமத்தின் இயற்கை ஆகியன அறிந்து பிரிவைத் தவிர்க்குமாறும், தலைவியைப் பொருளாக மதித்து அவளை நினைந்து மகிழுமாறும் நெஞ்சிற்கு அறிவுரைகள் தரப்படுகின்றன. தனது விருப்பத்திற்கு முரணாகப் பிரிவு வலித்த நெஞ்சை மட்டும் பிரிந்து செல்லுமாறும் எனவும் தலைவன் கூறி நிற்கும் காட்சிகள் பாடலில் இடம்பெறுகின்றது.

பிரிந்து பெறும் பொருள் வளமும், இருந்து பெறும் இன்ப வளமும் ஒப்பிடப்பட்டுத் தலைவி தரும் இன்பத்திற்கு எதனையும் பொருட்படுத்தாத தலைவனின் மன ஓட்டத்தைப் பார்க்கமுடிகின்றது. பெரிதும் இவ்விடங்கள் தலைவனின் மன வருத்தத்தை காணமுடிகின்றது.

"ஈன்பருந்து உயவும் வான்பொரு நெடுஞ்சினைப்
சுரன்முதல் வந்த உரன்மாய் மாலை
உள்ளினென் அல்லனோ யாழனா உள்ளியே
வினைமுடித் தன்ன இனியோள்
மனைமான் சுடரொடு படர்பொழுது எனவே" (நற்.3)

இப்பாடலில், காதல் துன்பத்தை மிகுவிக்கும் இம்மாலைப் பொழுதில், தனது காதலி மனையகத்து விளக்கேற்றி இன்னும் தம் தலைவர் வந்தாரில்லையே என்று வருந்துவாள். தற்போது நெஞ்சே! பொருள்தேட எண்ணுகிறாயே! மீண்டும் தலைவியை வருத்தம் மீதுர செய்ய எண்ணுகிறாயோ! என்பது தலைவனைப் பிரிந்து தலைவி வருந்தியதையும், தலைவியின் துன்பம் நினைந்து தான் வருந்தியதையும், மீண்டும் துன்பம் வருதலை விரும்பாத நிலையும் புலப்படுத்தப்படுகிறது. இவற்றிலிருந்து, தலைவியின் துனபத்தைக் கூறுவதுபோல் தானும் அவளைப் பிரியும் சூழலை விரும்பாத தன்மையையும், அவ்வாறு விட்டுப் பிரிந்ததால் இருவரும் துன்புறவேண்டும் என்று உணர்ந்து செலவழுங்குவிப்பதாக அமைகின்றது. இப்பாடல் தலைவன் தலைவியின் கலக்கம் உணர்ந்து தானும் தன் நெஞ்சிற்கு இது புரியவில்லையே என்று வருந்துதியுரைப்பதாக அமைகின்றது. உதாரணமாக

“அருஞ்சுரக் கவலைய என்னாய் நெடுஞ்சேன்
பட்டனை வாழிய நெஞ்சே - குட்டுவன்
குடவரைச் சனையமா இதழ்க் குவளை
வண்டு படு வாண்போது கமழும்
அஞ்சில் ஏதி அரும்படர் உறவே” (நற்.105)

எனும் நற்றிணைப் பாடலொன்று தலைவன் வருந்துதலைச் சுட்டுகிறது.

இலவ மரத்தின் இலைகள் நடுங்கும்படி கொடிய காற்று வீசும் நீரில்லா பாலை நிலத்தில் தன் கன்றுகளுடன் பெண் யானைகள் அவ்விடத்தில் வருந்தி நிற்கின்றன. அதனைக் கண்ட தலைவனின் நெஞ்சம் தலைவியைப் பிரிந்ததை நினைத்து வருந்துகிறது. இவ்விடத்தில் தலைவனின் ஏக்கப் பார்வையும், தலைவனின் கலக்கமும் வெளிப்படுகிறது.

*உயிரினங்களின் அன்பு வாழ்வையும் பிரியா நிலையையும் கண்டு தலைவன் கலக்கம் அடைகிறான்.*

*"ஒன்று தெரிந்த உரைத்திசின் நெஞ்சே புன்காற்*

*..........................................................................*

*மாய வேட்டம் போகிய கணவன்*

*பொய்யா மரபின் பிணவு நினைந்து இரங்கும்*

*விருந்தின் வெங்காட்டு வருந்தும் யாமே" (நற்.103)*

*எனும் பாடல் இச்செய்தியைத் தருகின்றது.*

*இப்பாடலில் பொருற்வயிற் பிரிந்த தலைவன் இடைவழியில் தலைவியை நினைந்து தன் நெஞ்சுக்குக் கூறியது. அதனை 'பொய்யா மரபின் பிணவு நினைந்து இரங்கும்' என்பதன் வழி தலைவனின் தடுமாறும் நெஞ்சம் இங்கு உணர்த்தப்படுகின்றது.*

*"உழை அணந்து உண்ட இறைவாங்கு உயர்சினைப்*

*..........................................................................*

*சேறும் மடந்தை என்றலின் தான் தன்*

*நெய்தல் உண் கண் பைதல் உரம்*

*ஆம்பலங் குழலின் ஏங்கிக்*

*கலங்குஅஞர் உறுவோள் புலம்பு கொள் நோக்கே" (நற்.113)*

*இப்பாடல் இடைச்சுரத்து ஆற்றாமையை தலைவன் சொல்லுவதாக அமைந்ததாகும். பொருள்வயிற் பிரிந்த தலைவன், பாலை நிலத்துவழிச் சென்று கொண்டிருக்கிறான். அப்போது தலைவியின் உருவெளித் தோற்றம் காணுகின்றான். தான் பிரிய எண்ணி அது பற்றித் தலைவியிடம் கூறியபோது அவள் கூந்தலை விரித்து அனுள் தன் அழுகையை மறைத்துத் தன்னை வருந்திய முகத்துடன் நோக்கியதை, பெருங்காட்டின் இடையில் கடந்துசெல்லும் போது தன்*

*எதிரில் வந்து நிற்பதாக உணர்கின்றான். அதனால் மனம் வருந்திப் பேசுவதாக அமைந்த பாடல் தலைவன், தலைவி மீது கொண்ட காதலை உணர்த்துவதாகும்.*

*இப்பாடலில் பெண்ணே செயற்கு அரிய செயலைச் செய்யும் பொருளை ஈட்டும் எண்ணம் கொண்டு யாம் அதனை நாடினோம் அப்போது நெய்தல் மலர் போலும் கருமையுற்ற நின் மையுண்ட கண்கள் வருத்தம் கொண்டன என்று தலைவன் தலைவியின் ஏக்கப்பார்வை நெஞ்சில் நினைத்து வருந்துகின்றான்.*

*"தலைவன் தான் எய்திய பிரிவுத் துயரால் தலைவிகொள்ளும் துயரை முழுமையாக உணர்கிறான்."[2]*

*"புணரின் புணராது பொருளே பொருள் வயிற்*
*பிரியின் புணராது புணர்வே ஆயிடைச்*
*..........................................................*
*எழுமாண் அணங்கும் விழுநிதி பெறினும்*
*கனங்குழைக்க அமர்த்த சேயரி மழைக்கண்*
*அமர்ந்தினிது நோக்கமொடு செகுத்தனென்*
*எனைய ஆகுக! வாழிய பொருளே" (நற்.16)*

*எனும் மற்றொரு பாடல் பொருள் ஈட்டும் எண்ணத்தில் இருந்த தலைவன் பின்னர்த் தலைவியைப் பிரிந்து செல்லுதற்கு ஆற்றாதவனாய்த் தலைவியைப் பிரியலனாகி நெஞ்சுக்குக் கூறியதாக அமைந்ததாகும்.*

*"வேய் பிணி வெதிரத்துக் கால்பொரு நரலிசை*
*கந்துபிணி யானை அயா உயிர்த்து அன்ன*
*............................................................*
*உள்ளினென் அல்லெனோ யானே முள்ளெயிற்றுத்*

*திலகம் தைஇய தேம்கமழ் திருநுதல்*

*...................................................*

*உலவை ஆகிய மரத்த*

*கல்பிறங்கு உயர்மலை உம்பர் அஃது எனவே" (நற்.62)*

*எனும் பாடலொன்று பொருள்வயிற் பிரிய எண்ணிய தலைவன் பின்னர் தலைவியின் முழுநிலவைப் போன்ற முகத்தையும், அவளின் பல்வேறு அழகினையும் தம்முடைய உரிமைப் பொருளாக கருதி தன் நெஞ்சிடம் வருந்தி பொருள்வயிற் பிரிவை விலக்கினான் எனும் பாடலாகும்.*

*"யாமுறு துயரம் அவள் அறியினோ நன்றே"[3]*

*என்ற ஐங்குறுநூறு பாடலொன்று தலைவனின் கலக்கத்தை வெளிப்படுத்தும் பாடலாகும். இதனைப்போன்ற கலக்கமுற்று மொழியும் தலைவன் கூற்றுகளை இவ்விலக்கியம் முழுமையும் காணமுடிகின்றன.*

*"நோஇனி வாழிய நெஞ்சே! மேவார்*

*..........................................................*

*வண்டு முசு நெய்தல் நெல்லிடை மலரும்*

*அரியலம் கழனி ஆர்க்காடு அன்ன*

*காமர் பனைத்தோள் நலம் வீறு எய்திய*

*வலைமான் மழைக்கண் குறுமகள்*

*சில் மொழித்துவர் வாய் நனக்கு மகிழ்ந்தோயே" (நற்.190)*

*தலைவியைத் தனக்கு இசைவிக்குமாறு தலைவன் தோழியை வேண்டி நின்ற இடத்து அவள் மறுத்துக் கூறத் தலைவன் தன்னுடைய நெஞ்சிற்கு கூறியது இப்பாடல். இதில் தலைவியின் அழகை நினைத்தும் அதனால் விளைவிக்கும் மகிழ்வினை நினைத்தும் அது முடியாமல் போனதை வருந்தி நெஞ்சிடம் கூறியது ஆகும். இது போன்ற கலக்கமுற்றுப் புலம்பும் தலைவனை,*

"நம் நோய் தன் வயின அறியாள்

எம் நொத்து புலக்கும் கொல்"[4] (அகம்.304)

எனும் பாடலின் வழி அறியமுடிகின்றது. இந்த அகநானூற்று பாடல் தலைவனின் துடிப்பையும் கலக்கத்தையும் புலப்படுத்தி நிற்கும் பாடலாகும்.

"தளிர் சேர் தன் தழை தைஇ துந்தை

..................................................

நறுந்தன் சாரல் ஆடுகம் வருகோ

இன்சொல் மேவலைப்பட்ட என் நெஞ்சுஉணக்" (நற்.204)

பெண்ணே! உன் தந்தைக்குச் சொந்தமான தினைப்புனத்தைக் காவல்காக்க மெல்லிய தழைஆடை உடுத்திவருவாயல்லவா! அங்கு நான் வரட்டுமா? அல்லது முன்னர்க் குவளை மலரைப் பறித்து அம்மலரைச் சூடியபொழுது நின்னைக் கூட்டினேன் அல்லவா! அந்த மலைப்பக்கத்தில் மீண்டும் சந்திக்கவரட்டுமா!... தலைவியின் சிறுகுடியினிடத்து என்னைப் பிரிந்து சென்றாள். அவள் சென்றபின் அவளைத் தந்த தெய்வம தானே மீண்டும் தரும் என்று எண்ணிப் பேசாமலிருக்க என்னால் இயலவில்லையே என்று தலைவன் கூறும் இப்பாடல் அடிகள் தான் விரும்பும் காதலியைத் தோழியின் உதவியால் அடைய விரும்பினான் தலைவன். அவள் அதற்கு மறுத்து விடுகின்றாள். அதனால் வருந்திய தலைவன் தனக்குள் புலம்புவது போன்று புலம்பி தலைவியின் செவியுறுமாறு கூறியது ஆகும். மற்றொரு பாடல் குறை மறுக்கப்பட்டுப் பின்னின்ற தலைமகன் ஆற்றானாய் நெஞ்சிற்குச் சொல்லுவானாய்ச் சொல்லியது ஆகும்.

"மலையிடம் படுத்துக் கோட்டிய கொல்லைத்

.........................................................................

இளயும் தாம் அறிபவ்வே எனக்கே
படுங்காற் பையுள் தகும் பாடஅது" (நற்.209)

தான் விரும்பிய காதலியை அடைவதற்கு தோழியின் உதவியை நாட அவள் மறுக்கும் இடத்தில் தலைவன் தன் நெஞ்சுக்கு கூறி கலக்கம் அடைகிறான். தலைவி தன்மீது கெண்ட காதலை அறிமுகப் படுத்தவில்லையென்றால் தன்னுயிர் அழிந்துவிடும். தலைவியின்றித் தானில்லை என்பதாக வரும் கலக்கமொழியால் அமைந்தது இப்பாடலாகும். இவ்வாறு "தலைவன் தலைவியோடு களவு நீட்டிக்கத் தோழியின் துணையை நினைக்கும்போது அவளை இழந்தும் நெஞ்சிடத்துப் புலம்பி அமையும் பாடல்களும் அகத்தினை மாந்தர்களுக்கு உரியது எனத் திறனாய்வுகளும் சுட்டுகின்றன."[5]

"இறுகு புணம் மேய்ந்த அறு கோட்டு முற்றல்
..................................................................
கலி மயில் கால வத்து அன்ன, இவள்
ஒலிமென் கூந்தல் நம் வயினாளே" (நற்.265)

இப்பாடல் தலைவியை விரும்பிய தலைவன் தோழியின் உதவியை நாடி நின்ற வகையில் அவன் நெஞ்சுக்கு உரைப்பதாய் அமைந்துள்ளது. காய்ந்த புல்லை மேய்ந்து முதிர்ந்த கொம்பும் புள்ளியும் வரிகளும் உடைய கலைமான் சேற்றில் புரண்டு வெம்மையைத் தீர்த்துக்கொள்ளும் ஒலி ஆரவாரத்தோடு அம்பைச் செலுத்தும் வில் வீரர்களின் வீரமும், மேலும் மயிலை போன்ற அழகுடன் திகழும் தலைவி நமக்கே உரித்தாகும் என தலைவியின் உடல் அழகை தலைவன் தன் நெஞ்சிற்கு கூறி தலைவியை சந்திக்க முடியாத சூழலில் தலைவன் கலக்கம் அடைகிறான். மற்றொரு பாடல் பாசறைக்கண் புலம்பும்,

"வங்கா வரிப் பறைச் சிறுபாடு முனையின்
செம்பொறி அரக்கன் வட்டு நா வழக்கம்
............................................................
நீர் இரங்கு அரைநாள் மயங்கிக் கூதிரொடு
வேறுபுல வாடை அலைப்பத்
துணையிலோம் தமியோம் பாசறை யேமே" (நற்.341)

எனும் பாடலாகும்.

பாசறையின் கண் இருக்கும் தலைவன் தன் மகன் பாலை அருந்தி விளையாடும் நிகழ்வையும் அவன் அங்கும் இங்கும் உலாவிக் கொண்டு பிறரை அச்சுறுத்திப் பொழுதைக் கழிக்கும் நிகழ்வையும் மேலும் தலைவி தன் அன்பு மகனின் அன்பை பெறுவாள் என்று ஏங்கியும், கூதிர் பருவத்தின் வருத்தத்தோடு வாடையும் வருந்துதலால் தலைவியின் துணையின்றித் தனியனாய் பாசறையில் கழிப்பதை எண்ணிக் கலங்குகின்றான்.

"நோயும் நெகிழ்ச்சியும் வீடச் சிறந்த
வேய்வனப் புற்ற தோளை நீயே
என் உயவு அறிதியோ நல்நடைக் கொடிச்சி
..................................................
கானவர் பெயர்க்கும் சிறுகுடி யானே" (நற்.82)

தலைவன் தலைவியின் அழகினையும் அவள் குடிப்பிறப்பினையும் கூறி வள்ளி நாயகியைப் போன்று நின்னுடைய உருவம் பேரொளியோடு விளங்குகின்றது. நின்னைக் காண்பதற்கே விரும்பினாலும் ஆற்றல் இல்லாதவனானேன் என்னுடைய வருத்தத்தை நீ அறிவாயோ என்று தலைவன் வருந்தியது இப்பாடலாகும் புணர்வுக்குத் துணைநிற்கத் தலைவன் வேண்டிய போது தோழி கழறுகிறாள். தலைவனின் உண்மை அன்பை அறிந்தபின் தோழி குறை நயக்கும் மனநிலை கொள்வாள்."[6]

நங்கை ஒருத்தியின் மீது காதல் கொண்ட தலைவன் தோழியின் உதவியை நாடியும், அவள் மறுத்துரைத்தமையால் தலைவன் தன் நெஞ்சிடம் உரைக்கும் மற்றொரு பாடல்,

"கொண்டல் மாமழை குடக்கோர்பு குழைத்த
சிறுகோல் இணர பெருந்தண் சாந்தம்
.....................................................
பின்னிலை முனியல்மா நெஞ்சே! என்னதூஉம்
அருந்துயர் அவலம் தீர்க்கும்
மருந்து பிறிது இல்லையான் உற்ற நோய்க்கே"

என்ற பாடல் அடிகளில் தலைவனின் கலக்க நிலைகளை அறிய முடிகின்றது. முனியல் என்பதற்கு வெறுக்காதே என்பதும், அவலம் என்பதற்கு வருத்தம் என்பதும் பொருளாகும்.

தலைவியை தலைவன் மணக்க விரும்பும் நிலையில் அதனை தலைவி தமர் மறுக்க அதனால் கலக்கம் அடைந்து வருந்தி தன் நெஞ்சுக்கு தலைவன் கூறும் பாடலொன்று,

"நிலத்தாழ் மருங்குல் தென்கடல் மேய்ந்த
விலங்கு மென் தூவிச் செங்கல் அன்னம்
..........................................................
வருந்தினை வாழியென் உள்ளம் ஒருநாள்
காதல் உழையன் ஆகவும்
குணக்கத் தோன்று வெள்ளியின் எமக்கு மார்வருமே" (நற்.356)

சிவந்த கால்களை உடைய அன்னப் பறவைகள் தன் குஞ்சுகளுக்கு இறை ஊட்டிய பின் அவற்றை தனது இறகுகளால் மூடிக் காக்கும் இவை போன்று என் காதலியும் என் அருகில் இருக்கும் நாள் எப்போது தோன்றும் என்றும், தலைவியை மனைவியாக்கி அவளை தன் அருகிலேயே இருக்கவேண்டும் என்ற எண்ணம் மேலோங்கி நிற்கிறது.

அவை வாய்க்காத போது என் மனம் கலக்கம் அடைகிறது என்று மொழிகிறான். "தலைவன் மனம் வருந்துவதற்கு தலைவி பற்றிய உணர்வுகளும் நினைவுகளுமே காரணமாக அமைகின்றன"[7] என்பது மனத உறவுகள் பற்றிய திறனாய்வாளர்களின் கருத்து இங்கு நோக்கத்தக்கது.

"முன்னியது முடித்தனம் ஆயன் நன்னுதல்
வருவம் என்னும் பருவரல் தீரப்
படும் கொல்வழி நெடுஞ்சுவர்ப் பல்லி
...............................................
வெண் போழ தைஇய அலங்கல் அம்தொடலை
மறுகுடின் கமழும் மாலை
சிறுகுடிப் பாக்கத்து எம் பெரு நகராளே" (நற்.169)

என்பதும் நெஞ்சிற்கு உரைக்கும் பாடலாகும்.

வினைமுடித்து மீளும் தலைவன் தலைவியை எண்ணுகிறான். அப்போது பல்லி இடும் ஒலியைக் கேட்டுத் தன் வருகையைத் தலைவி அறிந்திருப்பாளோ என்று எண்ணி நெஞ்சுக்கு உரைப்பதாய் அமைவது இப்பாடல் ஆகும்.

தலைவியை மனைக்குள் இருக்கச் செய்து காவல் இருத்தல் பொருட்டு தலைவன் கலங்கி மொழிவதாக ஒரு பாடல் அமைந்துள்ளது.

"ஓதமும் ஒலி ஏவு இன்றே! ஊதையும்
.............................................................
அணங்கு கால் கிளரும் மயங்கிருள் நடுநாள்
பாவை அன்ன பலராய் வனப்பின்
தடமென் பணைத் தோள் மடமிகு குறுமகள்
சுணங்கு அணி வனமுலை முயங்கால் உள்ளி

*மீன் கண் துஞ்சும் பொழுதும்*

*யான் கண் துஞ்சேன் யாது கொல் நிலையே" (நற்.319)*

*தலைவியின் களவொழுக்கத்தை அறிந்த நிலையில் அன்னையால் இற்செறிப்புக்கு உட்பட்டத் தலைவன் தன் நெஞ்சுக்கு கூறுவதாய் இப்பாடல் அமைந்துள்ளது.*

*மயக்கம் தரும் காலைப்பொழுதில் கொல்லிப் பாவையைப் போலும் ஆகும் மென்மையும் பருத்த தோளும் உடைய இளமடந்தையின் தேமல்களால் அழகுபெற்ற மார்பகங்களை எண்ணி கண் துஞ்சாது உள்ளேன். ஆனால் தலைவியின் தாய் அவளை வீட்டிலுள் அடைத்துவைத்திருப்பதை எண்ணி தலைவன் கலக்கம் அடைகிறான். இதுபோன்று இற்சிறைப்படுத்தப்பட்ட நிலையில் தலைவன் கலங்குவதும் உண்டு"[8] என அகத்திணை மாந்தர்கள் படைப்பு குறித்து நூல்கள் சுட்டுகின்றன.*

*"கடுந்தேர் எறியும் காலிற் சென்றும்*

*கொடுங்கழி மருங்கின் அடும்பு மலர் கொய்தும்*

*................................................*

*பசும்பூண் வேந்தர் அழிந்த பாசறை*

*ஒளிறு வேல் அழுவத்துக் களிறு பாடப்பொருத*

*பெரும்புண் உறுநார்க்குப் போய் போலப்*

*பின்னிலை முனியா நம்வயின்*

*என்னென நினையுங் கொல்! பரதவர் மகளே!" (நற்.349)*

*என்னும் இப்பாடல் தோழியின் உதவியைக் கொண்டு தலைவியை அடையத் திட்டமிட்டத் தலைவன், அம்முயற்சி வெறறிபெறாததால் புலம்புவதாக அமைந்தது.*

“தேரிலே சென்றேன். மலர்களைப் பறித்துத் தந்தேன். மடலைப் பறிப்பதற்கு அவளைத் தூக்கியும் உதவி செய்தேன் இவ்வாறெல்லாம் செய்த பின்னரும் என் உள்ளத்தில் காதலோடு அவள் இருந்தாளே அன்றி அவள் உள்ளத்தில் நான் இருந்தேனா! என்பது தெரியவில்லை. போர்க்களத்தில் வீரனைப் போய் காத்ததுபோல, நான் தோழியின் பின்னே சென்று அவளை இரந்துநின்று அவளுடைய காப்பிலே உயிர் வாழ்கின்றேன் என்று புலம்புவதாக அமைகின்றது இப்பாடல். புணர்வுக்கு பாங்களும், தோழியும் முதலில் மறுத்துப் பின் உடன்பட்டு உதவி செய்வதைத் தொல்காப்பியரும் தம் பொருளதிகாரத்தில் சுட்டிச் செல்கின்றார்.”

தலைவியைப் புணர்ச்சிக்கு உடன்படுத்தாத தோழி உள்ளம் எண்ணுதற்குரியது தலைவன் தலைவி மீது கொண்டுள்ள உண்மைத் தன்மையை அறிந்த பின்னரே உடன்படுத்துகிறாள். இந்த இடையில் தலைவி தனக்கு கிடைக்கமாட்டாளோ என்ற முரண்பாடான எண்ணம் தலைவன் உள்ளத்தில் கலக்கத்தை ஏற்படுத்துகிறது.

சங்ககால மக்கள் திணை அடிப்படையில் தங்கள் வாழ்க்கை முறையை அமைத்துக்கொண்டனர். தமது வாழ்வு தேவைக்கு ஏற்ப அவர்கள் வசிக்கும் நிலத்திலிருந்து மற்றொரு நிலத்திற்கு பொருளுக்காக செல்கின்றனர். இதனையே தொல்காப்பியர், “பொருள்வயின் பிரிதலும் அவர்வயின் உரித்தே”[9] என்று கூறுகின்றார். மேலும் அவன்பால் நிகழும் கூற்றுகளாகத் தொல்காப்பியர் கூறுவன பதினேழு என்றும், தலைவன் தலைவியை விடுத்து ஓதல், பகை, வேந்தற்குற்றுழி, தூது, காவல், பொருள் ஆகிய ஆறன் காரணமாகப் பிரிவான். இப்பிரிவுகளை மேற்கொள்ளும் அவன்பால் நிகழும் கூற்றுக்கள் பதினேழு என்கிறார் தொல்காப்பியர்.

*"வினையே ஆடவர்க்கு உயிரே*

*மனையுறு மகளிர்க்கு ஆடவர் உயிரே"*[10]

*என்ற குறுந்தொகை வழி சங்ககால மக்கள் பொருள் தேடுதல் எந்த அளவிற்கு முக்கியத்துவம் வாய்ந்தது என்பதை நாம் இதன்வழி அறியமுடிகின்றது.*

*"பைங்காய் நல்லிடம் ஏரி இய செங்காய்க்*

*கருங்களி ஈந்தன் வெண்புறக் களரி*

*..................................................*

*இளமையான சிறந்த வளமையும் இல்லை*

*இளமை கழிந்த பின்றை வளமை" (நற்.126)*

*என்ற இவ்வடியில் பாழ்பட்ட பாலைநிலத்தின் வழி சென்று ஈட்டுகின்ற பொருளும் ஓர் இன்பம் செய்வதாகுமோ? அங்ஙனம் செய்யும் எனில் இளமையில் பெறும் காம இன்பத்தினும் சிறந்ததோ? அங்ஙனம் இல்லையோ, பொருளால் ஏற்படும் வளமை இளமையினும் சிறந்ததோ? அங்ஙனம் இல்லையே காம இன்பம் இளமையில்தான் பயன்படும். ஆனால் பொருள் முதுமையில் பயன்படும் எனும் இவ்விடத்தில் பொருள் பயன்பாடு அறிந்த தலைவன் தலைவியை விட்டுப் பிரிய என்னும்போது மனம் கலக்கம் அடைகின்றது.*

*"இளமையும் பொருளும் நிலையாதாயினும் நிலையாமை என்ற சொல் பெரிதும் இளமையுடன் சேர்த்துப் பார்க்கப்படுகின்றது. இளமை வறுமை ஆகிய இரண்டும் நிலையாதனவாக எடுத்துரைக்கப்படும்."*[11]

*பொருளும் இளமையும் தேவை என்றாலும் தலைவனின் கலக்கம் தலைவியின் பிரிவையே ஏற்றி நிற்கின்றது.*

*"இருங்கண் ஞாலத்து ஈண்டு தொழில் உதவி*

*கேட்டொறும் கழுமால் பெரிதே காட்டக்*

*குறும் பொறை அயல நெடுந்தாள் வேங்கை" (நற்.157)*

என்ற பாலைத்திணைப் பாடல் பொருள் காரணமாக பிரிந்த தலைவன் கார் காலத்தில் வருகிறேன் என்று கூறிச் சென்றுவிடுகின்றான். ஆனால் கார்காலம் வந்தபின்னர் மழைகாரணமாக தலைவியிடம் வந்து தலைவனால் சேரமுடியவில்லை. அதனை எண்ணி தலைவி வருந்துவளே என்று தலைவன் கலக்கமடைவது இப்பாடல் மழைக் காரணமாக தலைவியை சேரமுடியவில்லை என்று கூறும் இடத்தில் வினைமுற்றி திரும்பும் தலைவி தன் வரவை எதிர்நோக்கி இருப்பாள் எனக் குறிப்பிடப்படினும் தலைவி வருந்துவதை நினைத்து தலைவன் புலம்புவது இங்கு நோக்கத்தக்கவண்ணம் உள்ளது.

"வம்ப மக்கள் வருநிறம் நோக்கிச்
செங்கனை தொகுத்த செயர் நோக்கு ஆடவர்
.......................................................
இரும்போது கமழும் கூந்தல்
பெருமலை தழிஇயும் நோக்கு இயையுமோ மற்றே" (நற்.298)

இப்பாடல் அடியால் நறுமணம் கமழும் கூந்தலை உடைய என் தலைவியை கண்ட பின்னர் பெருமலை கடந்து பொருள் தேடச் செல்வது தகுமோ? என தலைவன் கலக்கம் அடைவது புலப்படுகின்றது. பொருள் காரணமாக தலைவியை விட்டுப் பிரிவது தலைவனின் நெஞ்சில் கலக்கத்தை உண்டாக்குகின்றது.

"தலைவனின் பிரிவை கேள்வியுற்றதுமே தலைவிக்கு வளையல் கழல்வதாகவும், நுதல் பசப்பதாகவும் தோழி எடுத்துரைக்கிறாள்."[12]

தலைவன் பொருள்தேட செல்வதாகக் கூறுகிறான். ஆனால் அவற்றை கடமை என்று எண்ணி விரும்பி கேட்கின்றாள் தலைவி. ஆயினும் பிரிவுத்துயர் காரணமாகக் குவளைமலர் போலும் அவள் கண்களிலிருந்து கண்ணீர் பெருகிற்று. செயலற்ற விசைப்பாவை போல

*கலங்கினாள் பொருள்வயிற் பிரியும் என் நெஞ்சமும் கலங்கியது எனத் தலைவனின் மனமும் தலைவியின் பிரிவை எண்ணிப் புலம்புவதாக அமைந்துள்ளது.*

*"செலவிரை அற்ற அரவம் போற்றி*

*மலர் ஏர் உண் கண் பனிவர ஆடாழை*

*................................................*

*பொறியழி பாவையின் கலங்கி நெடிதுநினைந்து*

*அகம் அடை தந்ததோளே! அது கண்டு*

*பொருள் பலி நெஞ்சம் புணர்ந்து வந்தன்னேற" (நற்.308)*

*எனும் இப்பாடலில், "பிரிந்து சுரம் செல்வதால் தலைவன் அடையும் துயர்களும் பிரியாது இருப்பதால் அவன் பெறஇயலும் இன்பங்களும் ஒப்பிட்டு காட்டப்படுகின்றன."*[13]

*"நோகே யானோ நோம் என் நெஞ்சே*

*பனிப்புதல் ஈங்கை அங்குழை வருடச்*

*....................................................*

*கோடைத் திங்களும் பனிப் போள்*

*வாடைப் பெரும் பனிக்கு என்னால் கொல் எனவே" (நற்.312)*

*என்பதால் பொருள் காரணமாகப் பிரியும் தலைவன் பொருளையும் தலைவியின் துன்ப நிலையும் எண்ணி வருந்துகின்றான். பொருளீட்டும் ஆசைக்கும் மனைவியைப் பிரிதலுக்கும் இடையில் இருந்து வருந்தும் தலைவன் தன் நெஞ்சினை நோக்கி பேசுவதாய் இப்பாடல் அமைந்துள்ளது.*

*"குணகடல் முகந்து குடக்கேன்பு இருளி*

*தண் கார் தலைஇய நிலைந்தனி காலை*

*................................................*

*பொருள் தண் சொல்லிச் சிறுபசுங் குளவிக்*

கடிபதம் கமழும் கூந்தல்

மடமா அரிவை தடமென தோளே" (நற்.346)

பொருளை நாடி வேற்று நாட்டிற்கு சென்ற தலைவன் காதலியைப் பிரிந்து ஆற்றாதவனாய்த் தனக்குள் சொல்லிக் கொண்டது இப்பாடலாகும். இப்பாடல் இங்கு வாழ்க்கை சூழல் என்பது பொருள்காரணமாக தலைவியை பிரியும் சூழல் ஏற்படும் என்பதே ஆகும். ஆனால் அவற்றை மீறி தலைவன் துன்பமும், கலக்கமும் அடைகின்றான்.

"அருஞ்சுரக் கவலை வருதலின் வருந்திய

நமக்கும் அரிய வாயின, அமைந்தோள்

மாண்புடைக் குறுமகள் நீங்கி

யாங்கு வந்தனள் கொல்? அணியவர் தானே" (நற்.352)

என்ற இப்பாடல் வரியும் பொருள் காரணமாக பிரியும் தலைவன் வேற்று நாட்டில் தலைவியைப் பற்றி நினைத்து வருந்துவதாய் அமைந்துள்ளது.

**தலைவன் பாங்கனிடம் கலங்கி மொழிதல்**

தலைவன் தோழியிடத்தும், நெஞ்சிடத்தும் கலங்கிமொழிவதோடு, பாங்கனடத்தும் புலம்புதல் உண்டு. தலைவனுக்கு உயிர்த்தோழன் பாங்கன், களவிலும் கற்பிலும் கூற்று நிகழ்த்துவதற்கு உரியவனான இவனது கூற்றுக்கள் தொல்காப்பியரால் தனித்து யாதும் கூறப்படவில்லை. சில கூற்று மரபுகள் மட்டும் இவனுக்குரியனவாக கூறப்படுகின்றன.

"பாங்கர் நிமித்தம் பன்னிரண்டு என்ப"[14]

பாங்கர் தோழர், தோழர் துணை கொண்டு (நிமித்தம்) தலைவன் தலைவியைக் கூடும் முறை பன்னிரண்டு வகையினதாகும். அவன் நிலை, ஒப்பு, பொருள்கோள், தெய்வம், களவு, உடன்போக்கு, மனைவி, காதல்

கிழத்தி, காதற்பரத்தை, அரும்பொருள்வினை, இராக்கதம், பேய்நிலை என்று தொல்காப்பியர் களவியலில் கூறுகின்றார். கற்பியலில் பாங்கன் பற்றி குறிப்பிடும்போது,

"மொழி எதிர் மொழிதல் பாங்கர் உரித்தே"[15]

என்று குறிப்பிடுகின்றார்.

தலைவன் பாங்கனிடம் கலங்கி மொழியும் பாடல்கள் மொத்தம் மூன்று பாடல்கள் ஆகும். அத்தகு பாடல்கள் தலைவன் கூற்றுக்கு பதில் உரைப்பதாகவே அமைந்துள்ளது. குறிஞ்சித்திணையில் 2 பாடல்களும் பாலை திணையில் ஒரு பாடலுமாகக் காணப்படுகின்றது.

தலைவியை இயற்கைப் புணர்ச்சியில் கூடிய தலைவன் பாங்கனின் உதவியை நாடியவனாகத் தன் காதலைக் கூறியது இப்பாடலாகும்.

"கழைபாடு இரங்கப் பல்லியும் கறங்கே
ஆடுமாடு மகள் நடந்த கொடும்புரி நோன்கயிற்று
………………………………………………………
கொடிச்சி கையகத்ததுவே பிறர்
விடுத்தற்கு ஆகாது பினித்தஎன் நெஞ்சே" (நற்.95)

நெஞ்சை கொள்ளைகொண்ட தலைவி என்று பாங்கனிடம் கூறி என்னை கவர்ந்த நறுமனம் கமழும் கூந்தலையுடவள். அச்சிற்றூரில் உள்ளனள். அவளேயல்லாது பிறரால் விடுத்தற்கு இயலாதபடி என் நெஞ்சமும் பினிக்கப்பட்டுள்ளது என்று வருந்தி கூறுகின்றான்.

"பிரிந்த தலைவியின் துயரை எண்ணி அவன் கொள்ளும் வருத்தமும் பொருள் நாட்டமும், போர் நாட்டமும் விடுத்துத் தலைவியைச் சந்திக்க அவன் கொள்ளும் துடிப்பும் கார்காலம் வரும்முன் தலைவியொடு இன்புற விரையும் அவன் வேகமும்

*தலைவியைக் காணும் வாய்ப்பு நெருங்கியபோது அவன் கொள்ளும் மகிழ்வும் அவனது கூற்று முழுவதும் பிரிந்துபட்டு ஒலிக்கின்றன."*[16]

*கற்றறிந்தவனான பாங்கன், தலைவன் கொள்ளும் களவொழுக்கம் பொருந்தாது என்றும் வற்புறுத்தத் தலைவன் தன்னுடைய காதலை உரைத்துத் தலைவியின்பால் கூட்டுவிக்குமாறு கூறிய பாடலொன்று,*

*"ஆனா நோயோடு அழிபடர்க் கலங்கி*
*காமம் கைம்மிகக் கையறு துயரம்*
*..................................................*
*பறவை இழைக்க பல்கண் இறாஅல்*
*தேனுடை நெடுவரை தெய்வம் எழுதிய*
*வினை மாண் பாவை அன்னோள்*
*கொலை சூழ்ந் தனளால் நோகோ யானே" (நற்.185)*

*காந்தள் மலர் அசைந்தாட இசைக்கும் தேனிகள் பலவும் விளங்கும் அம்மலைப் புறத்தே கொல்லிப்பாவை மாண் பொருதிகழ, அப்பாவையைப் போலும் தலைவி விளங்குவாள். அடங்காத காதல் நோயால் நான் துன்பம் உடையவனானேன். எல்லை கடந்த காமப் பெருக்கத்தால் நான் நலிகின்றேன். அவளை என்னோடு கூட்டுவிக்க நீ முயற்சிக்கவில்லையானால் நான் யாது செய்வேன்! என்று தலைவன் தலைவியை கூடாத நிலையில் தன் கலக்கத்தைத் தலைவி கேட்கவேண்டும் என்ற எண்ணத்தோடு பாங்கனிடம் கூறி கலக்கம் அடைகிறான்.*

*"அந்தோ! தானே அளியள் தாயே!*
*நொந்துஅழி அவலமொடு என் ஆகுவள் கொல்?*
*பொன்போல் மேனித் தன்மகள் நயந்தோள்*
*கோடு முற்று யானை காடுடன் நிறைதர*
*நெய்பட்டு அன்ன நோன்காழ் எஃகின்*

...................................................

பஞ்சி மெல்லடி நடைபயிற்றும்மே" (நற்.324)

என்பது அப்பாடலாகும்.

பொன்பேன்ற மேனியை உடையவள் தலைவி. அவளின் தாய் அவளை விரும்பிப் போற்றுவாள். அத்தகையோள் என்னுடன் உடன்போக்காக வந்துள்ளாள். இம்மலையின்கண்ட முற்றிய தந்தங்களை உடைய யானைகள் நிரம்ப உள்ளமையால் வேற்படையை உடைய இவருடைய தந்தையின் அகன்ற முற்றத்தில் பந்து விளையாட்டில் கவனம் கொண்டு இங்கும் அங்கும் ஓடித்திரிவதுபோல் இங்கு யானைகளுக்கு அஞ்சி ஓடிக் களைத்துப் பஞ்சினும் மெல்லிய அடிகள் நோக மெல்ல நடக்கின்றாள். இதை அறிந்தாள் அவள் தாய் துயரத்தால் மனம் நொந்து என்ன ஆவாளோ? என்று புலம்பும் தலைவனன்பு இப்பாடலில் காணமுடிகின்றது.

**தலைவன் தோழியின் கலங்கிமொழிவது**

தலைவன் தோழியிடத்து கலங்கி மொழிவதாக இரண்டு பாடல்கள் அமைந்துள்ளது. அவை குறிஞ்சித்திணையில் ஒரு பாடலும், நெய்தல் திணையில் இரண்டு பாடல்களும் அமையப்பெற்றுள்ளது.

"மடலே காமம் தந்தது அலரே!

மிடை பூ எருக்கின் அலர் தந்தன்றே!

...................................................

புலம்பு தந்தன்றே புகன்று செய் மண்புலம்

பென்ட் புணர் அன்றில் உயங்கு குரல் அளைஇ

கங்குலும் கையவு தந்தன்று

யாங்கு ஆகுவென் கொல் அளியென் யானே" (நற்.152)

என்ற பாடல் மூலம் தலைவன் கலங்கும் நிலைகளை காணமுடிகின்றது. யான் தலைவி மீது கொண்ட காதல் என்னை மடல் ஏறி

அழிவுகொள்ளுமாறு செய்துவிட்டது. ஊரார் கூறும் பழிச்சொல் என்னை எருக்கம் பூமாலையைச் சூடுமாறு செய்துவிட்டது. சூரியன் மேற்கு நோக்கி சென்று ஒளிமங்க எனக்கே துன்பம் உண்டாயிற்று. தன் பெடைகளை பிரியாத அன்றில் பறவைகளும் வருந்திக் கூறி ஒலி எழுப்பியது. இளியான் எங்ஙனம் உயிர்த்திருப்பேன்! என்ற தலைவன் தலைவி மூலம் அடைந்த துன்பத்தை மையப்படுத்தி கலங்குகிறான். மடல் ஏறுதலால் தன்னை ஊர் இழிவாக எண்ணுகிறது என்றும் மாலை நேரத்தில் தலைவி எண்ணம் மேலோங்கி அன்றில் பறவைகளை ஒப்பிட்டுத் தன் துன்ப நிலையை எடுத்துக்காட்டுகிறான்.

"நயன் இன்மையின் பயன் இது எண்ணாது
உரைமதி உடையும் என் உள்ளம் சாரல்
உறாஅ நோக்கம் உற்ற என்
பைதல் நெஞ்சம் உய்யு மாறே" (நற்.75)

தலைவியை விரும்பிய தலைவன் தோழியின் உதவியை நாடுகிறான். தோழி உதவாத நிலையில் வேடன் தன்னுடைய வில்லை வளைத்து யானையைக் கொன்று அதன் அம்பில் உள்ள இரத்தம் போல் சிவந்த வரிகள் போல குளிர்ந்த கண்களை உடையவள் தலைவி அவளிடம் சென்று என் குறைகளை உரைப்பாயாக, அவ்வாறு நீ செய்யவில்லையானால் என் உள்ளம் உழைந்து யானும் அழிவேன் என்று கலங்கி பேசுகிறான் தலைவன். "உரைமதி உடையும் என் உள்ளம்" எனும் அடி இதனை தெளிவுபடுத்துகின்றது.

**தலைவன் தலைவியிடம் கலங்கி மொழிவது**

தலைவன் தலைவி மீது கொண்ட அன்பினால் கலங்கி மொழியும் பாடல் ஒன்று நற்றிணையில் அமைகின்றது.

"சொல்லின் சொல் எதிர் கொள்ளாய் யாழநின்
……………………………………………………………

*ஏம்பு அரன் கடந்த அடுபோர்ச் செழியன்*

*பெரும் பெயர் கூடல் அன்ன நின்*

*கரும்புடைத் தோளும் உடையவால் அணங்கே" (நற்.39)*

*எனும் பாடல் தலைவியிடம் புலம்பும் தலைவனைச் சுட்டுவது.*

*இயற்கைப் புணர்ச்சிக்குப் பின் நாணம் நீங்காது நிற்கும் தலைவியின் கண்கள் சினத்தால் சிவந்தன. அவளைத் தழுவத் துடித்த தலைவனை நாணம் மேலாட அவளை தழுவ முடியாமல் தலைவன் வருந்தி தலைவி கேட்க கலங்கி மொழிவதாக அமைந்துள்ளது.*

*இங்கு தலைவி மறுமொழி கூறாமல் நாணத்தால் தலைகுணிந்து நிற்கும் நிலையில் அவள் குறிப்பினை அறிந்து அவள் தன்னை விரும்புவதாக என்னிடம் தலைவன் மகிழ்கின்றான். மறு பக்கத்தில் மீண்டும் தலைவியை தழுவமுடியவில்லை என கலக்கம் அடைகிறான். இதனை "பெயர்க் கூடல் அன்னநின்" என கூறி வருத்தமுறுகிறான்.*

**தலைவன் பாணனிடம் கலங்கி மொழிவது**

*பரத்தையிற் பிரிந்த தலைவன் மீளவும் தலைவியை நாட அவள் ஊடல் மிக்கவளாய்ச் சினங்கொண்டு மறுத்தவகையில் தலைவன் பாணனை நோக்கி கூறியதாக இப்பாடல் காணப்படுகின்றது.*

*"வராய் பாண நகுகம்! நேரிழை*

*கடும்புடைக் கடுஞ்சூல் நம் குடிக்கு உதவி*

*நெய்யொடு இமைக்கும் ஐயவித்திரள் காழ்*

*..................................................*

*உள்ளினென் உறையும் எற்கண்டு மெல்ல*

*முகைநாள் மறுவல் தோற்றித்*

*தகைமலர் உண்கண் கைபுதைத் ததுவே" (நற்.370)*

இவ்வாறு நற்றிணையில் தலைவன் தலைவி, தோழி, பாணன், பாங்கன் மற்றும் தன் நெஞ்சிடத்து கலங்கி மொழியும் கூற்றுகளாக 32 படல்கள் காணப்படுகின்றன. பெரும்பாண்மையும் தலைவியுடன் கூடும் விருப்பத்தில் புலம்புதலாகவே அமைகின்றன. சிலவிடங்களில் பொருள் தேடச் செல்லும் நிலையில் பிரிவால் புலம்புதல் அமைகின்றது. களவியல், கற்பியல் என்ற இரண்டு நிலைகளிலும் தலைவிமீது கொண்ட காதல், காமம் என்ற நிலையிலேயே தலைவனது புலம்புதல்கண் அமைகின்றன.

**தொகுப்புரை**

♦ *சங்க இலக்கியங்களை அகம், புறம் எனப் பாகுபாடு செய்வது மரபு. மக்களின் அகப்புற வாழ்க்கை ஒழுகலாற்றை இவை விளக்கி நிற்றலின் இவற்றைத் திணை இலக்கியங்கள் என அழைப்பர். அவ்வகையில் கூற்றுகளும் அடங்கும் இவ்விலக்கியங்களில் இடம்பெறும் அகமாந்தர்கள் தோழி தலைவன், தலைவி, தாய், செவிலி முதலியோர் முன்னிலைப்படுத்தி தங்கள் மனநிலையை உணர்த்தி நிற்கின்றனர்.*

♦ *இவ்வுணர்வுகள் நெறிப்படுத்தப்பட்ட மனம் படும் எண்ணங்களில் ஒன்றாகவும் அதனைப் புறநிலைப்படுத்தும் சொற்களில் வேறாகவும் மாறுபட்டு ஒலித்தலும் காணப்படுகின்றது. இவ்வுணர்வுநிலைகளில் தலைவன் மனம் கலங்குதல் என்ற நிலையில் பாடல்கள் வெளிப்படுகிறது.*

♦ *நற்றிணையில் நூல் முழுவதும் வெவ்வேறு திணைகளில் வெவ்வேறு புலவர்கள் தலைவனின் மனக் கலக்கத்தை வெளிப்படுத்தியுள்ளனர். நற்றிணையில் தலைவன் கலங்கி மொழியும் பாடல்கள் 32, அவற்றுள் தலைவியோடு, தோழியோடு, நெஞ்சத்தோடு, பாணனோடு, பாங்கனோடு பாடல்கள் அமைகின்றன. பொருள்தேடச் செல்லும்போதும் பாசறையின்கண் தன் நெஞ்சுக்கு கூறி கலங்குதலின் போதும் மேலும் இயற்கைப் புணர்ச்சி, குறியிடம், நோக்கியும் தலைவன் கலங்கி மொழிகின்றான்.*

♦ *உலக இன்ப வாழ்வுக்கு தேவை பொருள் தேடுதல். அவற்றைத் தேடச் செல்லும் தலைவன் மனதில் இருவிதமான முரண்பாடுகள் ஏற்படுகின்றன. அவை தலைவி மூலம் கிடைக்கும் இன்ப வாழ்வு கிடைப்பதில்லை என்றும், மகிழ்ச்சியான இல்லற வாழ்வுக்கு பொருள் இன்றியமையாதது. அதனைத் தேடவேண்டும் என்ற கலக்கமும் மேலோங்கி காணப்படுகின்றது.*

♦ *நெஞ்சுக்கு கூறி கலங்குதல் பெரும் பகுதி களவு காலத்தில் தலைவியை சந்திக்கமுடியாத சூழ்நிலைகளில் தலைவியின் மூலம் இன்பங்களை*

பெறமுடியாத போறும், தோழி உதவாத சூழ்நிலைகளிலும் காணப்படுகின்றது.

- இதுபோன்று தலைவியிடத்து தன் விருப்பம் கூறிப் புலம்புதல் தலைவியோடு இணைக்கவேண்டி பாணன், பாங்கன் ஆகியோரிடத்துப் புலம்புதல், தலைவியுடன் உயர்குடிவளர்ப்பு, உடன்போக்கால் அவள் தன்னுடன் வருந்தும் நிலை நினைத்துப் புலம்புதல், தலைவியை வேண்டி தோழியிடம் இரங்கிப் புலம்புதல் எனத் தலைவனின் கலங்கி மொழியும் கூற்றுகள் நற்றிணையில் இடம்பெறுகின்றன.

## சான்றெண் விளக்கம்


*1. தொல்காப்பியம் கற்பியல், நூ.1116*

*2. அகத்திணை மாந்தர் ஓர் ஆய்வு, ப.180*

*3. ஐங்குறுநூறு, பா.441*

*4. அகநானூறு, 304*

*5. அகத்திணைமாந்தர் ஓர் ஆய்வு, ப.201*

*6. மேலது, ப.168*

*7. சங்க இலக்கியத்தில் மனித உறவுகள், ப.86*

*8. மேலது, ப.18*

*9. தொல்காப்பியம், பொருளதிகாரம், நூ.981*

*10. குறுந்தொகை, 135*

*11.அகத்திணைமாந்தர்கள் ஓர் ஆய்வு, ப.89*

*12. மேலது, ப.86*

*13. மேலது, ப.88*

*14. தொல்காப்பியம் பொருளதிகாரம், நூ.1047*

*15. மேலது, நூ.1126*

*16. அகமாந்தர்கள், நூ.1165*

உலகிலுள்ள மனிதர்களின் வாழ்வியலில் தமிழர்க்கென்று தனிச்சிறப்பு உண்டு. தமிழருக்கென்று தலைசிறந்த வாழ்வியல் கூறுகள் உள்ளன. தமிழ் மக்களின் வாழ்வியல் சிந்தனைகளை இலக்கியங்கள் எடுத்தியம்புகின்றன. தமிழரின் பெருமையைக் கூறுகின்ற இலக்கியங்கள் பல உள்ளன. அவ்வகையில் நற்றிணையும் மக்களின் அகவாழ்வு பற்றிப் பதிவுசெய்துள்ள நூல்களில் குறிப்பிடத்தக்க இலக்கியமாகும்.

சங்கத் தமிழர்களின் வாழ்வியலில் முக்கியமானதாகக் காதலும், வீரமும் போற்றப்பட்டுள்ளன. சங்க இலக்கியப் பாடல்கள் பண்டையத் தமிழர்களின் வாழ்க்கை நெறிமுறைகளை படம்பிடித்துக் காட்டக்கூடிய வகையில் அமைந்துள்ளன. அவற்றுள் ஒன்று கலங்கிமொழிதலாகும். சங்க அகத்திணை மாந்தர் படைப்புகளுள் இரங்கல் உணர்வுக்கு ஆட்படுவோர் தலைவன், தலைவி, தோழி மூவரும் முக்கியமானவர்கள் ஆவார்கள். தலைவியின் தாய் (நற்றாய்) இரங்கல் உணர்வுக்கு ஆட்படுகின்றாள். இருப்பினும், அகவாழ்வில் களவுக்காலத்திலும் கற்புக்காலத்திலும் அதிகமாக இன்னல் நிலைக்கு உட்படுபவள் தலைவியே ஆவாள்.

தலைவி, தலைவனை வருந்தும் தன் விருப்பத்தை, வேட்கையை உள்ள உணர்வினைக் கூற்றுகளில் வெளிப்படுத்துவதைக் காணமுடிகின்றது. அகத்திணை வட்டத்திற்குள் அமைந்த மையப்புள்ளி தலைவி எனலாம். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஐந்திணைகளில் உளப்பொருள்களாகிய புணர்தல், இருத்தல், ஊடல், இரங்கல், பிரிதல் ஆகிய ஐவகை உணர்வுகளும் தலைவியை மையமாகக் கொண்டவையே. தலைவியின் கூற்றுக்களுள் பெரும்பாலானவை தலைவியின் பிரிவுக்கால மனநிலையைப் புனைவதாக அமைந்துள்ளன. திருமணத்திற்கு முன் தலைவன் சிறைப்புறமாக நிற்க அவனது மனம் உணருமாறு தங்களுக்கு அமைந்த பின்புலங்கள் எடுத்துரைக்கப்

*படுகின்றன. மேலும் வரைவிடைவைத்துப் பிரிந்த தலைவன் நினைவாக தலைவி கொள்ளும் துயர் எடுத்துரைக்கப்படுகிறது. பின் பொருள் அல்லது போர்வயிற் பிரியும் தலைவனின் வரவை எதிர்நோக்கி மனம் அழிந்த தலைவியின் புலம்பல்கள் இந்த இயல்களில் காணமுடிகின்றது.*

*தலைவிக்கு நிகழும் கூற்றாக தொல்காப்பியர் “காணாதபோது பொழுது மிகுதி பொருள் முயற்சிக்காக ஏற்படும் பிரிவின் கண்ணும், பிறருக்கு மணம் செய்ய நினைந்தபோது அதை மறுக்கும் போதும் நிகழும்” என்று களவியலில் விளக்குகின்றார்.*

*மேலும் தலைவிக்கு நிகழும் கூற்றாக விளக்கும்போது “அவன் கைபடலால்தான் கலங்குதல், காரணங்களைக் கூறிப் பிரியும்போது வருந்துதல், நெட்டு உயிர்த்து வருந்துதல், அச்ச மிக்க இடத்தும் பிரிந்த இடத்தும் கலங்கல் வரும் தொழிற்குரிய துன்பங்களை வாயிலாகிய தோழி கூறும்போது தோழி தான் கூறியதை ஏற்றுக்கொள்ளாத போதும், தன் உயிர் போகும்படி பிற திருமண ஏற்பாட்டை மாற்றுதற்காகவும் நிகழும்” என்று களவியலில் விளக்குகின்றார். கற்பியலில் 1093வது நூற்பாவில் 8 இடங்களில் தலைவி கூற்று நிகழும் என்று விளக்குகின்றார். இத்தகைய தலைவியின் கூற்றுகள் நற்றிணையில் எவ்வாறு அமைந்துள்ளது என்பதை குறிப்பாக கலங்கிமொழியும் கூற்றுகளை ஆராய்வது இந்த இயலின் நோக்கம் ஆகும்.*

*நற்றிணையில் தலைவி கலங்கி மொழியும் பாடல்கள் 65 ஆகும். இவற்றுள் குறிஞ்சித்திணையில் தலைவி கலங்கி மொழிதல் 15 பாடல்களில் காணப்படுகின்றன. முல்லைத்திணையில் தலைவி கலங்கி மொழிதல் ஐந்து பாடல்களில் காணப்படுகின்றன. மருதத்திணையில் கலங்கி மொழிதல் நான்கு பாடல்களில் காணப்படுகின்றன. நெய்தல் திணையில் கலங்கி மொழிவதாக 19 பாடல்கள் காணப்படுகின்றன. பாலைத்திணையில் 22 பாடல்கள் உள்ளன.*

**தலைவனைப் பிரிந்த தலைவி கலங்கி மொழிதல்**

"நாள் மழை தலைஇய நல் நெடுங் குன்றத்து
மாக் கடல் திரையின் இழிதரும் அருவி
................................................
ஏந்து எழில் மழைக் கண் கலழ்தலின் அன்னை
................................................
வான் தோய் வெற்பன் மார்பு அணங்கு எனவே" (நற்.17)

எனும் குறிஞ்சித்திணைப் பாடலில், மனம்செய்து கொள்ளாமல் பகற்குறக்கண் வந்தொழுகும் தலைவன் வராதிருக்க வருந்துகிறாள். தலைவி, பின்னர் ஒருநாள் அவன் வந்து மறைவிடத்தே நிற்கிறான். அந்நிலையில் தமைமகள் தோழியிடம் 'நான் அவனை எதிர்ப்பட்ட இடம் கண்டு அழுது கொண்டிருந்தேன், அப்போது அன்னை யாதெனக் கேட்டாள் நான் என்னைமறந்து, தலைவன் மார்பைப் பெறாமல் வருந்துகின்றேன்' என்ற பாடல் அடியின்மூலம் தலைவன் வாராமை கண்டு வருந்திய தலைவியின் துன்பம் வெளிப்படுகிறது. தலைவன் தான் மீண்டு வருவதாகக் கூறிச் சென்ற கார்ப்பருவம் வந்த பின்னும் இன்னும் வாராமையால் வருந்தும் தலைவியை,

"இவனும் வாரார், எவனரோ? என
பெயல் புறந்தற்த பூங்கொடி முல்லைத்
தொகு முகை இலங்கு எயிறு ஆக"[1] (குறுந்.126)

என்னும் குறுந்தொகைப் பாடல் சுட்டுகின்றது.

**சிறைப்புறத்தானிடம் கலங்கி மொழிதல்**

மற்றொரு பாடல் களவொழுக்கத்தில் திளைத்த தலைவன், வேலன் வெறியாடல் நிகழ்ச்சியின்போது சிறைப்புறத்தானாக மறைந்து நின்றான். ஆங்குத் தலைவி தோழியை நோக்கி கூறுவது போலத் தலைவன் செவியுறுமாறு கூறுவது இப்பாடலாகும்.

"யாங்கு செய்வாம் கொல் தோழி! ஓங்குகழைக்
காம்புடை விடரகம் சிலம்ப பாம்பு உடன்று
ஓங்குவரை மிளிர ஆட்டி வீங்கு செலல்" (நற்.51)

அடர்ந்த மூங்கில் காட்டில் வழியே தலைவன் வருவான். அக்காடானது பாம்பினங்கள் வருத்தமுற்று புரளவும் பேரிடிகளுடன் மேகங்கள் இடிமுழக்கம் செய்யவும் மழை பொழியவும் விளங்க இவ்வழியே வரும் தலைவனுக்குத் துன்பம் உண்டாகுமோ என்று அஞ்சினேன் என்று பாடல் அடி விளக்கப்படுகின்றது. இங்கு தலைவன் மீது கொண்ட அன்பும், அதே நேரத்தில் இதுபோன்ற துன்பங்களை விடுத்து விரைந்து திருமணம் செய்துகொள்ளவேண்டும் என்பதும் புலப்படுத்தப்படுகிறது. குறிப்பாகத் தலைவன் வரைவு நீட்டிப்பதை நினைத்து வருந்தும் நிலையிலேயே இக்கூற்று நிகழுகிறது.

மற்றொரு பாடலில் தலைவனது பிரிவால் தலைவியின் துன்பம் மிகுதிப்பட்டது. அவளது நிலைகண்டு கலங்கிய தோழி தலைவனுக்குத் தூது அனுப்புவதாகக் கூறினாள். அதனைக் கேட்ட தலைவி தோழிக்கு வருந்திக் கூறியது இப்பாடல்,

"என்னர் ஆயினும் இனி நினைவு ஒழிக!

.....................................................

அறிவும் உள்ளமும் அவர் வயின் சென்றென
வறிதால் இகுளை என்யாக்கை இனியவர்
வரினும் நோய் மருந்து அல்லர், வாராது" (நற்.64)

தலைவன் பிரிந்தவிடத்தில் தலைவி வருந்தியது அறிந்த தோழி அவனிடதது தூது கருதுகிறாள். அதற்குத் தலைவி நம்மை கைவிட்ட அவரை இனி நினைதல் வேண்டா உள்ளம், அவர் பால் நாடிய என் உயிரும் அறிவும் ஏழிற்தமையால் என் உடம்பும் வறிதாயிற்று. இனி அருள்கொண்டு அவர் வந்தாராயினும் நம் நோய்க்குரிய மருந்தாக

மாட்டார். நம்மிடத்தில் உண்டாகும் காமகம் அதன் விளைவும் நம்மை வருத்தி துன்புறுத்தும். சுற்றத்தினரும் விலகுவர் என்று தலைவி வருந்துவதாய் இப்பாடல் காணப்படுகின்றது.

"கொடுங்குரள் குறைந்த செவ்வாய்ப் பைங்கிளி!
அஞ்சல் ஓம்பி, ஆர் பதம் கொண்டு
நின்குறை முடித்த பின்றை என்குறை
செய்தல் வேண்டுமால் கைதொழுது இரப்பல்" (நற்.102)

எனும் மற்றொரு பாடலும், தலைவியின் துன்பம் உரைக்கும் பாடகளாகும்.

முற்றிய தினைக்கதிர்களைக் கொய்து உண்ணும் சிவந்த வாயினையுடைய கிளியே! நீ களவுகொண்டு பெறும் தினைக்கதிரை அச்சமின்றிக் கொய்து உண்பாயாக. என்னுடைய குறையையும் தீர்ப்பாயாக. பலாமரங்கள் நிறைந்த சாரலையுடைய எம் தலைவருடைய நாட்டினிடத்தே நின்னுடைய சுற்றத்தை நாடிச்செல்லும் போது இம்மலைக்குரிய நின் காதலி மீண்டும் தினைப்புனத்தைக் காவல்புரிவதில் ஆயினள் என்று அவரிடத்தே கூறுமாறு நின்னை வேண்டுகிறேன் என்று தலைவி கிளியிடம் வருத்தம் கொண்டு கூறியது இப்பாடலாகும். இதே உணர்வை ஓர் அகநானூற்றுப் பாடலும் சுட்டுகிறது.

"கானலும கழறாது; கழியும் கூறாது;
தேள்இமிர் நறுமலர்ப் புன்னையும் மொழியாது
ஒருநின் அல்லது பிறிதுயாதும் இலனே;
இருங்கழி மலர்ந்த கண்போல் நெய்தல்
கமழ் இதழ் நாற்றம் அமிழ்துஎன நசைஇத்
தண்தாது ஊதிய வண்டினம் களிசிறந்து,
பறைஇ தளரும் துறைவனை, நீயே,
சொல்லல் வேண்டுமால் - அலவ, பல்கால்

கைதைஅம் படுசினை எவ்வமொடு அசாஅம்
கடற்சிறு காக்கை காமர் பெடையொடு
கோட்டுமீன் வழங்கும் வேட்டம்மடி பரப்பின்
வென்இறாக் கனவும் நள்ளென் யாமத்து
நின்உறு விழுமம் களைந்தோள்
தன்கூறு விழுமம் நீந்துமோ? எனவே”[2] (அகம்.170)

நண்டே! தலைவனது கடற்கரை ஊரில் நீரோடையில் நெய்தல் மலர்கள் மலர்ந்து கண்ணைப் போல் தோன்றும். அதன் மணத்தை அமுத என விரும்பும் வண்டுக் கூட்டம் மகரந்தப் பொடியை உண்டு பறக்காமல் ஓய்வுகொள்ளும். என் தலைவனுக்கு என் நிலையை கடற்கரைச் சோலையும், உப்பங்கழியும், புன்னை மரமும் கூற இயலாது. அவை இயங்காதவை.

அதனால் எனக்கு உன்னைத் தவிர வேறு துணையில்லை. தாழையின் தாழ்ந்த கிளையில் கடக்காக்கைத் தன் பெடையொடு பசிக்கு ஒன்றும் பெறாமல் சோர்வாய் அமர்ந்திருக்கும். அப்போது கடலில் பரதவர் வேட்டையாடாத இடத்தில் சுறாமீனைத் தான் பிடித்துத் தின்பதாகக் கனவுகாணும். அந்த நள்ளிரவில் நீ வர உன்னைக்கண்டு உனது துயரினை நீக்கியவள் தலைவி. அவள் இப்போது தன் துயரினை நீக்க வல்லவளோ என்று தலைவனிடம் சென்று நீதான் கூறவேண்டும் எனற் இப்பாடல் நற்றிணைப்பாடலை ரத்து விளங்குவதைக் காணமுடிகின்றது.

தலைவன் கொடிய காட்டு வழியிடையே வருதலை எண்ணிய தலைவி அதில் உள்ள இடரை நினைத்துக் கவலையோடு கூறுவது

“பூம்பொறி உழுவைப் பேழ் வாய் ஏற்றை
தேம் கமழ் சிலம்பின் களிற்றொடு பொரினே
துறுதல் மீமிசை உறுகண் அஞ்சாக்

..................................................

ஆர்கலி வெற்பன் மார்பு நயந்து றையும்

யானெ அன்றியும் உளர்கொல் பானாள்

பாம்புடை விடர ஓங்குமலை மிளிர

....................................................

நோக்கரும் சிறுநெறி நினையு மோரே" (நற்.104)

என்னும் பாடல் வரியின்மூலம் காட்டில் படும் துன்பங்களை எண்ணி வருத்தும் விதமாய் அமைந்துள்ளது.

மேலும் தலைவன் மனஞ்செய்து கொள்ளாது நீடித்தலால் தலைவியின் ஆற்றாமை அறிந்து அவர் வந்து எய்துவராதலின் நீ வருந்தாதே என்று கூறுகின்ற தோழியை நோக்கி தலைவி வருந்துவதாக கீழ்க்காணும் பாடலும் காணப்படுகின்றது.

"தீமை கண்டோர் திறத்தும் பெரியோர்

தாமறிந்து உணர்க என்ப மாதோ

................................................

ஏகல் அடுக்கத்து இருள்முகை யிருந்த

குறிஞ்சி நல்லூர் பெண்டிர்

இன்னும் ஓவார் என்திறத்து அலரே" (நற்.116)

"இவ்வடிகளில் தலைவியின் வருத்தநிலைகளை அறியமுடிகின்றது. இதனை மனத்தின் நீங்காது நிலைபெற்ற காதலுறவை நினைக்கவும் கூடாது எனத் தடைசெய்வதால் கலக்கம் உண்டாகின்றது"[3] என்று தட்சிணாமூர்த்தி விளக்குகின்றார்.

களவொழுக்கம் மேற்கொண்ட தலைமகன் பிரிவுக்காலத்துத் தலைமகள் தான் வேறுபடுவதைச் சிறைப்புறத்தானாகிய அவனறிந்து இனிப் பிரியாது வரைத்துறையு மாற்றானே தோழியை நோக்கி என்

காதலால் பிரிவால் என் உடம்பு மிகவும் சுருங்கிவிட்டது என்னுடைய சிறிய வளையலும் கொண்ட என் கையை விடுத்தனன். ஆதலின் அவன் வாழ்கவென வருந்திக் கூறுவது இப்பாடலின்வழி அறியப்படும் பொருளாகும்.

"திருந்து கோல் எல்வளை வேண்டியான் அழவும்,
அரும்பிணி உறுநர்க்கு, வேட்டது கொடாஅது
...............................................
மலை கெழு நாடனொடு நம்மிடைச் சிறிய
தலைப்பிரிவு உண்மை அறிவான் போல
நீப்ப நீங்காது, வரின் வரை அமைந்து
தோள்பழி மறைக்கும் உதவிப்
போக்கில் பொலந் தொடி செறீஇயோனே" (நற்.136)

என்னும் பாடல் அடி களவொழுக்கத்தில் தலைவன் பிரிதலால், தலைவி தன் மேனி வேறுபடுவதனை உணர்த்தும் தலைவன் தன்னை விரைந்து மணம் புரிந்து கொள்ளவேண்டும் எனும் கருத்தினள். ஆனால், அக்கருத்துப் பொருந்துமாறு சிறைப்புறமாகத் தலைவன் இருக்கத் தோழியிடம் "யான் தோள்வளை வேண்டுமெனத் தந்தையிடம் கூற என் காதலன் பிரிவினால் என்னுடம்பு நன்கு இளைந்தலும் கழன்று விழாத வண்ணம் சிறிய வளையாக என் தந்தை செய்துவந்தார். ஆதலின் அவர் வாழ்க" என வருந்தியுரைப்பது ஆகும். இதன் மூலம் தலைவியின் துன்பநிலைகளை அறியமுடிகின்றது.

**வரைவு வேண்டிப் புலம்புதல்**

தலைவன் மழைக்காலத்து இரவிலும் களவொழுக்கத்தை விரும்பி வருதலைக் கண்டு வருந்திய தலைவி அவன் செயலை எண்ணிப் பெரிதும் கவலை கொள்கிறாள். தலைவன் சிறைப்புறமாக இருப்பதை

*அறிந்து அவன் செவியுறுமாறு தன் தோழியை நோக்கி வருந்திக் கூறுவதைக் கீழ்க்காணும் பாடல் சுட்டுகிறது.*

*“பெருங் களிறு உழுவை தாக்கலின் இரும் பிடி*
*கருவி மாமழையின் அரவம் அஞ்சுபு,*
*போது ஏர் உண் கண் கலுழவும், ஏதில்*
*பேதை நெஞ்சம் கவலை கவற்ற*
*..........................................*
*பிணவுப் புலி வழங்கும் அணங்கருங் கவலை*
*..........................................*
*இரவில் வருதல் அறியாதேற்கே” (நற்.144)*

*மிகக் கொடிய விலங்குகளை உடைய காட்டுவழியே நம் தலைவன் வருவார். அக்காடானது பிளந்த வாயை உடைய பெண்புலி இரைதேடி உலவிக்கொண்டிருக்கும் காட்டாற்றில் வெள்ளம் புரளவும் அதையும் தலைவர் கடந்து வருவார். அவர் வருவதை ஆய்ந்தறியாத பேதமை உடையவளானேன் நான். புலியானது ஆண்யானையை தாக்க கலங்கிய பெண்யானை போன்று நானும் கலங்கினேன். இரவில் வரவேண்டாம் என்று நான் அவரிடம் சொல்லாத அறியாமையால் நான் இந்த நிலைக்கு ஆளாயினள் என்று வருந்திக் கூறுகின்றாள்.*

*“நோயும் கைம் மிகப் பெரிதே; மெய்யும்*
*தீஉமிழ் தெறலின் வெய்தா கின்றே*
*ஒய்யெனச் சிறிதுஆங்கு உயரியர் பையென*
*முன்றில் கொளினே நந்துவள் பெரிதுஎன*
*நிரைய நெஞ்சத்து அன்னைக்கு உய்த்து ஆண்டு*
*........................................................*
*அண்ணல் நெடுவரை ஆடி தண்ணென*

*வியல் அறை மூழ்கிய வளிஎன்*

*பயலை ஆகம் தீண்டிய சிறிதே" (நற்.236)*

*எனும் பாடலில் தலைவன் திருமணம் செய்வதற்கு காலத்தை கடத்துகின்றான். அதனால் தலைவியானவள் வருந்துகின்றாள். அவளைத் தோழி தேற்றுகின்றாள். தலைவன் சிறைப்புறமாக இருப்பதை, தலைமகன் தான் சொன்ன சொல் தவறிவிட்டான். தலைவியின் துயரம் பெரியதாகிறது. அதனை அறிந்த தோழி தலைவன் தவறாமல் வருவான் என்று கூறுகின்றாள். அச்சூழ்நிலையில் தலைவன் மறைவாக நிற்பதை அறிந்த தலைவி தலைவன் கேட்கும் விதமாக தோழியிடம் தலைவி பேசுவதாய் அமைகின்றது.*

*"நோயும் கைம்கெப் பெரிதே; மெய்யும்*

*தீஉமிழ் தெறலின் வெய்தா கின்றே*

*ஒய்யெனச் சிறிது ஆங்கு உயிரியர் 'பையென*

*முன்றில் கொளினே நற்துவள் பெரிது' என" (நற்.236)*

*தலைவன் மணம் புரியக் காலந்தாழ்த்துவதால் வருநதிய தலைவி, தலைவன் சிறைப்புறத்தானாக இருப்பதுணர்ந்து தோழி! என் காமநோய் மிகுதியாயிற்று, உடலும் வெப்பத்தை உடையதாயிற்று, இனியும் உயிர் வாழ்தல் அரிது, ஆயினும் நாடனுடைய மலையிலிருந்து வீசுங் காற்றினால் நான் உய்ந்திருத்தலும் கூடும். எனவே அன்னையிடம் சென்று இவளை முன்றிலில் இருத்தினால் உய்வாள் எனச் சொல்வாய் என்று வருந்திக் கூறியது.*

*மேலும், இப்பாடல் அடியில் தீயுமிழ் தெறலின் என்னும் அடிகள் தீயை உமிழ்ந்தாற்போல காமநோய் என் உடம்பை தாக்குகின்றது என்றும், அதனால் என்னுடைய வளையல்கள் நெகிழ்ந்தன என்று வருந்தி மொழிகின்றாள். இதனை குறுந்தொகை பாடல் ஒன்றும்,*

*"எவ்வி இழந்த வறுமையாழீப் பாணர்*

*பூவில் வறுந்தலை போலப் புல்லென்று*

*இனைமதி வாழிய நெஞ்சே"[4] (குறுந்.19:1-3)*

*எனக் குறிப்பிடுகின்றது.*

**பொருள் காரணமாகப் பிரிந்த தலைவனை எண்ணி வருந்துதல்**

*திருமணம் செய்து கொள்ளுவதற்குப் பொருள் ஈட்டுவதற்காகத் தலைவன் பிரிகின்றான். அதனால் தலைவி மிகவும் வருந்தி உடல் மெலிகின்றாள். இதனை அறிந்த தோழி அறத்தொடு நின்று மணம் நடைபெறச்செய்வேன் என்று உறுதிபட கூறுகின்றாள். அதற்கு தலைவி தன் ஆற்றாமை தோன்றக் கூறியதாக இச்செய்யுள் அமைகின்றது.*

*"விழுந்த மாரிப் பெருந்தண் சாரல்*

*கூதிர்க் கூதளத்து அலரி நாறும்*

*மாதர் வண்டின் நயவரும் தீம்குரல்*

*மணம்நாறு சிலம்பின் அசுணம் ஓர்க்கும்" (நற்.244)*

*என்பது அப்பாடலாகும்.*

*பல நாட்களாகத் தலைவியை மணந்து கொள்ளாமல் தலைவன் வந்து சென்று கொண்டிருக்கிறான். இன்பத்தை மட்டுமே நாடி தலைவியைச் சந்தித்துப் பிரிந்து போகின்றான். ஆயினும் தலைவி தலைவன் வரும் வழியில் காணப்படும் இன்னல்களை எண்ணித் தலைவி பெரிதும் வருந்துகின்றாள். தலைவியைத் தோழி பலவாறு தேற்றுகின்றாள். ஆயினும் தாங்க இயலாத பிரிவுத் துயரத்தால் தலைவி உரைப்பதாக இப்பாடல் அமைகின்றது.*

*"வாரல் மென்தினைப் புலர்க்குரல் மாந்தி,*

*சாரல் வரைய கிளையுடன் குழீஇ,*

..........................................

*புணரின், புணருமார் எழிலே : பிரியின்,*

*மணிமிடை பொன்னின் மாமை சாய என்*

*அணிநலம் சிதைக்குமார் பசலை : அதனால்*

*அசுணம் : கொல்பவர் கைபோல், நன்றும்,*

*இன்பமும், துன்பமும் உடைத்தே,*

*தண்கமழ் நறுந்தார் விறலோன் மார்பே" (நற்.304)*

*தலைவியானவள, தலைவன் திருமணம் செய்துகொள்ளாமல் களவிலேயே பலநாட்கள் கழித்த தலைவனை நினைத்து அதனால் வரும் துன்பம் குறித்து வருந்தினாள். தோழியும் அவளிடம் வருந்தாதே எனப் பலகாலம் கூறித் தேற்றுவாள். தலைவி அதனைத் தாங்காது பதிலுரைப்பாள். தலைவி தலைவனோடு சேர்ந்தபோது அழகு மிகுந்தது. அவனைப் பிரிந்தபோது பசலை தோன்றியது. ஆகையால் அவனின் மார்பு இன்பமும், துன்பமும் உடையதென்று கூறுகின்றாள்.*

*அவளரின் இத்தகைய பேச்சு தலைவன் விரைந்து வந்து மணம் செய்து கொள்ள வேண்டும் என இரங்கிக் கூறுவதாக அமைகின்றது.*

*"இகுளை தோழி! இஃது என் எனப் படுமோ*

*குவளை குறுநர் நீர் வேட்டாங்கு*

*நாளும் நாள் உடன் கலவவும், தோளே*

*தொல்நிலை வழீஇயநின் தொடிஎனப் பல்மாண்*

*உரைத்தல் ஆன்றிசின்நீயே விடர்முகை*

..........................................

*தலைநாள் அன்ன பேணலன், பலநாள்,*

*ஆர்இருள் வருதல் காண்பேற்கு,*

*யாங்குஆ கும்மே, இலங்குஇழை செறிப்பே?" (நற்.332)*

*என்பதும் தலைவி வருந்தியுரைக்கும் பாடலேயாகும்.*

தலைவன் களவில் நாளும் வந்தொழுகவும் அவன் பிரிந்த செல்லும் காலத்து வருந்தினள். மேனி வேறுபட்ட தலைவியைத் தோழி வினவியும் ஆற்றுமாறு வற்புறுத்தியும் கூற அதனை மறுத்த தலைவி காதலன் அரிய இருளில் வரக்கானும் போது என் அணிகள் எங்ஙனம் செறிந்தனவாய் ஆகும் என்று வருந்திக் கூறுகிறார்.

**தன்னை ஆற்றுவிக்கும் தோழியிடம் புலம்புதல்**

தலைவன் தன்னை மணந்து கொள்ளும் முயற்சியைத் தள்ளிக் கொண்டே இருப்பதைக் கண்டு தலைவி மிகவும் வருந்தி கலங்கி நிற்கின்றாள். அதனை அறிந்து தோழி தலைவன் சொல் தவறமாட்டான் என்று கூறுகின்றாள். அதற்கு மறுமொழியாய் தலைவி வருத்தமுற்று கூறுகின்றதாய் அமைந்த பாடலொன்று,

"முழங்கு கடல் முகந்த கமஞ்சூல் மாமழை
மாதிர நனந்தலை புதையப் பாஅய்
........................................................
அருவி இழிதரும் பெருவரை நாடன்
நீர்அள நிலையன் பேர்அன் பினன்எனப்
........................................................
காணவீடுமோ தோழிஎன் நலனே" (நற்.347)

என்பதாகும்.

வேனிற்காலத்தில் தவளையானது வெப்பத்தை தவிர்ப்பதற்காக மணலின் உள்சென்று புகுந்திருக்கும். வெப்பத்தை தணிந்த பின்னர் மீண்டும் வெளியே வரும். என் அழகும் அவர் பிரிவு காரணமாக வாடிப்போகிறது. ஆனால் என் பண்பு என் உள்ளேயே சென்று மறைந்து ஒடுங்கிக் கிடக்கிறது. கடலிடத்தே நீரை எடுத்துக் கொண்டு வானிலே சென்று மின்னல் மின்னி மழை பொழியும், இடி ஓசை கேட்ட பாம்புகள் அஞ்சி அழிந்துபோகும். மேகங்கள் குன்றினை வளைத்து

மூடிக்கொள்ளும். மழை பெய்வதை வரவேற்பதுபோலப் புலையன் கொட்டிளை முழக்குவான். அம் முழக்கம் போன்ற ஓசையோடு அருவி கொட்டும். அத்தகைய நாட்டிற்கு உரியன் நம் தலைவன். அவன் நிலையானவன் என்றும், பேரன்பினை உடையவன் என்றும் பாராட்டும் பரிசிலர்கள் பேசிய புகழ்பாடும் மொழிகளைக் கேட்டு உயிரோடு இருக்க என் பண்பு என்னை விட்டு வைக்குமோ என்று தலைவி மொழிகின்றாள். இங்கு தலைவனை நினைத்துப் புலம்பும் தலைவியைக் காணமுடிகின்றது.

**முல்லைத்திணையும், தலைவியும்**

சங்க அக இலக்கியங்களில் பெண்ணின் கற்பை வலியுறுத்துகின்றன. தலைவியின் தலைமைப் பண்பாகக் கற்புடைமையே சுட்டப்படுகின்றது. மேலும் முல்லை என்ற சொல்லுக்குக் 'கற்பு' என்று பொருளும் உண்டு என்பதை

"முல்லை சான்ற கற்பின்
மெல்லியள் குறுமகள் உறைவின் ஊரே"[5] (அகம்.274)

என்று அகநானூற்று பாடல் விளக்குகின்றது.

முல்லைக்குரிய நிலம், காடும், காடைச் சார்ந்த இடமுமாக கார்காலமும், மாலைப்பொழுதும் முல்லைத்திணைக்குரிய பொழுதுகளாகும். இதனை தொல்காப்பியர், "காரும் மாலையும் முல்லை" எனக் குறிப்பிடுவார். இத்தகைய கார்காலம் வந்த மாலைப்பொழுதில் தலைவனைப் பிரிந்த தலைவிக்கு கார்காலம் துன்பம் தருவதாகும் என்பதை விளக்குகின்றார். நற்றிணை முல்லைத்திணையில் தலைவி தோழியிடம் கலங்கி மொழியும் 2 பாடலும் தலைவி நெஞ்சிடம் கலங்கி மொழியும் 3 பாடலுமாக மொத்தம் ஐந்து பாடல்கள் உள்ளன.

**தலைவி தோழியிடம் கலங்கி மொழிதல்**

*தலைவியைப் பிரிந்த தலைவன் வினைமேற்சென்றான், அவன்தான் மீண்டும் வருவேன் என்று குறித்த பருவம் வந்தும் அவன் வரவில்லை. இதனால் வருந்திய தலைவி முல்லை நிலத்தில் கார்காலத்தில் தோன்றும் இயற்கை தலைவியை பெரிதும் வருத்தியது. அந்நிலையில் தலைவிக்கு குயில் கூவும் ஓசையும், ஆற்றுநீர்ப் பெருக்கும் துன்பம் தருகின்றன. கருமலர் விற்கும் மகளும் எனக்குக் காமநோயைத் தோற்றுவித்துக் கொடுமை செய்கின்றனள். யான் எவ்வாறு பிழைப்பேன் என்று தலைவி தோழியிடம் வருந்திக் கூறுகின்றதை கீழ்வரும் பாடல் அடி விளக்குகின்றது.*

*"அழுந்துபடு விழுப்புண் வழம்புவாய் புலரா*
*எவ்வ நெஞ்சத்து எஃகு எறிந்த தாங்கு*
*பிரிவில புலம்பி நுவலும் குயிலினும்*
*...............................................*
*பித்திகை விரவுமலர் கொள்ளீ ரோ என*
*வண்டு சூழ் வட்டியள் திரிதரும்*
*தண்டலை உழவர் தனிமட மகளே" (நற்.97)*

*இப்பாடல் தலைவி தோழியிடத்து தலைவனை நினைத்து புலம்புவதாய் அமைந்துள்ளது. மேலும் குயிலையும், ஆற்றின் கொடியதன்மையையும் அவ்வாற்றின் மலரை விற்கும் பெண்ணையும் தன்னுடைய துன்பத்துடனும் ஒப்பிட்டு புலம்பிக் கூறுகின்றாள்.*

**மேகத்திடம் தலைவி மொழிதல்**

*"வறம்கொல வீந்த கானத்து குறும்பூங்*
*கோதை மகளீர் குழூஉநிரை கடுப்ப*
*வண்டுவாய் திறப்ப விண்ட பிடவம்*
*மாலை அந்தி மால்அதர் நண்ணிய*

............................................

*உர உரும் உரறும் நீரின் பரந்த*

*பாம்புபை மழுங்கல் அன்றியும் மாண்ட*

*கனியா நெஞ்சத் தானும்*

*இனிய அல்லநின் இடி நவில் குரலே" (நற்.238)*

*தலைவன் மணம் புரியக் கருத்தினனாய்ப் பொருள் தேடச் சென்றனன். தான் வருவதாகக் குறித்த பருவம் வந்தும் தலைவன் வராததால் தலைவி வருந்தும் பாடலாகும்.*

*தலைவி மேகத்தை நோக்கி புலம்புகிறாள். குறிப்பாக இடிதாக்கியதால் பட்டுப்போயுள்ள காடும் அக்காட்டில் ஆயர் கூட்டம் போல் வண்டுகள் வந்து தேன் உண்டதையும், அந்த சூழ்நிலையில் வரும் கார்மேகத்தை பார்த்து தலைவியானவள் தலைவனின் மனநிலையை அறிந்து வந்தாயா என்றும் தலைவனின் உள்ளத்தை கனியச் செய்யமாட்டாயா? அவ்வாறு நீ செய்யவில்லை என்றால் உன்னுடைய முழக்கம் எனக்கு இனிமை பயக்காது என்று புலம்பும் நிலையை அறியலாம்.*

*இதனையே குறுந்தொகை பாடலும்*

*"கவலைத்து என்ப அவர் தேர் சென்றஆறே*

*அதுமற்று அவலம் கொற்றாது*

*நொதுமல் கழறும் இவ்அழுங்கல் உளரே"[6] (குறுந்.12)*

*எனச் சுட்டுகிறது.*

*இங்கு தன் தலைவன் சென்ற வழியின் கொடுமையை நினைத்து தலைவி வருந்தியதை காணமுடிகின்றது.*

**கார்காலத்து வராத தலைவனை நினைத்துப் புலம்புதல்**

*பொருள் ஈட்டச் சென்ற தலைவன் மீண்டும் கார்காலத்தில் வருவதாகக் கூறிச் சென்றான். கார்ப்பருவம் வந்தது, தலைவன் வரவில்லை.*

*கார்காலம் வந்ததால் மேகம் கடலுக்குள் சென்றுவந்து எங்கும் இருளச் செய்து மழைபொழிகின்றது. புன்செய் காட்டுக்குள் கோவலர்கள் இரவில் மரத்தின் வேரடியைக் கொளுத்தினர். அப்பொழுது மரம் வெந்ததுபோல் தலைவரைக் காண என் மனம் கனலாகிறது என்று தன்னுடைய நிலையை கீழ்காணும் பாடல் விளக்குகின்றது.*

*“அம்ம வாழி, தோழி! காதலர்*
*நிலம்புடை பெயர்வதாயினும், கூறிய*
*சொல் புடைபெயர்தலோ இலரே; வானம்*
*நளிகடல் முகந்து, செறிதக இருளி*
*கனைபெயல் பொழிந்து, கடுங்குரல் பயிற்றி*
*கார்செய்து, என் உழை யதுவே ஆயிடை*
*கொல்லைக் கோவலர் எல்லி மாட்டிய*
*பெருமர ஓடியல் போல*
*அருள் இலேன், அம்ம, அளியேன் யானே” (நற்.289)*

*என்று தலைவியின் புலம்பலை விளம்புகின்றது இப்பாடல் அடிகள்.*

*“சொல்லிய பருவம் கழிற்தன்று எல்லையும்*
*மயங்குஇருள் நடுநாள் மங்குலோடு ஒன்றி*
*ஆர்கலி வானம் நீர்பொதிந்து இயங்கப்*
*பணியின் வாடையொடு முனிவுவந்து இறுப்ப,*
*இன்ன சில்நாள் கழியின், பல்நாள்*

..............................................

..............................................

*உயிர் செலத் துனைதரும் மாலை*

*செயிர்தீர் மாரியொடு ஒருங்கதலை வரினே" (நற்.364)*

*தலைவியை திருமணம் செய்யும் பொருட்டு தலைவன் பொருள் வேண்டித் தலைவியைப் பிரிகின்றான். அவ்வாறு அவன் பிரியும்பொழுது மீண்டும் வருவதாகக் குறிப்பிட்ட பருவம் வந்து காலமும் கழிந்துவிடுகின்றது. தலைவன் வருகை புரியவில்லை. இதனால் தலைவி மிகுந்த வருத்தம் அடைகின்றார். அப்பொழுது தோழியைப் பார்த்து நீ நெடுங்காலம் வாழ்வாயாக தலைவன் கூறியகாலம் வரவில்லை. வாடடைக்காற்றும் என்மீது கோபம் கொண்டு என்னை வாட்டுகின்றது. கோவலர்கள் ஊதும் புல்லாங்குழலில் இருந்து வரும் ஓசையும் என்னைத் தலைவனைத் நினைத்து வருத்துகின்றது. மேலும் மழையும் வருமாயின் நான் உயிர் வாழ்ந்திருக்கவே மாட்டேன். அதை நீ காணப்போகிறாய் என்று கூறுகின்றாள்.*

*இதனையே ஐங்குறுநூறு பாடல் ஒன்றும் குறிப்பிடுகின்றது. தலைவன் தலைவியைப் பிரிந்து பொருள் ஈட்டச் செல்லும்போது திரும்பிவருகிற காலத்தைச் சொல்லிப் போவான். தலைவியும் அக்காலம் வரும்வரை தலைவனை எதிர்நோக்கி காத்து இருப்பாள். குறித்த பருவத்தில் தலைவன் வராததை கண்டு தலைவி மிகவும் வருந்துவாள். தன் கைவளையல்கள் எல்லாம் கழன்று விழும்படி மிகவும் மெலிந்து காணப்படுவாள். இந்நிலையில் தோழியைப் பார்த்து*

*"அம்ம வாழி, தோழி! சிறியிலைக்*

*குறுஞ்சினை வேம்பின் நறும்பழம் உணீஇய*

*வாவல் உகக்கும் மாலையும்*

*இன்கொல், தோழி! அவர் சென்ற நாட்டே?"[7] (ஐங்.339)*

தோழியே சிறிய இலைகளையும் சிறிய சினைகளையும் உடைய வேம்பின் நறுமணமிக்க பழங்களை உண்ணுதற் பொருட்டு வௌவால்கள பறந்து திரியும் மாலைப்பொழுதும், நம் தலைவர் சென்ற நாட்டில் இல்லையோ என ஐயுறுகின்றேன் என்று கூறுவதாகக் காணப்படுகின்றது.

"அருந்துயர் உழத்தலின் உண்மை சான்ம்எனப்
பெரும்பிறிது இன்மையின் இலேனும் அல்லேன்
.............................................................
நடுங்கல் ஆனா நெஞ்சமொடு, இடும்பை
யாங்கனம் தாங்குவென்மற்றே? ஓங்கு செலல்
கடும்பகட்டு யானை நெடுமான் அஞ்சி,
ஈர நெஞ்சமோடு இசை சேண் விளங்க
தேர்வீசு இருக்கை போல
மாரி இரீஇ மான்றன்றால் மழையே" (நற்.381)

அஞ்சி என்னும் அரசன் யானைப் படையினையும், குதிரைப் படையினை உடையவன். அவனுடைய புகழ் நெடுந்தொலைவிற்குச் சென்றது. அவனை நாடி வருபவர்களுக்கு வேண்டியதைக் கொடுத்தான். தேர்களைப் பரிசாக கொடுத்தான். அவனது கொடைச்செயல் விளக்கும் அரசனைப்போல மேகமானது நெடுந்தொலைவில் இருந்து வந்து நிலைத்திருந்து மழைபொழிகின்றது. அந்த மழையானது தலைவனை நினைவு கூறச் செய்கின்றது. கார்காலம் வந்தும் தலைவன் வரவில்லை எனினும் நான் உயிர்வாழ்வது முற அதனால் நான் தலைவன் மீது அன்பு இல்லாதவளாய் ஆகியுள்ளேன். மேலும் கரையை இடித்துக் கொண்டு பாய்ந்தோடும் காட்டாற்றின் கரையின் நின்ற மாமரத்தின் வேர்களெல்லாம் தெரியும்படி வேரடி மண்ணை அரித்துக்கொண்டு வேர் இல்லாமையால் அதன் அழகான

*தளிர்கள் நடுங்கிக்கொண்டு நின்றன. அதுபோல தலைவியும் வாழ்வில் நிலைகொள்ளாமல் தவிக்கும் நிலையை அறியமுடிகின்றது.*

*தலைவனை எதிர்நோக்கி வழிமேல் விழிவைத்து காத்திருக்கும் தலைவியின் நிலைவும் கார்காலம் வந்தும் தலைவன் வாராமையால் தாங்குவதற்கு அரிய துன்பத்தைப் பெற்று வருந்தி தன் அன்பையே எடைபார்க்கும் சூழல் இப்பாடல் வெளிப்படுத்துகின்றது.*

**மருதமும், தலைவியும்**

*மனிதன் உயிர் வாழ்வதற்கு தேவையான உணவு பொருள்களை உற்பத்தி செய்வது மருதநில மக்களின் தொழிலாகும். மருதநில மக்களின் ஒழுக்கம் ஊடலாகும். தலைவன் தலைவியிடத்து உள்ள ஊடலைத் தனித்தல் ஊடல் உணர்த்தலாகும். சங்க இலக்கிய மக்கள் இயற்கையோடு இயந்த வாழ்வினை மேற்கொண்டு வாழ்ந்தனர். மருதத் திணையில் ஊடல் அதிகம் காணப்படுவது இயல்பு ஆகும். தமிழ் இலக்கியத்தில் அகம், புறம் ஆகிய இரண்டில் திணை, துறை, கூற்று ஆகியவற்றின் அடிப்படையில் பிரித்துள்ளதை காணலாம்.*

*மருதத்திணையில் ஊடல் நிமித்தம் காரணமாக தலைவனை பிரிந்த தலைவி, பரத்தை இருவரும் தமது உள்ளத்து வேட்கையைத் தங்களின் நிலத்தின் கருப்பொருள்களோடு இணைத்து பாடும் விதம் அக்காலப் புலவர்கள் புனைந்துள்ளது சிறப்பாகும்.*

*தலைவி மருதத்திணையில் நான்கு (4) பாடல்களில் கலங்கி மொழிக்கின்றாள்.*

**பொய்யுரைக்கும் தலைவனை எண்ணி வருந்தியுரைப்பது**

*பரத்தையிற் பிரிந்த தலைவன் யாரையும் அறியேன் என்கின்றான். அதற்கு தலைவி நின் மார்பிலே உறங்கி இப்போது அவ்வின்பம் கிடைக்காத காரணத்தால் இத்தெருவிடைச் செல்லும் அப்பரத்தையைக்*

*கண்டேம். பிறகு நீ ஏன் வீணாகப் பொய்சொல்கின்றாய் என வருந்தியும் வெகுண்டும் கூறுவதாய் அமைந்துள்ளது.*

*"ஐய குறுமகட் கண்டிகும் வைகி*
*மகிழ்நன் மார்பில் துஞ்சி, அவிழ் இணர்த்*
*தேம் பாய் மராம் கமழும் கூந்தல்*
*துளங்கியல் அசைவர கலிங்கம் துயல்வர*
..............................................
*மார்புறு முயக்கிடை ஞெமிர்ந்த சோர் குழை*
*பழம் பிணி வைகிய தோள் இணைக்*
*குழைந்த கோதை கொடி முயங்கலளே" (நற்.20)*

*தலைவியைச் சந்திக்க தலைவன் இரவும் பகழும் வரத் தொடங்கினான். சிறிதுகாலம் சென்ற பின்னர் அவனைக் காண்பதில் தடை ஏற்பட்டு, அவனால் வர இயலவில்லை. அதனால் தலைவியின் காதல் வேட்கை அதிகரிக்கின்றது. இதனால் அவள் நாரையை நோக்கி சிறிய வெளியே நாரையே தலைவர்க்கு நான்படும் துன்பத்தை நீ கூறவில்லை எம் ஊரின் இரையை அவர் உளர்வது செல் என்று தலைவி நாரையிடம் வருந்தி கூறும் நிலையை கீழ்க்காணும் பாடல்அடியால் காணலாம்.*

*"சிறுவெள்ளாங்குருகே சிறுவெள்ளாங் குருகே*
*துறைபோகு அறுவைத் தூமடி அன்ன*
*நிறம்கிளர் தூவிச் சிறுவெள்ளாங் குருகே*
*எம்ஊர் வந்துஎம் உண்துறைத் துழைஇச்*
..............................................
*ஆங்கண் தீம்புணல் ஈங்கண் பரக்கும்*
*கழனி நல்லூர் மகிழ்நர்க்கு என்*
*இழை நெகிழ் பருவரல் செப்பாதோயே" (நற்.70)*

நீர்த்துறையில் புதிய வெள்ளாடையைத் துவைக்க அது பெற்ற வெண்மை நிறம் போலக் காணுகின்ற சிறிய, வெளியே குறுகே தலைவனின் ஊரிலிருந்து வருகின்ற இத்தீம்புனல், எங்கள் ஊரில் உள்ள வயல்களில் பாயும் அத்தகைய சிறப்புடைய தலைவனின் கண் சென்று என் அணிகலன்கள் உடலில் வாட்டடத்தால் கழன்று போகின்றன. அத்துன்பத்தை இதுவரை நீ தலைவனிடம் சொல்லவில்லை. ஆனால் எம் ஊருக்கு நீ வருகின்றாய். மேலும் அவன் ஊரிலிருந்து வரும் நீரில் நிரம்பிய பொய்கைத் துறையில் புகுந்து தழுவி சினையுள்ள கெளிற்று மீனைத் தின்கின்றாய். எம்மூர் வந்து உண்ட நன்றி மறவாமல் தலைவனிடம் சென்று எம் நிலை செல்லுகின்ற அன்பை உடையையோ? அன்றேல் பெருமறதியை உடையைசூயா? இவற்றில் ஒன்றினை ஆராய்ந்து தக்கவாறு செய்க என்றனள் தலைவி என்பது இப்பாடல் தரும் பொருளாகும். அதுபோல குறுந்தொகைப் பாடலில் தலைவன் வரைவிடை வைத்துப் பிரிந்த காலத்தில் தான் துஞ்சாது இருப்பதற்கான காரணத்தைத் தன் தோழியிடம் கூறும் பொழுது,

"அன்றில் அகவும் நடு இரவிலும்
மன்றம் போழும் இனமணி நெடுந்தேர்
வாராதாயினும் வருவது போலச்
செவிமுதல் இசைக்கும் அரவமொடு
துயில் துறந்தன என் கண்கள்"[8] (குறுந்.301)

என்றுரைப்பதைக் காணமுடிகின்றது.

தலைவி தலைவனின் வரவையே எண்ணியிருப்பதால் இவளுக்குத் தலைவனின் தேரொலி கேட்பது போன்றே இருக்கிறது. தலைவன் பொதுமகளை நாடி பின்பு அவளை விடுத்து தலைவியிடம் வருகின்றான். பின்னர் அவள் தலைவனை நோக்கி என் மாலை வாடுமாறு என்னை விட்டு நீங்கினாய் அதை நான் மறக்கவில்லை என்று

தலைவன் எச்சரிக்கும் விதமாய் என்னைத் தொடாதே என்று வருந்தி கூறுகின்றாள்.

"கழுநீர் மேய்ந்த கருந்தாள் எருமை
பழனத் தாமரைப் பனிமலர் முணைஇ
தண்டுசேர் மள்ளரின் இயலி, அயலது
..............................................
முகை அவிழ் கோதை வாட்டிய
பகைவன் மன் யான் மறந்து அமை கலனே" (நற்.260)

பரத்தையிடம் சென்று வந்த தலைவன் தலைவியைத் தழுவிகின்றான். அப்போது தான் கொண்டிருந்த இனத்தை உள்ளடக்கியும் தலைவனுக்கு உடன்பட்டவர் போன்றும் "ஊரனே" நீ இப்போது என்னை விருப்பமுடையவன் போலத் தழுவுகின்றனை, முன்பு என் மாலை வாடுமாறு செய்த பகைவனும் நீ என்பதை, நான் மறந்திலேன் என்று தலைவி வருந்தியுரைப்பது இதுவாகும்.

"புல்லேன் மகிழ்க! புலத்தலும் இல்லேன்
கல்லா யானைக் கடுந்தேர்ச் செழியன்
படைமான் பெருங்குள மடைநீர் விட்டென
..............................................
..............................................
பைங்காற் செறுவின் அணை முதல்பிறழும்
வாணன் சிறுகுடி அன்ன என்
கோள்நேர் எல்வளை நெகிழ்ந்த நும்மே!" (நற்.340)

தலைவன் சிறிதுகாலம் பரத்தையோடு சுற்றினான். பின்னர் தலைவியை நாடித் தேடி வருகின்றான். அவனது வருகையால் மனம் நொந்து அவன் செயலை இடித்து உரைப்பாராய் பாடல் அமைந்துள்ளது.

**தலைவி நெய்தல்திணையில் கலங்கி மொழியும் பாடல்கள்**

நெய்தல்திணை மக்களின் கடலும் கடல்சார்ந்த பகுதியை உள்ளடக்கிய வாழ்வியல் நிகழ்வுகளைச் சித்தரிக்கின்றது. குறிப்பாக தலைவன் தலைவி சந்திக்கின்ற நிகழ்வுகளும் மீன்பிடிக்கச் சென்ற தலைவன் வரும்வரை காத்திருக்கும் தலைவியின் நிலை பற்றியும் பேசப்படுகின்றன. மேலும் கடற்கரை அருகே உள்ள மணற்கானலில் புதிதாக மலர்ந்த மலர்களையும், இலைகளையும் சேகரிக்கத் தனியாக செல்லும் இளம் பெண்கள் உப்பிட்ட மீனை உலரவைக்கவும் பறவைகள் கொத்திப் போகாமல் மீன்களை பாதுகாக்க வெளியே செல்லும் இடங்களில் காதல் நிகழ்வு அமைவதாக இருக்கிறது. வீட்டில் பெரியவர்கள் கடலுக்கும் உப்பங்கழிக்கும் சென்றுவர நீண்ட நேரம் ஆவதால் இடைப்பட்ட காலத்தில் தலைவன் தன்னை வந்து சந்திக்கவில்லையே என்பதாக நெய்தல் திணைப்பாடல்கள் அமைகின்றன. தொல்காப்பியர் கூறும் தலைவி கூற்றுக்களாக கொள்ளப்படுவன எழுத்திரண்டு”[9] நெய்தல்திணை தலைவி **19** பாடல்களில் கலங்கி மொழிகின்றாள்.

**தோழியிடம் தலைவி கலங்கியுரைத்தல்**

திருமணஞ்செய்து கொள்ளவும், வாழ்க்கை நடத்தவும் பொருள் திரட்டுவதற்குப் பிரிந்த தலைவன் மீண்டும் தலைவியின் வீட்டு வேலி தரமாகவர, அது கண்டு தோழி தலைவிக்கு ஆறுதல் கூறினாள். அதற்குத் தலைவி தன் ஆற்றாமையை எதிர் மொழிந்தாள்.

‘மாஇரும் பரபபகம் துணிய நோக்கி
சேயிறா எறிந்த சிறுவெண் காக்கை
..............................................
பெரும்புல லற்ற நெஞ்சமொடு பலநினைந்து
யானும் இனையேன் ஆயின் ஆனாது

…………………………………………

*நெடுஞ்சினைப் புன்னைக் கடுஞ்சூல் வெண்குருகு*

*உலவுத்திரை ஓதம் வெருஉம்*

*உரநீர்ச் சேர்ப்பனொடு மணவா ஊங்கே' (நற்.31)*

*இப்பாடலில் தலைவியின் இருவேறு நிலைகள் சுட்டப்படுகின்றன. தலைவனுடன் கலந்து பிரிந்த பின்பு முன்னர் இனிதாக இருந்த அதே கடற்கரை தற்போது வெறுப்புடையதாயிருந்தது. நிலவைப் போன்ற மணற்பரப்பில் காற்றின் உதவியுடன் செலுத்தப்படும் கப்பல்கள் பல்வகைப் பண்டங்களைக் இறக்கியிருக்கும். அந்த மணற்பரப்பில் நெடிது வளர்ந்திருக்கும் புன்னை மரத்தில் அமர்ந்திருக்கும் சூல் கொண்ட குருகு அலை ஓசையைக் கேட்டு அஞ்சும், இதுதான் என் முந்தைய நிலைமை. ஆனால் தலைவனைக் கூடிய பின்னர் அத்துறையில் வெண்காக்கை இறால்மீனைப் பற்றி எடுத்துப் பசிய காலையுடைய பெடைக்குத் தரும், இது எனக்கு வெறுப்புடையதாய் உள்ளது என்று தலைவி தோழியிடம் வருந்தி மொழிகின்றாள்.*

*இதுபோல் ஐங்குறுநூற்றில் 441 தலைவன் வருந்தும் பாடல்கள் ஒன்று, "தலைவன் பாசறையில் இருக்கும் நாளில் கார்காலம் நெருங்குகிறது. அப்பொழுது தலைவியை நினைத்தவனாய் தொழில் மேற்கொள்ளுகிறான். கார்காலத்தில் தலைவன் பிரிவில் தலைவி வாடி நோயுற்று உடல் மெலிந்த தோற்றம் பெற்றது போல் தலைவனும் தலைவியை நினைத்து நோயுறுகின்றான். ஐய ஆயின செய்யோள் கிளவி*

*'கார் நாள் உருமொடு கையறப் பிரிந்தென*

*நோய் நன்கு செய்தன எமக்கே*

*யாம் உறுதுயரம் அவர் அறியாளோ நன்றே'[10] (ஐங்.441)*

*என்று தன் துயரம் தலைவி அறிய வேண்டுமென விரும்புவதாகக் காணப்படுகிறது.*

*இன்பத்தில் பெரிதும் ஈடுபட்ட தலைவி, சிறிது காலம் சென்றபின் தலைவன் சிலநேரங்களில் வரவில்லையாதலின் தனிமைத் துன்பம் உற்றுக் தலைவி கலக்கமடைகின்றாள்.*

*'வளைநீர் மேய்ந்து கிளைமுதல் செலிஇ*

*...............................................*

*பெரும்புலம் பின்றே சிறுபுன் மாலை*

*அது நீ அறியின் அன்புமார் உடைய*

*நொதுமல் நெஞ்சம் கொள்ளாது என்குறை*

*இற்றாங்க உணர உரைமதி தழையோர்*

*கொய்குழை அரும்பிய குமரி ஞாழல்*

*தெண்திரை மணிப்புறம் கைவரும்*

*கண்டல் வேலிநும் துறைகிழ வோற்கே' (நற்.54)*

*என்று தலைவி நாரையிடம் மொழிகின்றாள்.*

**பொருள்வயிற் பிரிவால் வருந்துவது**

*திருமணத்தை முன்னிட்டு பொருள் ஈட்டத் தலைவன் பிரிகின்றான். அவனது பிரிவை ஆற்றாளாய தலைவி கனவுகண்டு,*

*'உள்ஊர் மா அத்த முள்எயிற்று வாவல்*

*...............................................*

*சிறுகுடிப் பாதவர் மகிழ்ச்சியும்*

*பெருந்தண் கானலும் நினைந்த அப்பகலே' (நற்.87)*

*என்பதாக இடம்பெறுகிறது.*

*வௌவால் தனக்குக் கிட்டப்பெறாத மிகத் தொலைவில் உள்ள சோடினுடைய ஊராகிய ஆர்க்காட்டிற்குச் சென்று, அங்கு அழிசி என்பவனது பெரிய காட்டில் உள்ள நெல்லிப் பறத்தின் இனிய புளிச்சுவையைச் சுவைத்ததுபோல கனவு கண்டது, அதுபோல தலைவியும் தலைவனுடன் சேர்ந்து மகிழ்ந்தது போல வந்த களவும் இக்*

களவு போல விழித்த பொழுத ஒழிந்து போயிற்று என்று வருந்து கின்றாள். இதனை ஔவையார்,

'வெந்நிறல் கடுவளி பொங்கார்ப் போந்தென
நெற்று விளை உழிஞ்சில் வற்றல் ஆர்க்கும்
மலையுடை அருஞ்சுரம் என்ப'[11] (குறுந்.39)

என விளக்குவர். பாலை நிலத்தில் காற்று வெம்மையாகவும், வலிமையாகவும், வேகமாகவும் வீசும். தான் சென்றறியாத பாலைநிலம் ஆதலால் அருஞ்சுரங்களையுடையது என முன்னர் தலைவன் கூறியதைக் கேட்டுக் கூறுகின்றாள். இன்பம் துய்த்து இங்கு தங்காமல் கொடிய பாலையில் செலவு மேற்கொண்டு துயருற்று வருந்துகிறாரே என தலைவி தலைவனை நினைந்து வருந்துகிறாள்.

**சிறைப்புறத்தான் கேட்கப் புலம்புதல்**

களவொழுக்கத்தின்கண் தலைவன் எந்நாளும் தலைவியைக் கூடி மகிழ்ந்தான். பின்பு ஒருநாள் தலைவன் சிறைப்புறத்தானாக அவன் கேட்டு மகிழ்ந்து விரைய மணஞ்செய்யுமாறு தலைவி தான் வருந்தும் இயல்பைக் கூறி இவன் சிறந்த மகனா என்ற வினாவை தலைவி தோழியிடம் எழுப்புகின்றாள். இதனை இளந்திரையனார்,

'நோய்அலைக் கலங்கிய மதன்அழி பொழுதில்
காமம்செப்பல் ஆண்மகற்கு அமையும்
யானே, பெண்மை தட்ப துண்ணிதிறன் தாங்கி
கைவல் கம்மியன் கவின்பெறக் கழாஅ
..............................................
மார்பு அணங்கு றுநரை அறியா தோனே' (நற்.94)

என்று அமைந்துள்ளது.

தலைவனின் பிரிவை எண்ணி மெலிவு அடைந்த தலைவியை நோக்கி தோழி தலைவன் பிரிவைப் பொறுத்திருக்குமாறு வேண்டினாள்.

ஆனால் தலைவியோ, இல்வாழ்க்கை என்னும் பொருளைக் காட்டிலும், இனிய பொருள் பிறிதென்று உளது எனக் கருதிச் சென்றனர். அது மட்டுமின்றி என்னைப் பிரிந்தபோது யான் அத்தகைய தன்மை உடையவளாய் இருக்கின்றேன் என்று வருந்திக் கூறுவதாய் கீழ்க்காணும் நெய்தல் தத்தனார் பாடல் (130) விளங்குகின்றது. அப்பாடலாவது,

'வடுஇன்று நிறைந்த மான் தேர்த் தெண்கண்
மடிவாய்த் தண்ணுமை நடுவண் ஆர்ப்ப
கோலின் எறிந்து காலைத் தோன்றிய
செந்நீர்ப் பொதுவினைச் செம்மல் மூதூர்த்
தமதுசெய் வாழக்கையின் இனியது உண்டோ
எனைவிரும்பு உடையர் ஆயினும், நினைவிலர்
நேர்ந்த நெஞ்சும், நெகிழ்ந்த தோளும்
வாடிய வரியும், நோக்கி நீடாது
................................................
ஒருநாள் கூறின்றும் மிலரே, விரிநீர்
வையக வரையளவு இறந்த
எவ்வ நோய்பிறிது உயவுத்துணை இன்றே' (நற்.130)

என்ற பாடல் அடி மூலம் தலைவியின் கலங்கி மொழிதல் புலப்படுகின்றன. இதுபோன்று தலைவி புலம்பும் பாடலொன்று அகநானூற்றில் காணப்படுகிறது.

தலைவன் பரத்தமை ஒழுக்கத்தை மேற்கொண்டான். அதனை அறிந்து தலைவி, தலைவன் இல்லம் வந்தபோது கூடாது மகிழ்ந்திருந்தாள். மறுநாள் தலைவன் தலைவியை நீங்கியிருந்தபோது தோழிக்கு முதல்நாள் தன் தலைவனுடன் கூடாமைக்குக் காரணத்தைக் கூறும் நிலையில் அகநானூற்று பாடல் விளக்கி இவ்வுணர்வை வெளிப்படுத்துகின்றது.

*'அணிகிளர் சாந்தின் அம்பட்டு இமைபக்*
*கொடுங்குழை மகளிரின் ஒடுங்கிய இருக்கை*
*அறியாமையின் அழிந்த நெஞ்சின்*
*ஏற்றுஇயல் எழில் நடைப் பொலிந்த மொய்ம்பின்*
*தோட்டு இருங் சுரியல் மணந்த பித்தை'*[12] *(அக.10)*

*என்பது அப்பாடலாகும்.*

*தலைவன், தலைவி குறிப்பிட்ட இடத்தில் தலைவியைக் கண்டு தலைவன் மீண்டு செல்கின்றான். அவன் செல்லுதலை நோக்கி தலைவி புலம்பினாள்.*

*'நெய்தல் கூம்ப, நிழல்குணக்கு ஒழுக*
*கல்சேர் மண்டிலம் சிவந்துநிலம் தணிய*
*பல்பூங் கானலும் அல்கின் றன்றே*
*இனமணி ஒலிப்ப பொழுதுபடப் பூட்டி*
*மெய்ம்மலி காமத்து யாம்தொழுது ஒழிய*
*தேரும் செல்புறம் மறையும், ஊரொடு*
*யாங்கு ஆவதுகொல் தானே தேம்பட*
*..............................................*
*இன்நகை மேவிநாம் ஆடிய பொழிலே' (நற்.187)*

*தலைவன் பகற்குறி வந்து மீள்கின்றான். அதனைத் கண்ட தலைவி "கானற் சோலையும் இருளால் விளக்கம் குறைந்தது தலைவன் செல்லும் தேரும் மறைந்தது. ஆதலால் இவ்வூரோடு இச்சோலையும் இனி நமக்கு எவ்வகையில் வணையாகுமே" என மமையிற்று கூறியது இப்பாடலாகும்.*

*இதுபோல் மற்றொரு நற்றினைப் பாடல் **196** தலைவி பிரிவுத் துயரம் தாங்காமல் புலம்புவதை விளக்குகின்றது.*

'பளிங்குசெறிந் தன்ன பல்கதிர் இடைஇடை
பால்முகந் தன்ன பசுவெண் நிலவின்
மால்புஇடர் அறியா நிறையுறு மதியம்
சால்பும் செம்மையும் உடையை ஆதலின்
நிற்கரத்து உறையும் உலகம் இன்மையின்
ஏற்கரந் துஉறைவோர் உள்வழி காட்டாய்!
நற்கவின் இழந்தஎன் தோள்போல் சாஅய்
சிறுகுடி சிறுகுடி செரீஇ
அறிகரி பொய்த்தலின் ஆகுமோ அதுவே' (நற்.196)

என்ற பாடல் அடிகள் திருமணம் உறுதிப்பட்டுவிடுகின்றது. தலைவன் அதன் பொருட்டு பொருள் திரட்ட வெகுதூரம் சென்றுவிடுகிறான். தலைவி அவன் பிரிவுத் துயரம் தாங்காமல் புலம்புவதை மொழிகின்றது.

**ஆற்றாமையினால் புலம்புதல்**

தலைவன் பிரிவால் வருந்திய தலைவியை ஆற்றுவித்த தோழிக்கு எங்ஙனம் ஆற்றுவேன் என்று கூறும் நிலையில் வெளிப்படுகின்றது.

'உள்ளின் உள்ளம் வேமே : உள்ளது
இருப்பின், எம் அளவைத்து அன்றே : வருத்தி
வான் தோய்வற்றே காமம்
சான்றோர் அலர், யாம் மரீஇயோரே'[13] (குறுந்.102)

என்ற பாடலில் ஔவையார் சுட்டுகின்றார். சான்றோராயின் பொருட் செல்வத்தை மதிக்காது, அகட்செல்வத்தையே மதிப்பர். ஆதலால் என்னால் விரும்பப் பெற்ற தலைவன் பொருள்மீது பற்றுக் கொண்டு சென்றதால் 'சான்றோர் அல்லர்' என்பதைக் குறிக்கின்றாள். காதலனுடைய நினைப்பும் வருத்துகின்றது. அவனை நினையாமையும் வருத்துகின்றது. குறித்த பருவத்தில் தலைவன் வாராத நிலையையும், தன் எதிர்பார்ப்பின் தன்மையும் பிரிவினால் கொன்றை பூப்போல மேனி

பசலை பாய்ந்த தன்மையினையும் வருத்தத்துடன் தலைவி சுட்டுவதாக ஔவையார் அழகுறச் சுட்டியுள்ளார்.

தலைவன் பிரிவைத் தாங்க இயலாத தலைவியை நோக்கி நீ வருந்தாதே என்று தோழி, தலைவிக்கு ஆறுதல் கூறுகின்றாள். அதற்கு தலைவி மறுமொழியாய் இயற்கையே என்னைக் கொல்லும், பிரிந்து வருந்தும் நாரை நள்ளிரவில் அத்துயரத்தில் உச்சநிலையில் உருகி நானும் இரல், என் உள்ளத்தைக் குழம்பாக அள்ளும் அதைக் கேட்ட பின்னரும் உயிருடன் இருக்கின்றேன் என்று வருந்திக் கூறுவதை கீழ்காணும் பாடல் அடி விளக்குகின்றது.

'ஓங்கு மணல் உடுத்த நெடுமாப் பெண்ணை
விங்குமடல் குடம்பைப் பைதல்வெண் குருகு
நள்ளென் யாமத்து உயவுதோறு உருகி
...............................................
உளெனே வாழி தோழி வளைநீர்க்
கடுஞ்சுறா எறிந்த கொடுந்திமிற் பரதவர்
வாங்குவிசைத் தூண்டில் ஊங்கு ஊங்கு ஆகி
...............................................
பைபய இமைக்கும் துறைவன்
மெய்தோய் முயக்கம் காணா ஊங்கே' (நற்.199)

என்பது அப்பாடலாகும்.

நற்றிணையின் மற்றொரு பாடலும் தலைவியின் உருக்கமான மனநிலையை வெளிப்படுத்துகின்றது.

'ஞாயிறு ஞான்று கதிர் மழுங்கின்றே;
எல்லியும், பூவீ கொடியின் புலம்புஅடைந் தன்றே;
வாவலும் வயின்தொறும் பறக்கும்; சேவலும்

நகைவாய்க் கொளீஇ நகுதொறும் விளிக்கும்;

…………………………………………

ஆனா நோய்அட வருந்தி, இன்னும்

தமியேன் கேட்குவென் கொல்லோ,

பரியரைப் பெண்ணை அன்றிற் குரலே?' (நற்.218)

தலைவன் குறித்த காலத்தில் வந்து தன்னை மணந்து கொள்ளாத காரணத்தினால் தலைவியின் துயர் மிகுதியாயிற்று அது கண்டு ஆற்றாளாகிய தோழி அவளைச் சிறிது காலம் பொறுத்திரு என்று கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது. 'மன்ற மறந்தார் என்றது மழை முடியுமுன் வருவோம் என நங்கண் ஏமஞ்செய்ததையும் மறந்தார் என மு.இராகவையங்கார் குறிப்பிடுவார். சுருக்கமாகச் சொன்னால் வாக்கு தவறிவிட்டான் அவன். தன் வாக்குப்படி மழைகாலத்திற்கு முன் அவ்வரவேண்டும் ஆனால் வரவில்லை இங்கு தலைவியின் ஏமாற்றம் அதன் விளைவாக பெருந்துன்பம் வெளிப்படுகிறது'[14] என்று ந.க.பாண்டியன் கூறும் கருத்து இங்கு ஒப்புநோக்கத்தக்கது.

திருமணம் செய்து கொள்வதற்காகப் பொருள் திரட்டத்தலைவன் தலைவியைப்பிரிந்து சென்றான். தலைவியோ மிகச் சோர்ந்து மெலிவடைந்தாள். அந்தக் கலக்கத்தின் விளைவாகத் தலைவி புலம்புவதை இப்பாடல் வழி வெளிப்படுகின்து.

'இரும்பின் அன்ன கருங்கோட்டுப் புன்னை

நீலத்து அன்ன பாசிலை அகம் தொறும்,

வெள்ளி அன்ன விளங்குஇணர் நாப்பண்

…………………………………………

பரியுடை வயங்குதாள் பந்தின் தாவத்

தாங்கவும் தகைவரை நில்லா ஆங்கண்,

*மல்லல் அம் சேரி கல்லெனத் தோன்றி*

*அம்பல் மூதூர் அலர் எழ*

*சென்றது அன்றோ, கொண்கன் தேரே?' (நற்.249)*

*குதிரை பூட்டிய தேர் தலைவி வாழும் சேரியில் விரைந்து சென்றது, அதனைக் கண்ட ஊரார் அனைவரும் புரளி பேசத் தொடங்கினர். பெண்கள் தேரில் கண்ட தலைவனைப் பற்றியும் தலைவியிடம் அவன் கொண்ட தொடர்பினைப் பற்றியும் பழிச்சொல்லை பேசினர். தலைவியே தலைவன் இவ்வூர்க்கு வந்தும் திருமணம் பற்றி பேசாமற் சென்று விட்டானே அவன் மீண்டும் வந்து திருமணம் செய்வானா? என்ற ஐயம் தோன்றி இனியான் எவ்வாறு உயிர் வாழ்வேன் என்று வருந்திக் கூறுகிறாள்.*

**அலர் கண்டு வருத்தமுறுதல்**

*நற்றிணையில் 272 வது பாடலில் கடற்கரையில் வாழும் மகளிர் நோன்பு மேற்கொள்ளுவர். அப்பொழுது தாங்கள் தங்கியிருக்கும் இடத்தில் முளைத்திருக்கும் கொடிகளை அகற்றி ஓரிடத்தில் குவிப்பர். அந்த இடத்தில் சூழ் கொண்ட பெடை தங்கியிருந்தது ஆண் காக்கை அப்பெடைக்கு உணவாக உப்பங்கழியில் உள்ள அயிரை மீனைக் தேர்ந்தெடுத்து அதற்கு உணவாக தரும். இத்தன்மைத்தான கடற்கரைக்கு உரியவன் தலைவன், அவன் உடன் கூடி இல்லறம் நடத்த விரும்பிய தலைவியின் எண்ணம் நிறைவேறவில்லை. அந்த ஊரில் வாழும் மகளிரோ பழி தூற்றுகின்றனர். பிரிதலினால் உண்டாகும் துயரத்தை காட்டிலும் பழியினால் ஆற்றும் துயரம் பெரிதாக உள்ளது என்று தலைவி வருத்தமுறுகிறாள். இப்பாடலின் பொருள்தேடிச் செல்லும் பொருட்டு ஏற்படுகின்றது. 'பொருள் வயிற்பிரிவுத்துறை இன்பமும் கடமையும் போராடும் இடமாக நல்ல உணர்ச்சிகள் மோதிக*

*கொள்ளும் இடமாக அமைந்துள்ளது என்றும் கூறியுள்ளமை நினை கொள்ள தக்கதாகும்.'* [15]

*தலைவன் வினைவயிற் பிரிகின்றான். சிறிது காலம் கடந்த பின்னர் மீண்டும் தலைவியைக் கான்பதற்கு வீட்டின் வேலி ஓரமாக வருகின்றான். அவன் வருதலை அறிந்த தோழி தலைவியைத் தேற்றுகின்றாள். அப்போது தலைவி தோழியிடத்து சிவந்த நெற்கதிர்களை அறுக்கும் போது மள்ளர்கள் தமக்குரிய அரிவாளால் மலரையும் அறுத்துவிட்டனர். மலருக்கு அத்த துயரம் தெரியவில்லை, கதிரவன் தோன்றிய போது பேதமை படைத்த நெய்தல் மலரத் தொடங்கியது யான் படுகின்ற துன்பம் தலைவனால் ஏற்பட்டது என்று அறியாமல் அவன் வெறுத்தேறும் இல்லை. அறன் இல்லாத அவன் என்னை மீண்டும் அழைப்பானாகில் அதனையும் ஏற்றுக்கொள்ள ஆயத்தமாக உள்ளேன் என்று தலைவி வருந்தி மொழிவதாக நற்.275வது பாடல் எடுத்துரைக்கின்றது.*

*'செந்நெல் அஞைர்கூர்வாட் புண்ணுறக்*
*கானார் முதலொடு போற்றெனப் பூவே*
*.......................................................*
*பேதை நெய்தற் பெருநீர்ச் சேர்ப்பற்கு*
*யான்நினைந்து இரங்கே னாக, நோய் இகந்து*
*அறனி லாளன் புகழஎன்*
*பெறினும், வல்லேன் மன் தோழி! யானே' (நற்.275)*

*என்பது அப்பாடலாகும்.*

**காவலால் புலம்புதல்**

*தலைவி தலைவனொடு கொண்ட தொடர்பை அறிந்த காரணத்தினால் அவளின் பெற்றோர்கள் தம் வீட்டிலேயே காவல்*

*வைத்தனர். அதனால் அவளுடைய கவலை பெரிதாகி தோழியிடத்து புலம்புவதை நற்.287வது பாடல் மூலம் உலோச்சனார் பதிவு செய்துள்ளார்.*

*'விசும்பு உறழ் புரிசை வெம்ப முற்றிப்*
*வைங்கண் யானை வேற்றுபுறத்து இறுத்த*
*நல்எயி ஓடையோர் உடையம் என்னும்*
*பெருந்தகை மறவன் போலக் கொடுங்கடிப்*
*.....................................................*
*தேர்மணித் தெள்சை கொல் என*
*ஊர்மடி கங்கலும் துயில்மறந் தவவே' (நற்.287)*

*இப்பாடலில் தலைவனை காணாது தோழியிடத்துக் கலங்கியது போல் குறுந்தொகை பாடல் தலைவன் வரைவு நீட்டித்தவிடத்து, புலம்பும் தலைவனைச் சுட்டி அமைகின்றது.*

*'இலங்கு வறை நெகிழச்சா அய்யானே*
*உள்ளேன் வாழி தோழி'[16]*

*என்பது அப்பாடலாகும்.*

**தன் நிலை குறித்துப் புலம்புதல்**

*யாரும் அறியாமல் கூடிப்பிரிவதையே நாட்டமாகக் கொண்ட தலைவன் செயலை எண்ணித் தலைவி மிகவும் வருந்துவதையும் தலைவியின் நிலையை அறிந்த தோழி அவளை பொறுமையாக இருக்குமாறு கூறுகிறாள். இதற்கு மறுமொழியாக தலைவி தன்நிலையை விளக்கும் விளக்கும் விதமாய் அம்மூவனார் நற்.327வது பாடலில் விளக்குகின்றார்.*

*'நாடல் சான்றோர் நம்புதல் பழிஎனின்*
*பாடுஇல கலுழும் கண்ணொடு சாஅய்ச்*

சாதலும் இனிதே - காதல்அம் தோழி!

அந்நிலை அல்ல ஆயினும், சான்றோர்

..............................................

புன்னை ஓங்கிய கானற்

தண்ணம் துறைவன் சாயல் மார்பே' (நற்.327)

தலைவி, தலைவனை நினைப்பது தவறு என்றால் என் கண்கள் நாள்தோறும் அழுதபடியே இளைப்புற்று நான் சாவினை ஏற்றுக் கொள்ளுதல் எனக்கு இனிதேயாகும். ஆனால் இறந்துபோதல் நல்லதில்லை. சான்றோர் கடமை தவறார் என்று உலகத்து உயர்ந்தோர் அனைவரும் கூறுவர் என்று வருந்தி தலைவி கூறுகின்றாள்.

தலைவன் தலைவியை திருமணம் செய்யும் பொருட்டு நிகழ்கின்றது இப்பாடல்.

தலைவனுக்கு உடன்பட்டு அவனோடு கூடி மகிழ்ந்தால், பிரிவு என்ற ஒன்று தோன்றி மீண்டும் துன்புறுத்தும் என்பதை,

'அரில்பவர்ப் பிரம்பின் வரிப்புற விளைகனி

குண்டுநீர் இலஞ்சிக் கொண்ட கதூஉம்

தண்துறை ஊரன் பெண்டினை ஆயின்

பல ஆகுக, துான் நெஞ்சில்படரே'[17] (குறுந்தொகை 91:1-4)

என்று குறுந்தொகையும் விளக்குகின்றது.

தலைவனை பிரிந்த தலைவி இரவு நேரத்தில் உறங்காமல் வருந்துகின்றான். அந்நிலையில் ஊர் ஒலியடங்கிட தன்மையும் சேர்த்து அவளை பெரிதும் வருத்துகிறது. இதனை வெள்ளி வீதியார் பாடல் எடுத்துக் காட்டுகின்றது.

'திங்களும் திகழ்வான் ஏர்தரும், இமிழ்நீர்ப்

பொங்குதிரைப் புணரியும் பாடு ஓவாதே

*ஒலிசிறந்து ஓதமும் பெயரும்; மலிபுனற்*

*...............................................*

*மைகுரும் பனைமிசைப் பைதல் உயவும்*

*அன்றிலும் என்புற நரலும்; அன்றி,*

*விரல்கவர்ந்து உழந்த கவர்வின் நல்யாழ்*

*யாமம் உய்யாமை நின்றன்று;*

*காமம் பெரிதே; களைஞரோ இலரே!' (நற்.335)*

*என்பது அப்பாடலாகும்.*

*தலைவன்பால் பெருகிய காமநினைவால் நெஞ்சு அழிந்த தலைவி சந்திரன் வானில் தோன்றி, வெள்ளொளியைப் பரப்பி அழகைத்தர அலைகளையுடைய கடலும் ஒலித்தபடி அலைகளைக் கரையில் மோதிச் செல்லும், பலவான மலர்களை உடைய நீர்வளம் மிக்க கடற்கரைச் சோலையில் முள்ளயுடைய தாழையும் முனை கூம்பி நடுப்பருத்து அரும்பு மலரக் காற்றின் வழி நறுமணம் பரவியது, பனைமரத்தின் மீது இருந்து அன்றில் பறவையின் குரலும் வருத்தத்தோடு ஒளித்தவாறு இருக்கும். நள்ளிரவில் யாழிசையானது ஒலிக்க என்னுடைய வருத்தத்தையும் பெருக்கி என் காம நோயைப் பெரிதாக்கியது. அத்துயரைப் போக்கும் என் நாதன் என்னருகே இலராயினர். இனி யான் எவ்வாறு உயிர் வாழ்வேன் என்று தலைவி தனக்குத்தானே புலம்பி கூறுகின்றாள். அப்போது தோழி தலைவியை ஆற்றுவாள்.*

**தலைவன் காணவராதது உணர்ந்து புலம்புதல்**

*களவொழுக்கத்தில் தலைவியைக் கூடி இரவுக் குறியில் மகிழும் தலைவன் பழிச்சொல் வருத்தக் கண்டு வருகையைத் துறந்தனன். அதனால் வருந்தி தலைவி தன் தோழியிடம் மொழிகின்றாள். இதனை நற்.338 பாடல் சுட்டுகிறது. கொடிய வெப்பக் கதிர்களையுடைய*

சூரியன் மேற்கு மலையில் சென்று மறைந்து அடும்பங்கொடிகளை அறுத்துக்கொண்டு வரும் நம்முடைய தலைவரின் தேர்வரும் மணியோசை இரவுப் பொழுதிலும் கேட்கவில்லை. அதனால் அவரை நினைத்து வருந்தும் நின்னுடைய நிலை அலர் ஆகாதபடி பொறுத்துக் கொண்டு நிறுத்தல் வேண்டும் என்று உரைக்கின்றன. இரையை அருந்திய நாரை பருத்த அடியையுடைய பனைமரத்தின் மீது மட்டையில் அமர்ந்தவாறு தன் பெடையை நோக்கி கூவி அழைத்தவாறு இருக்கும் அதுபோல நானும் துயரத்துடன் உள்ளேன் என்று வருந்துகின்றாள். இப்பாடல் மூலம் பெடையை நோக்கி கூவும் நாரையைப் போல தலைவியின் மனதும் தலைவனை நோக்கி புலம்புவதை மதுரை ஆருலவியநாட்டு ஆலம்பேரி சாத்தனார் பதிவுசெய்துள்ளார்.

**தனக்குள்ளேயே புலம்பிக் கொள்ளுதல்**

தலைவன் பிரிவை பொறுக்காமல் கலங்கிய தலைவி தனக்குள் புலம்பிக் கூறுவதை நற்.348வது பாடலில் வெள்ளிவீதியார்,

'நிலவே! நீல்நிற விசும்பில் பல்கதிர் பரப்பி,
பான்மலி கடலின் பரந்துபட் டன்றே
ஊரே ஒலிவரும் சும்மையொடு மலிபுதொகுபு ஈண்டி,
கலிகெழு மறுகின் விழவ அயரும்மேல்
கானே, பூமலர் கருலிய பொழில் அகம் தோறும்
..............................................
யானே, புனைஇழை ஞெகிழ்த்த புலம்பு கொள் அவலமொடு
கனையிருங் கங்குலும் கண்படை இலெனே;
..............................................
உலகமொடு பொரும் கொல், என் அவலம் உறு நெஞ்சே?'

(நற்.348)

என்று அமைத்துள்ளார்.

தலைவிக்கு தலைவன்பால் வேட்கை பெருகிற்று. அது தாங்க இயலாது 'நிலவு பரந்தது' ஊர் விழாக் கொண்டாடும் கானம் வண்டிசைக்குமாறு விளங்கும். இத்தகைய இரவிலே யான் உறங்கவில்லை. அதனால் என்னொடு இந்த உலகம் போர் செய்யுமோ? அன்றி இவ்வுலகத்துடன் அவலமுற்ற என் நெஞ்சுதான் போர் செய்யுமே? எனத் தலைவனை நினைத்துக் கொண்டு இருதிரும் என் நெடுஞ்சம் உலகை எதிர்த்து போரிடுமே என்று புலம்புகின்றாள் தலைவி.

**களவு மறந்த தலைவனை எண்ணிப் புலம்புதல்**

களவொழுக்கத்தில் தலைவியொடு கூடி மகிழ்ந்த தலைவன் சிலகாலம் தலைவியொடு கூடாது அயலே இருந்தான் அந்நிலையில் தலைவியைத் தோழி பொறுத்திருக்குமாறு கூறத் தலைவி தான் வருந்தி இருப்பதாகத் தோழிக்கு கூறுகின்றாள். இதனை ஆசிரியர் நிகண்டன் தலைக் கோட்டுத் தண்டனார் (நற்.382) பாடல்,

'கானல் மாலைக் கழிநீர் மல்க
நீல்நிற நெய்தல் நிரையிதழ் பொருந்த
..............................................
துறந்தோர் தேஎத்து இருந்து நனிவருந்தி
..............................................
தண்ணம் துறைவன் நாண,
நண்ணார் தூற்றும் பழிதான் உண்டே' (நற்.382)

என்று எடுத்துக்காட்டுகின்றது.

**சிறைப்புறத்தான் கேட்கக் கூறியது**

மதுரை மருதங்கிழார் மகனார் பெருங்கண்ணனார் தலைவியின் நெஞ்சம் விரும்பும் தலைவன் நெடுநாள் பழகியும் வரைவு கொள்ளாதவனாய்க் காலம் நீட்டித்தனன். அதனால் தலைவி மனம் கலங்கி நிற்கிறாள். அப்பொழுது சிறைப்புறமாக நிற்கும் தலைவனுக்கு

கேட்க தோழியிடம் தலைவி வருந்தி கூறுவதாய் கீழ் பாடல் அடிகள் அமைந்துள்ளது.

'அம்ம வாழி தோழி! நன்னுதற்கு
யாங்கு அகின்று கொல்! பசப்பே - நோன்புரிக்
...........................................
தேம்கமழ் தேறல் கிளையொடு மாந்திப்
பெரிய மகிழும் துறைவன் எம்
சிறிய நெஞ்சத்து அகல்வு அறியானே!' (நற்.388)

என்று தலைவி வருந்தும் நிலையை விளக்குகின்றது இப்பாடல்.

**பெருளுக்காக செல்லும் போது தலைவி கலங்குதல்**

வரைவுக்குட்பட்ட காலத்தில் தலைவன் பொருள் காரணமாக செல்கிறான். அவன் வருமளவும் தன் நெஞ்சை ஆற்றியிருக்கும் இடத்தில் தலைவியின் கலக்க மொழிகளைக் காணமுடிகிறது

'கண்களி பெறூஉம் கவின் பெறு காலை
எல் வளை நெகிழ்த்தோர்க்கு அல்லல் உறீஇச்
சென்ற நெஞ்சம் செய்வினைக்கு அசாவா' (நற்.50)

என் ஒளிபொருந்திய உனை நெகிழ்வதற்கு காரணமான தலைவனை கருதி என் நெஞ்சு வருத்தமுற்று தலைவனை நாடிச்சென்று அந்நெஞ்சம் தலைவன் கருதிச் செய்யும் முயற்சிக்கு அயராது உடனுக்கும் விருப்பத்தால் வருந்துகின்ற தோழி என தலைவி பிரிந்த தலைவனை நினைத்து வருந்துகின்றான். தலைவன் பொருள்வயிற் பிரிந்த நிலையில் தலைவியின் மனது கலக்கமடைகின்றது.

**தனிமைத்துயர் நினைத்துக் கலங்குதல்**

'பூக் கெழு படப்பைச் சாய்க்காட்டு அன்ன என்
நுதற் கவின் அழிக்கும் பசலையும்
அயலோர் தூற்றும் அம்பலும், அறித்தே'[2] (நற்.73)

எனும் இப்பாடல் தனிமையில் புலம்பும் தலைவியைச் சுட்டுவது.

தலைவன் வினைக்காக பிரிந்து செல்லும் நிலையில் தலைவி கலக்கம் அடைகின்றாள். துன்பம் தரும் மாலைப் பொழுதில் தலைவரோடு இருப்பினும் நாம் அஞ்சுவோம். இந்நிலையில் நாம் இங்கு தனியே தங்குமாறு நம்மை விட்டு செல்கிறார் எனும் இடத்தில் தலைவன் பொருள் காரணமாக செல்லும் நிலையை தடுக்கவும், தனது தனிமைத் துயரை எண்ணியும் மனம் கலங்கும் தலைவியைக் காண முடிகின்றது.

தன்னைப் பிரிந்து செல்லும் இடத்தில் தலைவன் முன் வெளிப் படையாகச் சொல்லுதல் தலைவிக்கு இல்லை என்பதைத் தொல்காப்பியம்,

'தன்னுறு வேட்கை தலைவன் முன் கிளத்தல்

எண்ணுங் காலைக் கிழத்திக்கு இல்லை'[18] (தொல்.கிளவி.1064)

என்று தலைவி கூற்றாகச் சொல்கிறது.

தலைவன் பொருள் காரணமாகப் பிரிய வேண்டிய நேரங்களில் மனக்கலக்கம் நிகழ்தல் இயல்பேயாகும்.

'பிரிதல் சூழ்தலின் அரியதும் உண்டோ?

என்று நாம் கூறிக் காமம் செப்புதும்' (நற்.79)

பொருள் காரணமாக தலைவன் பிரியும் இடத்தில் தலைவி கலங்கி மொழிகிறாள். பாலை வழியின் கொடுமையையும் தனது அன்பையும் எடுத்துக் கூறி செலவை தடுத்து நிறுத்த முற்படுகிறாள். இங்கு தலைவி, தலைவன் பிரிந்துவிடுவானோ என்ற மனநிலையில் புலம்புவது அறியப்படுகிறது.

**அறியாமையால் தலைவி கலங்குவது**

தலைவன் பிரியமாட்டான் என நினைத்த தலைவிக்குத் தலைவனின் பிரிவு ஏமாற்றத்தை உண்டாக்குகிறது. தன்னுடைய அறியாமையால் கலக்கம் அடைகிறாள்.

'கண்ணும் தோளும் தண் நறுங்கதுப்பும்

திதலை அல்குலும் பல பாராட்டி' (நற்.84)

பொருள் காரணமாக தலைவன் பிரியும் சூழலில் தலைவி கலக்கம் அடைகிறாள். தனது கண், தோள், கூந்தல் முதலியவற்றைப் பாராட்டிய பின் பிரியும் தலைவனை நினைந்தும் அவன் செல்லும் பாலை நிலங்களின் கொடுமைகளை எண்ணியும் வருத்தமடையும் நிலையில் தலைவி கலக்க மொழிகள் தோன்றுகின்றன.

தலைவன் பிரியமாட்டான் என நினைத்த தலைவிக்குத் தலைவனின் பிரிவு ஏமாற்றத்தையும் கலக்கத்தையும் உண்டாக்குகிறது.

'சென்ற காதலர்வழி வழப்பட்ட

நெஞ்சே நல்வினைப் பாற்றே : ஈண்டு ஒழிந்து' (நற்.107)

என்பது தலைமகனின் பிரிவால் மெலிவுற்ற தலைவி தோழியை நோக்கி கூறியது. இவ்விடத்தில் தலைவியின் கலக்க மொழியை காண முடிகின்றது. தலைவன் சென்ற பாதையை நோக்கி தலைவி நெஞ்சம் செல்கிறது. தலைவன் பிரிவால் மொழிந்த தலைவி தன் நிலை குறித்துத் தோழிக்குக் கூறிய நிலையில் இவ்வுணர்வுகள் வெளிப்படுகிறது.

தலைவன் பிரியமாட்டான் என நினைத்த தலைவிக்குத் தலைவனின் பிரிவு ஏமாற்றத்தை உண்டாக்குகிறது. தன்னுடைய அறியாமையால் கலக்கம் அடைவதாகத் தன் உணர்வை பிரதிபலிக்கிறாள்.

'ஒன்றுதும்' என்ற தொன்று படு நட்பின்

காதலர் அகன்றென கலங்கிப் பேதுற்று' (நற்.109)

எனும் இப்பாடல் அடி தலைவியின் கலக்க மொழியை எடுத்துக் காட்டுகிறது. உன்னைப் பிரிய மாட்டேன் ஒன்றுபட்டு இருப்பேன் என்று கூறிய தலைவன் பின்னர் பொருள் காரணமாக பிரியும் போது

*தலைவி கலக்கம் அடைகிறாள். இதனை, 'தொன்று படு நட்பின்' என்ற பாடல் அடி மூலம் அறியமுடிகின்றது.*

*தலைவியின் உள்ளத்தில் வருத்த உணர்வு அதிகம் தோன்றுவதற்குத் தலைவன் அவளை விட்டுப் பிரிந்து சென்றதே பெரும்பாலும் காரணமாக அமைகின்றது.*

*'நெஞ்சம் அவர்வயின் சென்றென, ஈண்டு ஒழிந்து,*

*உண்டல் அளித்து என்உடம்பே' (நற்.153)*

*என்பதும் வருந்தியுரைக்கும் பாடலேயாகும். தலைவன் பொருள் தேடச் செல்லும் இடத்தில் தலைவி கலங்கி மொழிகிறாள். தனிமைபட்டதை நினைத்து அவள் உயிர் அற்றது போல் எண்ணுகிறாள். மேலும் தலைவன் செல்லும் திசையை நோக்கி சென்றான் என எண்ணி கலக்கமடைகிறாள். தலைவன் பொருள் ஈட்ட தலைவியைப் பிரிந்தான். 'அவன் பிரிவினை ஆற்றாத தலைவி வருந்தி உடல் உள்ளம் வேறுபடுகிறாள். அதொடு கலக்க மொழிகளையும் உரைக்கிறாள்.'*

*'நெடு நிலையாஅம் ஏறும் தொழில*

*பிறர்க்கு என முயலும் பேர் அருள் நெஞ்சமொடு' (நற்.186)*

*எனத் தலைவன் பொருள் காரணமாக பிரியும் நிலையில் அவனது பிரிவால் தான் அடையும் துன்பம் வெளிப்படுத்துகிறாள். மேலும்,*

*'இனி எவன் மொழிகோ, யானே - கயன் அறக்*

*கண் அழிந்து உலறிய பல்மா நெடுநெறி' (நற்.224)*

*என்றும் புலம்புகிறாள்.*

*தலைவன் பொருள் தேடச் செல்கிறான். அச் செய்தியைக் கேள்விப்பட்ட தலைவி, தோழியிடம் கலங்கி மொழிகிறாள். நம் காதலர் நம்மீது அன்புடையவர். அவர் பிரியமாட்டார் எனத் தலைவன் மீது உள்ள அன்பையும் வெளிப்படுத்துகிறாள்.*

சிவந்த கண்களை உடைய ஆண் குயில் தனது இனமான பெண் குயிலோடு சேர்ந்து இன்புறுகிறது என்ற அஃறிணை வாழ்வையும் எடுத்துக் கூறி தலைவி கலங்கி மொழிகிறாள். இதனை,

'செங்கள் இருங் குயில் எதிர்குரல்'

எனும் பாடல் சுட்டும்.

'நாம் தம் உண்மையின் உளமே ; அதனால்

தாம் செய்பொருள் அளவு அறியார்' (நற்.226)

எனும் இப்பாடல் தலைவன் பொருள் காரணமாக பிரிய நினைத்த போது தலைவி கலங்கி மொழிவதைச் சுட்டுகிறது. அவரின் அன்பு காரணமாகவே நான் உயிர் பெற்றிருக்கிறேன் இதனை அறியாது தலைவன் பிரிந்து சென்றான் என தலைவி தோழியிடம் கூறும் மொழிகள் மூலம் அவள் கலக்கம் வெளிப்படுகிறது.

தலைவன் பொருள் காரணமாக பிரிகின்றான். அதனால் தலைவி கலக்கம் அடைகிறாள். தலைவன் பிரிவு தலைவியை கலக்கமடைவதோடு உடல் நிலையும் வேறுபடுகிறது. தலைவன் செல்லும் கடுமையான காட்டையும் எண்ணி கலங்குகிறாள். இதனையும் நற்றிணையின் வழி அறியமுடிகின்றது.

'நுண் முன் வேலித் தாதொடு பொதுளிய

தாறு படு பீரம் ஊதி வேறுட

நாற்றம் இன்மையின் பசலை ஊதாய்'[19]

எனத் தலைவன் தலைவியை மணந்து கொள்ளாத நிலையில் பொருள் ஈட்டச் செல்வதால் அதனை அறிந்த தலைவி கலக்கம அடைவதாக அமைந்ததாகும்.

தலைவன் பிரிவால் தலைவி கலக்கம் அடைவது மட்டும் இன்றி உடல் பசலை ஏற்படுகிறது. அதனையும் எண்ணி கலக்கம் அடைகிறாள். இதனை, 'நாற்றம் இன்மையின் பசலை ஊரய்' என்று எண்ணி கலங்குகிறாள்.

'பிரிந்தோர் இரங்கும் அரும் பெறல் காளையும்

வினையே நினைந்த உள்ளமொடு துணைஇச்' (நற்.296)

எனும் இப்பாடல் தலைவன் பொருள் காரணமாக பிரிய நினைப்பது அறிந்த தலைவி தலைவன் இல்லாத வீட்டில் என்னால் இருப்பது எப்படி என வருத்தடைவதாகும். இங்கு தலைவிக்கு வருத்தத்தை உண்டாக்குவதாக தலைவன் பிரிவு அமைகிறது.

'புன்கண் அந்திக் கிளைவயின் செறிய

படையொடு வந்த பையுள் மாலை' (நற்.343)

என்பது பொருள் காரணமாக பிரிந்த தலைவனை எண்ணி தலைவி கலக்கம் அடைவதாக தலைவன் பிரிந்த பின் மாலைப் பொழுதில் தலைவி கலங்கி மொழிவதாய் பாடல் அமைந்துள்ளது. இதனை,

'படையொடு வந்த பையுள் மாலை'

என எடுத்துக் கூறுகிறாள்.

'நான் துன்பப்படுவேன் என எண்ணி அவர் என்னிடம் சொல்ல மறந்துவிட்டார். என் நெஞ்சை பிரிவுத் துன்பம் மிகவும் கலக்கமடையச் செய்கிறது என்கிறாள்.'[15] தலைவன் பிரியமாட்டான் என்று எண்ணிய தலைவிக்கு தலைவன் பிரிவு ஏமாற்றத்தையும் துக்கத்தையும் ஏற்படுத்துகிறது.

**பருவம் கண்டு கலங்கி மொழிதல்**

'சேவலோடு கெழீஇய செங்கண் இருங்குயில்

புகன்று எதிர் ஆலும் பூமலி காலையும்

அகன்றோர்மன்ற நம் மறந்திசினோர்' (நற்.118)

பொருள் காரணமாக பிரிந்த தலைவன் பருவம் வந்தும் தன்னைச் சேராத நிலையில் தலைவி கலங்கி மொழிகிறாள். இதற்கு ஆதாரமாக சிவந்த கண்ணையுடைய பெண்குயில் தன் சேவலாகிய ஆண்

குயிலுடன் பொருந்தி வாழ்கிறதை எடுத்துக்கூறி கலக்கமடைகிறாள். அஃறிணை உயிர்கள் தங்கள் இனத்தை விட்டுப் பிரியாமல் சேர்ந்து வாழ்கிறது. ஆனால் தலைவன் மட்டும் பிரிந்து சென்று பருவம் வந்த நிலையிலும் வரவில்லை என வருத்தமடைவதை மேற்கூறிய பாடல் எடுத்துக்காட்டுகிறது.

'இரும் புறம் தழூஉம் பெருந் தண் வாடை
நினக்குத்தீது அறிந்தன் றோ இலமே;' (நற்.193)

எனும் இப்பாடல் பருவம் கண்டு தலைவி கலக்கமடைவதைச் சுட்டும் படலாகும்.

குறித்த பருவத்தில் வருகிறேன் என்று கூறிய தலைவன் வரவில்லை. மழைக்காலம் வருகிறது. இம் மழைக்காலமும் வாடைக்காற்றும் தலைவிக்கு பெரும் துன்பத்தைத் தருகிறது. இச்சூழ்நிலைகளில் தலைவி கலக்கமடைகிறாள்.

'தலைவன் பொருள் ஈட்டும் பொருட்டுத் தலைவியைப் பிரிந்தான் அவன் பிரிவினை ஆற்றாத தலைவி வருந்தி உடல் வேறுபடுகிறாள்' இதனை பனைத்தோள் எல் வளை ஞெகிழ்ந்த எம் காதலர் என்று கூறி வருத்தமடைகிறாள்.

'காடு கவின் பூத்த ஆயினும், நன்றும்
வரு மழைக்கு எதிரிய மணிநிற இரும்பூதல்' (நற்.302)

கார்காலம் வரும் முன் வருவேன் என்று கூறிய தலைவன் வராத நிலையில் தலைவி கலங்கி மொழிகிறாள். அவன் கூறிய கார்காலமும் வந்து சென்றது தலைவன் வரவில்லை. அவன் வராது வருந்திய தலைவி சுரவழியிலே என்ற நம் காதலன் கொன்றைப் பூக்கள் மலர்ந்த கார்காலம் கழிந்தமையை அறியாது போயினன் என தலைவி கலக்கமடைகிறாள். நம் தலைவன் நம்மைப் பிரிதலால் பலவற்றையும் வெறுத்து உணவு

உண்ணாத வருத்தத்தால் என் உயிர் செல்லுமளவுக்கு மெலிந்தது' என வருத்தமடைவதையும் இங்கு நினைக்கத்தக்கது.

'முதிர்ந்தோர் இளமை அழிந்தும் எய்தார்;
வாழ் நாள் வகை அளவு அறிஞரும் இல்லை;
மாரிப் பித்திகத்து ஈர் இதழ் அலரி' (நற்.314)

எனும் இப்பாடல் தலைவன் பருவம் வந்தும் வராத நிலையில் தலைவன் கூறிய கூற்று மொழிகளைக் கூறி கலக்கமடைவதாகும். இங்கு ஒரு காலத்து முதுமையை அடைந்தவர் மறுபடியும் அழிந்த இளமையை எய்துவது இல்லை என்ற தலைவன் கூற்றை எடுத்துக் காட்டி, தன் நிலைபுலப்படுத்துகிறாள்.

'தலைவன் வருவதாகக் குறித்த பருவத்தில் வராததைக் கண்டு தலைவி நான் இன்னும் இறந்துபடுதலின்றி உயிரோடு இருக்கிறேன். என் உள்ளம் ஒடுங்குகிறது' (பக்.97) என்பதில் தலைவி ஆற்றாமை ஒப்பிடுகிறது.

'கண்ணும் காட்சி தௌவின ; என் நீத்து
அறிவும் மயங்கி பிறிது ஆகின்றே' (நற்.397)

பொருள் காரணமாக பிரிந்த தலைவன் பருவம் வந்தும் வராத நிலையில் கலக்கம் அடையும் தலைவியைத் தோழி தேற்றுகிறாள்.

தலைவி மறுமொழியாக என் தலைவன் பிரிவால் இறந்துபோக அஞ்சவில்லை. ஆனால் மறுபிறவியில் என் தலைவனை மறந்து போவேனோ என அச்சம் கொள்கிறாள் என கூறும் தலைவி மொழியில் தலைவன் பிரிவால் கலக்கம் மட்டுமின்றி தலைவன்மீது உள்ள அன்பையும் வெளிப்படுத்துகிறாள். இதனை,

*‘சாதல் அஞ்சேன் அஞ்சுவல் சாவின்*

*பிறப்புப் பிறிது ஆகுவது ஆயின்’*

*என்று கூறுவதிலிருந்து அறிய முடிகின்றது.*

**பிரிவு நிலைத்துக் கலங்குதல்**

*‘ஒதுக்கு அரும் வெஞ்சுரம் இறந்தனர் மற்றவர்;*

*குறிப்பின் கண்டிசின் யானே’ (நற்.177)*

*பொருள் காரணமாக பிரியும் நினைத்த தலைவனை தோழியிடம் தனது கலக்க மொழிகளைக் கூறுகிறாள். காடுகள் அழிந்து நிழல் இல்லாமல் கடந்து செல்வோரை துன்பப்படுத்தும் அவ்வழியில் நம் தலைவன் பிரிந்து செல்கிறான் என பொருள் காரணமாக பிரிய நினைத்த தலைவனை நினைத்து தோழியிடம் தலைவி கலக்கமடைகிறாள்.*

*தன்னைப் பிரிவது மட்டுமின்றி செல்லும் கடும் துன்பம் தரும் எனக் கலக்கமடைகிறாள். ‘தலைவன் பிரிய மாட்டான் என நினைத்த தலைவிக்குத் தலைவின் பிரிவு ஏமாற்றத்தைத் தருவதை மேற்கூறப்பட்ட பாடல்களிலிருந்து அறிந்து கொள்ளமுடிகிறது.’*

**தொகுப்புரை**

*நற்றிணையில் தலைவி கூற்று பாடல்கள் 65 ஆகும்.*

*திணை அடிப்படையில் குறிஞ்சியில் 15 பாடல்கள் முல்லையில் ஐந்து பாடல்கள், மருதத்தில் நான்கு பாடல்கள் நெய்தலில் 19 பாடல்களும், பாலையில் 22 பாடல்களும் இடம்பெற்றுள்ளன.*

*அறுபத்து ஐந்து பாடல்களில் தலைவியின் உள்ள உணர்வுகள் வெளிப்படுகின்றன. மேலும் தலைவன் மேல் அவள் கொண்டுள்ள அன்பின் வெளிப்பாடாகவும் அமையப் பெற்றுள்ளது.*

*உள்ள உணர்வுகளை வெளிப்படுத்துவதில் தலைவி தனக்கென தனி சிறப்பிடத்தை பெற்றுள்ளதை இதன் வாயிலாக அறியமுடிகின்றது.*

*தலைவி கூற்றில் தலைவன் பிரிவின் மூலமாக ஏக்கம், ஏமாற்றம், கலக்கம், வருத்தம் என்ற வெளிப்பாடாக வெளிப்படுகின்றது.*

*தலைவன் பொருள் தேடும் பொருட்டு பிரிந்து செல்லும் போது அவள் அவ்வாறு செல்லும் அவன் செல்கின்ற வழியில் அவனுக்கு ஏற்படுகின்ற துன்பத்தையும் நினைத்து வருந்துவதையும் காண முடிகின்றது.*

*தலைவியை சந்திக்க தலைவன் வரும்பொழுது அவனுக்கு ஏற்படும் இயற்கைத் துன்பங்களையும், நினைத்து தலைவி வருந்தும் பொழுது தலைவியின் கலக்க மொழிகளை காண முடிகின்றது. மேலும் தலைவன் மீது தலைவியின் உள்ள அன்புணர்வுகள் சிறப்பாகும்.*

*தலைவிக்கு வருத்தத்தை ஏற்படுத்துவதில் இயற்கை காரணிகளாகின்றன. குறிப்பாக பனை மரத்தின் மீது மட்டையில் அமர்ந்தவாறு தன் பெடையை நோக்கி கூவி அழைக்கும் நாரை, காடு, பூக்கள் ஒலி செய்யும் வண்புனங்கள், கிளி போன்றன.*

தொல்காப்பியர் தலைவி கூற்று நிகழ்த்துமிடங்களாகச் சில வரையறைகளைப் பொருளதிகாரத்துள் அமைந்துள்ளார். நற்றிணைத் தலைவியும் இக்கலங்கி மொழியும் கூற்றுகளைத் தன் நெஞ்சிடத்தும், தன்னை எப்போதும் பிரிந்திராத தோழியிடத்தும் கூறுகிறாள். மேலும் சிறைப்புறத்தானாக நிற்கும் தலைவன் அறியவும் தலைவி கலங்கி மொழிவதைக் காணமுடிகின்றது.

பொருள்வயிற் காரணமாகிவோ, குறியிடத்து வரஇயலாத காரணமாகவோ, இடையூறுகள் ஏற்பட்டதோ என்ற அச்சத்தின் காரணமாகவோ, வரைவு நீட்டிப்பது கண்டோ, பரத்தையர் பிரிவு உணர்ந்தோ அன்னையின் இற்செறிப்பினாலோ, ஊர் அலர் கண்டோ, தலைவன் கலக்கமொழிகள் அமைகின்றன. இவையனைத்துமே தலைவன மீது கொண்ட அன்பும், அவளைச் சேரவேண்டும் என்ற அடிப்படையான காரணத்துடனேயுமே அமைந்துள்ளன.

## சான்றெண் விளக்கம்

1. நாகராசன், குறுந்தொகை, 126
2. அகநானூறு, பா.170
3. சங்க இலக்கிய அகப்பாடல்களில் உணர்வுப் பேராட்டம்
4. குறுந்தொகை, பா.19
5. அகநானூறு, பா.274
6. குறுந்தொகை, பா.12
7. ஐங்குறுநூறு, பா.339
8. குறுந்தொகை, பா.301
9. தொல்காப்பியம், பொருளதிகாரம், பா.107
10. ஐங்குறுநூறு, பா.441
11. குறுந்தொகை, பா.39
12. அகநானூறு, பா.10
13. குறுந்தொகை, பா.102
14. ந.க.பாண்டியன், ஔவையின் உளவியல் & பிராய்டு, லெக்கானின் மன அலசல், ப.167
15. மேலது, ப.168
16. குறுந்தொகை, பா.125
17. மேலது, பா.91
18. தொல்காப்பியம், கிளவியாக்கம், நூ.1064
19. து.சிவராஜ், சங்க இலக்கியத்தில் உளவியல், ப.28

நற்றிணையில் தோழி கலங்கி மொழியும் பாடல்களே அதிகம் காணப்படுகின்றன. சங்க அகப்பாக்களுள், தோழிக்குரிய முக்கியத்துவம் யாவரும் அறிந்ததே. இக்கூற்றுகளும் அதனை மெய்ப்பிக்கின்றன. தோழி தலைவியுடனே இருப்பதால் அவளது நலம் குறித்தே இவளது கூற்றுகள் அமைகின்றன. மேலும் இவளது கூற்றுகள் பலருடன் நிகழ்வதால் திணை அடிப்படையில், தனித்தனியே விரித்துக் காண்பது சிறக்கும்.

**குறிஞ்சித்திணையில் தோழி கலங்கி மொழிதல்**

தோழிக்கு அகத்திணை மாந்தர்களுள் தனிச்சிறப்பிடமுண்டு. களவு, கற்பு எனும் இருகைகோள்களிலும் பெரும்பங்கு ஏற்பவள் தோழியாவாள். அகத்திணையின் முதன்மையான துறைகளிலும், அகத்திணையில் பிற மாந்தர்கள் இடம்பெறும் சூழல்களிலும் முன்நிற்பவள். களவை வரைவிற்கு ஆற்றுப்படுத்தும் வரைவு கடாதல் துறை, களவையும், கற்பையும் இணைத்து நிற்கும் அறத்தொடு நிலைத்துறை, களவு கற்பாக மாறும் சூழல் தெளிவில்லாத போது தோன்றும் உடன்போக்குத்துறை ஆகிய கருவான திருப்புமுனைகளில் எல்லாம் தோழி ஆதிக்கம் செலுத்துகிறாள்.

> "அகமாந்தர் கொள்ளும் மன உணர்வுப் போராட்டங்களை அமைதிப்படுத்துகின்ற அல்லது தீர்வு காண்கின்ற பின்புலங்களை அமைத்துத்தரும் சூழல்களில் எல்லாம் தோழி காணப்படுகிறாள்."[1]

என்கிறார் இராமகிருட்டிணன். குறிஞ்சித்திணையில் கலங்கிமொழியும் பாடல்களில் மொத்தம் 46 பாக்கள் காணப்படுகின்றன. தோழி கூறும் இக்கூற்றுகள் மூலம் தோழி தலைவிமீது கொண்ட அன்பினையும், சங்ககாலச் சூழலையும் அறிந்துகொள்ள முடிகிறது.

> "தலைவன் தலைவியரிடையே உறவை வளர்ப்பதும் களவைக் கற்பாக்கச் செவிலியிடம் உரையாடுவதும் மையமாக

அமைந்துள்ளமையைத் தோழியின் கூற்றுக்கள் உய்த்துணரத் தூண்டுகின்றன."[2]

என்ற கருத்து ஒப்புநோக்கத்தக்கன.

**தோழி தலைவனிடம் உரைப்பவை**

தோழி தலைவனுடன் உறவுகொண்டவளாகக் காட்ட முயலுதற்கு இரு நோக்கங்கள் காணப்படுகின்றன. தலைவியின் களவு தனக்குப் புலனாயதை வெளிப்படுத்துவது ஒன்று. தலைவி தன் களவைத் தானே வெளிப்படுத்துமாறு, செய்வது மற்றொன்று.

"தோழி தலைவனுடன் தொடர்புகொண்டு அவன் தந்த உறவாலும் பிரிவாலும் தலைவி ஏங்குவதாகச் சுட்டுகிறாள்."[3]

எனத் தோழி தலைவன், தலைவியுடன் கொண்ட உறவை ஒரு திறனாய்வாளர் சுட்டுகிறார்.

தோழி தலைவனுக்கு உரைப்பதாக இடம்பெறும் பாடல்களுள், தலைவன் இரவுப்பொழுதில் தலைவியைச் சந்திக்க வரும் இடத்திலும், அவை போன்று பகற்பொழுதில் தலைவியைச் சந்திக்கும் இடங்களிலும் களவு நீட்டிக்காமல் உரிய நேரத்தில் தலைவியை மணந்துகொள்ள வேண்டும் என்ற நோக்கிலும் பாடல்கள் இடம்பெற்றுள்ளன. இவ்வாறு கூறும் இடங்களில் தோழியின் மனக்கலக்கமான உணர்வுகளைக் காணமுடிகின்றது.

**தோழி இரவுக்குறியில் தலைவனுக்கு உரைத்தல்**

தலைவன், தலைவியைச் சந்திக்கக் குறித்த இடத்தில் வருவதுண்டு. இரவுக்குறி இல்லகத்தில் அருகே நடைபெறும் என்று தொல்காப்பியர் குறிப்பிடுவார். புணர்ந்து நீங்கும் தலைவனிடம் வரைவு வேண்டுதல் என்ற நிலையிலும், ஊரார் அறிந்து அலர் தோன்றும் நிலையிலும், இக்கருத்தை மையமாகக் கொண்டு தோழி தலைவனிடம் கூற்று நிகழ்த்துகிறாள்.

மாறாக தலைவனின் குறிப்பறிந்து இரவுக்குறி செல்லத் துடிக்கும் தலைவியை,

"நன்மயில் வலைப்பட்டாங்கியாம்
உயங்கு தொறும் முயங்கும் அறனில் யாயே"[4] (குறுந்.244)

இப்பாடல் சுட்டுகிறது. தலைவனின் புணர்வால் மகிழ்ந்த தலைவியின் மனத்தையும், கண்ணின் செம்மையும் அன்னையின் பயத்தை உறுதிசெய்வதாகத் தோழி தலைவனிடம் குறிப்பிட்டுத் தலைவியை விரைவில் மணந்துகொள்ள வேண்டும் எனத் தோழி கூறும் மொழிகளில் தலைவி மீது கொண்ட உயர்ந்த அன்பு வெளிப்படுகிறது.

"கல்லக வெற்பன் சொல்லின் தேறி
யாம் எம் நலன் கிழந்தனமே" (நற்.36)

என இடம்பெறும் பாடல்வழி, இரவுக்குறியில் வந்த தலைவனிடம் தலைவியை விரைந்து வரைந்து கொள்ளவேண்டும் எனக் கூறும் இவ்விடத்தில் தோழி தலைவிமீது கொண்ட அன்பு வெளிப்படுகிறது.

தலைவனின் சொல்லை நம்பி யாம் எம் நலனை இழந்தோம். ஊர் அலர் தூற்றுகிறது. ஊர் உம்மைக் கண்டுகொள்ளும் முன்னே வரைந்துகொள்ளுதல் வேண்டும் எனக் கூறும் தோழி கூற்றில், அலர் தோன்றினால் தலைவிக்குத் துன்பம் நேரிடும் என்று நினைத்து உள்ளம் கலக்கமுற்று கூறும் நிலையை இப்பாடல் வெளிப்படுத்துகிறது. "தோழி அலர் பரவுதலை மட்டும் சுட்டாமல் தலைவியின் காதலை நிறைவேற்ற தலைவன் செய்த முயற்சியே அலர் பரவியதற்குக் காரணம் என்பதையும் உள்ளுறையில் எடுத்துரைக்கிறாள்"[5] இவை போன்று (நற்.85) மற்றொரு பாடலில்

"அம்பல் மூதூர் அரவம் ஆயினும்
குறுவரி இரும் புலி அஞ்சிக் குறுநடைக்
கன்றுடை வேழம் நின்று காத்து அல்கும்" (நற்.85)

என வரும் இப்பாடலில் இரவுக்குறி வந்த தலைவனை நோக்கி; ஊரின் ஏற்படும் அலர் மற்றும் தலைவனுக்கு ஏற்படும் துன்ப நிகழ்வுகளைக் கூறும் இடத்தில் தோழி கலக்கம் அடைகிறாள். இங்கு இரவுக்குறி சந்திப்பில் இருவித தீங்கு ஏற்படுகிறது. ஒன்று ஊரில் ஏற்படும் அலர் மற்றொன்று காட்டுவழியில் தலைவியைச் சந்திக்க வரும் தலைவன், அதனால் அவனுக்கும் ஏற்படும் தீங்கு எனத் தோழியின் கலக்க மொழிகள் இருநிலைகளில் அமைகின்றன.

"தலைவனின் மன உணர்விற்கேற்ப தனது வேண்டுதலிலும்
மாறுபாடு காட்டுதலை உணரமுடிகிறது."[6]

"துஞ்சாக் காவலர் கிதழ் பதம் நோக்கி
இரவின் வரூஉம் அதனினும் கொடிதே" (நற்.93)

என்ற இப்பாடல்வழி இரவில் வரும் தலைவனைத் தோழி, தலைவனுக்கு ஏற்படும் துன்பங்களை எடுத்துக்கூறித் தலைவியைத் திருமணம் செய்தல் வேண்டும் எனும் இடத்தில் தோழி கலக்கமுறும் நெஞ்சம் வெளிப்படுகிறது. இதனை, "கணணொடு வாரா என்நார் இல் நெஞ்சே" என்ற அடி உணர்த்துகிறது.

"அன்னை காக்கும் தொல் நலம் சிதையக்
காண்தொறும் கலுழ்தல் அன்றியும், ஈண்டு நீர்
முத்துப் படு பரப்பின் கொற்கை முன் துறைச்
..............................................................
தெண் நீர் மலரின் தொலைந்த
கண்ணே காமம் கரப்பு அரியவ்வே" (நற்.23)

தலைவியோடு களவொழுக்கத்தில் மகிழ்ந்த தலைவன் வரைவு செய்ய காலம் தாழ்த்துகிறான். அதனைக் கண்டு வருந்திய தலைவியின்

தன்மையறிந்து தோழி தலைவனிடம் வருந்திக் கூறுவதாக இப்பாடல் அடிகள் அமைந்துள்ளது.

தலைவியை நாடிவந்த தலைவன் அவளைக் கூடும் வாய்ப்பின்றித் தோழியைக் கண்டு உரைத்தனன். அத்தன்மையில் தோழி தலைவியின் சிறப்பைக் கூறி அவளை நீ ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று வருந்தி கூறுவதாக,

“அவ் வளை வெரிநின் அரக்கு ஈர்த்தன்ன
செவ் வரி இதழ சேன் நாறு பிடவின்
நறுந்தாது ஆடிய தும்பி, பசுங் கேழ்ப்
..................................................
கண்டும் கழல்தொடி வலித்த என்
பண்புஇல் செய்தி நினைப்பு ஆகின்றே” (நற்.25)

என்பது அப்பாடலாகும்.

**தோழி தலைவியிடம் கலங்கியுரைத்தது**

தலைவன் விரைந்து தலைவியை மணம் கொள்ளவேண்டும் என்பதை விளக்கும் வண்ணமாய் தோழி தலைவியிடம் வருந்திக்கூறும் பாடலொன்று நற்றிணையின் 47 ஆவது பாடலாக அமைகிறது. அப்பாடலின் பொருளாவது நின் மேனியில் களவொழுக்கத்தால் நேர்ந்த பிரிவுத் துன்பத்தால் உண்டான வேறுபாட்டினை அறிந்த அன்னை தெய்வம் குற்றம் என்று எண்ணி வேலன் வெறியாடலை நிகழ்த்திக் கழங்குகளை உருட்டியும் ஆட்டினைப் பலியிட்டும் கண்டனள். ஆயினும் நின் பசலை நோய் தீர்த்திலாய்ப் பெரிதும் கவலையுற்றனள்.

புலியானது ஆண் யானையைக் கொல்ல அதனைக் கண்ட பெண் யானை பெருந்துயர் கொண்டு தன் கன்றுடன் தழுவியவாறு வருந்தி

நிற்கின்றது. அத்தன்மையுடைய கானக நாடன் நம் தலைவன் அவனிடம் நமது துன்பநிலையினை எடுத்து உரைத்தலும் குற்றம் ஆகுமோ எனத் தோழி தலைவியிடம் வருந்திக் கூறுவதாய் கீழ்காணும் பாடல் அடி விளங்குகின்றது.

"பெருங் களிறு உழுவை அட்டென இரும்பிடி
உயங்கு பிணி வருத்தமொடு இயங்கால் செல்லாது
நெய்தற்பாசடை புரையும் அம் செவிப்
பைதலம் குழவீ தழீஇ ஓய்யென
அரும்புண் உறுநரின் வருந்தி வைகும்
..............................................
வெறியென உணர்ந்த உள்ளமொடு மாறியறுத்து
அன்னை அயரும் முருகுநின்
பொன்நேர் பசலைக்கு உதவா மாறே" (நற்.47)

என்பது அப்பாடலாகும்.

**சிறைப்புறமாக நின்ற தலைவனிடம் கூற்று**

களவொழுக்கத்தில் மகிழ்ந்த தலைவன் வரைவு கொள்ளக் காலம் தாழ்த்தினான். அவன் சிறைப்புறமாக நிற்க தோழி அவன் செவியுறுமாறு தலைவியை நோக்கிக் கூறுவதாய் அமையும் மற்றொரு பாடல்.

"யான் அஃது அஞ்சினென் கரப்பவும் தான் அஃது
அறிந்தனள் கொல்லோ! அருளினள் கொல்லோ
.........................................................
தண்ணென உண்டு கண்ணின் நோக்கி
முனியாது ஆடப் பெறின் இவள்
பனியும் தீர்குவள் செல்க என்தோளே" (நற்.53)

தோழியானவள் தலைவியின் வாட்டத்தைத் தலைவன் அறிந்துகொள்ள வேண்டும் எனும் நோக்கத்தோடு கூறுகின்றாள். நின்

மேனியின் வாட்டத்திற்கு தலைவனைப் பிரிந்திருத்தல்தான் காரணம் உன் அன்னையிடம் கூறுவதற்கு அஞ்சினேன். இருந்தும் அவள் பலவாறு கேட்டபின்பு மலைப்பக்கத்தே புதுவெள்ளம் வருகின்றது, புதுவெள்ளத்தில் இனியவாறு நீராடினால் மகிழ்வளிக்கும் என்று கூறினாள். அவள் அவ்வாறு கூறியது உன் ஒழுகலாற்றை அறிந்துதான் கூறினாளோ? யான் அறியவில்லை என்று கூறுவதாய் தலைவன், தலைவியை விரைவில் திருமணம் செய்யவேண்டும் என்பதை நோக்கமாகக் கொண்டு கூறுகிறாள்.

**தலைவியை காணவந்த தலைவனிடம் கூறியது**

"ஓங்குமலை நாட! ஒழிகநின் வாய்மை
காம்புதலை மணந்த கல்லதர்ச் சிறுநெறி
........................................................
கண்கோள் ஆக நோக்கி பண்டும்
இணையையோ என வினவினள் யாயே,
அதன் எதிர் செல்லாள் ஆகி, அல்லாற்று
என்முகம் நோக்கி யோளே! அன்னாய்
..........................................................
ஈங்கு ஆயிளவால் என்றிசில் யாளே" (நற்.55)

எனும் இப்பாடல் பகற்குறியில் வரும் தலைவனை நோக்கி தலைவி இற்செறிக்கப்படுவள் என உரைத்துத் தோழி தலைவனுக்குக் கூறி விரைவில் வரைவு கொள்ளுமாறு சாற்றியது.

"தடங்கோட்டு ஆமான் மடங்கல் மாநிரைக்
..........................................................
செங்கோல் கொடுங்குரல் சிறுதிணை வியன்புண்
கொய்பதம் குறுகும் காலைஎம்
மைஈர் ஓதி மாண்நலம் தொலைவே" (நற்.57)

உன்னுடை நாட்டில் வாழும் குரங்கானது தன்னுடைய குட்டி பாசத்திற்காக ஏங்குவதைப் பொறுக்காமல் மிகவும் கொடிய விலங்குகள் இருக்கும் இடம் சென்று தன்னுடைய கன்றுகளொடு உறங்கி பசுவின் மடியில் காம்பினைப் பற்றிப் பாலைக் கறந்து தன்னுடைய குட்டிகளுக்கு கொடுத்து அதன் ஏக்கத்தை போக்கியது. அத்தகைய நாட்டில் வாழும் தலைவரே நீ என்னுடைய தலைவியின் ஏக்கத்தை விரைவாக நீக்கிவிடு என்பது இப்பாடலின் கருத்து. தலைவியை உரிய காலத்தில் தலைவன் மணம்கொள்ள வேண்டும் என்பது இங்கு உணர்த்தப்படுகின்றது.

தலைவி இற்செறிப்புக்கு ஆளாகக் கூடும். அதனால் தலைவியை விரைவில் தலைவன் மணம் கொள்ளவேண்டும் என்பது இப்பாடல் வழி அறியமுடிகின்றது.

"விளையாடு ஆயமொடு ஓரை ஆடாது
..........................................................
வல்லதின் வணங்கிச் செல்லநர்ப் பெறினே
செல்க என விடுநாள் மன்கொல்லோ! ஒல்லுமிழ்ந்து
உரஉரும் ஊறும் அரைஇருள் நடுநாள்
..........................................................
ஆடுமழை இறுத்தன்று அவர் கோடுயர் குன்றே" (நற்.68)

"எம் ஊர் வயில் உண்துறைத் தடைஇய
கடவுள் முவமரத்து உடன்துறை பழகிய
தேயா வளைவாய்த் தெண்கண் கூர்உதிர்
வாய்ப்பறை அசாஅம் வலிமுந்து கூகை!
மை ஊன் தெரிந்த நெய்வெண் புழுக்கல்
எலிவான் சூட்டொடு மலியப் பேனுதாம்
எஞ்சாக் கொள்கைஎம் காதலர் வரல் கசைஇத்

துஞ்சாது அலமரு பொழுதின்

அஞ்சுவரக் கடுங்குரல் பயிற்றாதீமே" (நற்.83)

எனும் இப்பாடலில் களவுக் காலத்தில் தலைவன் தலைவியைச் சந்திக்கிறான். இத்தகைய களவொழுக்கம் தலைவியின் தாய்க்குத் தெரிந்தால் தலைவி இற்செறிக்கப்படுவாள். எனவே தலைவன் இரவுக்குறி வருவதைத் தவிர்த்து விரைவில் மணம்கொள்ளவேண்டும் என்று தலைவன் செவியுறுமாறு தோழி வருந்திக் கூறுவதாய் அமைந்ததாகும்.

அழகிய நெற்றியையுடைய தலைவியே தேன்விளங்கும் மலைச்சாரலில் உள்ள தினைப்புனத்தில் உள்ள முற்றிய கதிர்களைக் சிவந்த வாயையுடைய கிளிகள் கவர்ந்து செல்லும். அது கண்ட அன்னை நீ எங்கு சென்றாய் எனக் கேட்பார். நீயும் பூக்களைப் பறித்திலன், அருவி நீரும் சூடிலன், குன்றநாட்டுத் தலைவன் பற்றி பிறர் கூறவும் கேட்டிலன் என்றதும் நின் சொல்லைக் கேட்டதும் நின் அன்னை யாது உரைத்திலள். எனவே தலைவன் விரைந்து மணம்கொள்ளவேண்டும் எனும் பாடலொன்று தோழி கூற்றாக அமைகின்றது.

"யாங்கு ஆ குவமோ அணிநுதற் குறுமகள்

தேம்படு சாரற் சிறுதிணைப் பெருங்குரல்

..............................................................

அருவி ஆர்க்கும் பெருவரை நாடனை

அறியலும் அறியேன் காண்டலும் இலனே

..............................................................

தலை இறைஞ் சினனே அன்னை

செலவு ஒழிந்தனையால் அறியை நீ புனத்தே" (நற்.147)

இங்கு அன்னை தலைவியின் காதலை அறிந்துகொண்டமையும் அதனால் இற்செறிப்பு நிகழ்த்தப்படக்கூடும் என்பதும், தலைவன்

விரைந்துவந்து திருமணம் செய்துகொள்ளவேண்டும் என்பதும் உணர்த்தப்படுகிறது.

**வரைவுவேண்டி தலைவனிடம் கூறியது**

பழமையுடைய வலிமையும் சினமும் கொண்டு புலியைக் கொன்ற களிற்றினது இரத்தக்கறை படிந்த கோட்டினைக் கழுவும் வகையில் இரவில் மழை பொழிந்தது இடிக்குரலையும் மேகம் தந்தது அது இரும்பு வில்லால் அடிக்கப்பட்டு நெய்ம்மையான பஞ்சைப் போன்ற வழியையுடைய நாட்டின் தலைவனே நீ தலைவியை மனம் கொள்ளவில்லையானாலும் நின் தலைமைக்கு பொருந்தாத செயல்களைச் செய்தாலும் நின் உள்ளத்தின் தன்மைப்படியே தலைவி நடந்துகொள்ளும் நற்பண்பினள். இவளுடைய நெற்றியில் தங்கும் பசலை நோய்க்கு மருந்து நின்னயல்லது வேறு இல்லை. அதனை நன்கு அறிந்து வினைமேற்செல்வாயாக என்று தோழி வருந்துவதாக அமைந்த பாடலொன்று,

"தொன்றுபடு துப்பொடு முரண் மிகச் சினைஇக்
கொன்ற யானைச் செங்கோடு கழாஅ
.......................................................
நல்காய் ஆயினும், நயன் இல செய்யினும்
நின் வழீப்படு உம் என் தோழி கன்னுதல்
இருந்திறை கூடிய பசலைக்கு
மருந்து பிறிது இன்மை நன்கு அறிந்தனை சென்மே" (நற்.247)

என்பதாகும்.

களவொழுக்கத்தில் தலைவனொடு கூடி மகிழ்ந்த தலைவி இற்செறிப்புக்கு ஆளாகியதால் இனித்தலைவன் வரைவொடு வந்து தலைவியை மணம் கொள்ளுதலே செய்யத்தக்கது என்று தோழி தலைவனுக்கு கூறுவதாய் கீழ்க்காணும் பாடல் அமையப்பெற்றுள்ளது.

"புள்ளுப்பதி சேரினும் புணர்ந்தோர்க் காணிலும்
பள்ளி யானையின் வெய்ய உயிரினை
கழிபட வருந்திய எவ்வமொடு பெரிகழிந்து
எவை கேளாய் நினையணி நீ நனி
உள்ளினும் பளிக்கும் ஒற்றாழைக் குறுமகள்
பேரிசை உருமொடு மாரிமுற்றிய
பல்குடைக் கள்ளின் வண்டு மகிழ்ப்பாரி
பலவுறு குன்றம் போலப்
பெருங்கவின் எய்திய அருங்காப்பினளே" (நற்.253)

என்பது அப்பாடலாகும்.

களவொழுக்கத்தில் தலைவியைக் கூடி மகிழ்ந்த தலைவன் இரவுக்குறியை நாடுகிறாள். அவன் வரைவு கொள்ளுதற்கு காலத்தை நீட்டித்தலை அறிந்த தோழி இரவுக்குறியிற் வருவதால் ஏற்படும் இன்னல்களை கூறியும் அதனால் தன்னுடைய மனம் வருந்துவதையும் தலைவனுக்கு எடுத்துக்கூறி விரைந்து மனம் கொள்ளுமாறு தலைவனை வேண்டுவதாய் அமைந்த மற்றொரு பாடல்,

"பிணர்ச் சுவர் பன்றி தேன் முலைப் பிணவொடு
கணைக்கால் ஏணல் கைம்மிக்க கவர்தலின்
.......................................................
இரவின் அஞ்சாய் அஞ்சுவல் அரவின்
ஈரளைப் புற்றம் காரென முற்றி
இரைதேர் என்இனம் அகழும்
வரைசேர் சிறுநெறி வாரா தீமே" (நற்.336)

எனும் பாடலாகும்.

இதனைப்போல் களவொழுக்கத்தில் தலைவன் தலைவியை மணம் கொள்ளத் தாமதம் செய்யத் தோழி தலைவியின் இற்செறிப்புக் கூறி மணம் கொள்ளுமாறு கூறியது.

"தானது பொறுத்தல் யாவது கானல்
ஆடரை ஒழித்த நீடிரும் பெண்ணை
விழ்கா வோலைச் சூழ்சிறை யாத்த
..................................................
கடுவெயில் கொதித்த நிரை செலப்பார்ப்போர்
அளம் போகு ஆகுலம் கடுப்பக்
கௌவையா கின்றது ஐய நின் நட்பே" (நற்.354)

இப்பாடலாகும்.

தலைவனின் உறவால் தலைவி துன்புற்ற தன்மை நீங்கும் வகையில் விரைவில் மணம் கொள்ள வேண்டும் என்று உணர்த்துவதாய் கீழ்காணும் பாடல் இயம்புகின்றது.

"பெய்து போகு எழிலி வைகுமலை சேரத்
தேன் தாங்கு உயர்வரை அருவி ஆர்ப்ப
வேங்கை தந்த வெற்பணி நன்னாற்
நின் மார்பு அணங்கிய செல்லல் அருநோய்
யார்க்கு நொந்து உரைக்கோ யானே! பன்னாள்
காமர் நனி சொல் சொல்ல
ஏமம் என்று அருளாய் நீ மயங்கினையே" (நற்.396)

"பொருதிரை நிவப்பின் வரும் யாறு அஞ்சுவல்
பாம்பு கவின் அழிக்கும் ஓங்குவரை பொத்தி" (நற்.114)

எனும் பாடலில் தலைவன் இரவுக்குறிவருதலை அறிந்த தோழி, தலைவன் கடந்துவரும் இடங்களை எண்ணிகலக்கமடைகிறாள்.

ஊரில்கேட்கும் மக்கள் ஆரவாரம், கடந்துவரும் காட்டாறு, முதலியவற்றால் தலைவனுக்குத் துன்பம் ஏற்படும் என எண்ணுகிறாள். இதனை 'நிவப்பின் வரும் யாறு அஞ்சுவல்' என்ற அடி வெளிப்படுத்துகிறது. இதனை,

"பனித்துறைப் பெருங்கடல் இறந்து

நீர் பருகிக் குலவுத்திரை அருந்து கொள்கைய"[7] (அகம்.183)

என்ற அகநானூற்று அடிகளும் உணர்த்துகின்றன.

"நீயே அடி அறிந்து ஒதுங்கா ஆர் இருள்வந்தூம்

கடியுடை வியல்நகர்க் காவல்நீவீயும்" (நற்.156)

எனும் பாடலானது இருளின் கொடுமை மற்றும் நாட்டின் காவல்நிலைகளை எடுத்துக்கூறி தலைவனைப் பகலில் வந்து சந்திக்குமாறு கூறும் இவ்விடத்தில் தோழியின் அன்பு நெஞ்சம் வெளிப்படுகிறது. இதனைப் போன்று

"மாரி நின்ற ஆர் இருள் நடுநாள்

அருவி அருக்கத்து ஒருவேல் ஏந்தி" (நற்.334)

என்ற பாடலில் மழைக்காலத்தில், இருள் சூழ்ந்த நேரத்தில் தலைவியைச் சந்திக்கவரும் தலைவனைத் தோழி இக்கால நேரத்தில் வரவேண்டாம் எனக் கூறும் அச்ச மொழிகளில் தோழியின் கலக்கம் வெளிப்படுகிறது. இதனை போன்று,

"மாரி வானந்தலைஇ நீர்வார்பு இட்டருங்

கண்ண படுகுழி இயவின் இருளிடை"[8] (அகம்.120)

எனும் அகநானூற்றுப் பாடலிலும் காணமுடிகின்றது.

**பகற்குறியில் தோழி தலைவனுக்கு உரைப்பவை**

தோழி தலைவனைக் கடுமையான மற்றும் மென்மையான வார்த்தைகளில் கடிந்துகொள்வதுண்டு. அவை பெரும்பாலும் பகற்குறி,

இரவுக்குறி எனும் குறியிடங்களில் நிகழும். இவையும் கலக்கத்தினால் ஏற்படும் கடிதலேயாகும்.

"தோழி வரைவு கடாதலைத் தலைவன் முன்வைக்கும் பாங்கு, புணர்வுநாட்டம் மிக்க தலைவனின் உள்ளக்கிடக்கையை முழுவதும் மனத்திற்கொண்டு அமைதலைக் கொண்டு காண்கிறோம்"[9]

என்ற சான்று மூலம் குறியிடங்களில் தோழி நிகழ்த்தும் கூற்று நோக்கம் தலைவன் தலைவியை வரைந்துகொள்ளும் நோக்கில் அமைகிறது. இவ்வாறு குறிஞ்சித்திணையில் நான்கு பாடல்கள் பகற்குறி அடிப்படையில் அமைகிறது.

"பூண் தாழ் ஆகம் நாண் அட வருந்திய
பழங்கண் மாமையும் உடைய
உயிர்க் குறியெதிர்பை பெறல் அருங்குரைத்தே" (நற்.93)

எனும் இப்பாடலில் பகற்குறியில் தலைவியைச் சந்தித்த தலைவனைத் தோழி தலைவியின் அழகு நலன் கெடுமுன் திருமணம் செய்தல் வேண்டும் எனவும், முரசொலி கேட்டவுடன் தலைவன் நம்மை வரைந்து கொள்ளவருகிறான் என்றத் தலைவியின் மனக்கலக்கத்தையும் தோழி எடுத்துரைக்கும் இடத்தில் தோழியின் கலங்கிய நெஞ்சம் வெளிப்படுகிறது.

"கல் கெழு நாடன் கேண்மை
அறிந்தனள்கொல்? அஃது அறிகலென் யானே" (நற்.206)

தோழி, தலைவியைத் தந்தையார் காவல்செய்துள்ளார். நம் களவு வாழ்வு அறிந்தனர் எனயான் அறியேன் என்று தோழி தலைவன் தலைவியைக் களவு வாழ்வை வீட்டில் உள்ளவர்கள் அறிந்தனர் என்று கலக்கமுறுவதைக் கூறும் பாடலாகும்.

"நல் நுதல் பசந்த படர் மலி அருநோய்

அணங்கு என உணரக் கூறி, வேலன்" (நற்.322)

என்ற நற்றிணை அடியில் தலைவிக்கு ஏற்பட்ட பசலை நோயால் உடல்மெலிவு ஏற்படுகிறது. அவற்றை அன்னை அறிந்து வெறியாட்டு நிகழ்த்துகிறாள் எனக் கூறும் இவ்விடத்தில் தோழியின் கலக்க மொழி மேலோங்கி நிற்கிறது. தோழியின் இச்செயலை,

"தலைவன் முன் தலைவியின் அவலநிலை உள்ளத்தைத் தொடுமாறு எடுத்துரைக்கப்படுகிறது."[10]

என்று திறனாய்வாளர்கள் தனித்துச் சுட்டுகின்றனர்.

"வணர் குரற் சிறுதினை கடிய

புணர்வது கொல்லோ! நாளையும் நமக்கே" (நற்.373)

எனும் பாடலில் இற்செறிப்பு நிகழ்வதைத் தலைவனிடம் எடுத்துக்கூறி நாளை சந்திக்க இயலாது எனத் தலைவனிடம் கூறும் இடத்தில் தோழி நெஞ்சம் வெளிப்படுகிறது.

"தலைவியோடு பேச வேண்டும் எனும் வேட்கைத் தலைவன் மனத்தில் நிறைந்து நிற்கின்றது. ஆனால் அதற்குத் தடைநேர்கிறது"[11]

என்ற சான்று தலைவியின் கலக்கமுற்ற நிலையினை எடுத்துக்காட்டு இப்பாடலடிகள்.

**தோழி தலைவியிடம் கலங்கி மொழிவது**

தலைவன் பிரிந்தபின் ஆற்றாலாத தலைவியைத் தோழி, ஆற்றுவிக்கும் சூழல்களாக இலக்கியங்கள் சுட்டுவன மூன்று. அவை

1) களவில் வரைவிடை வைத்துப் புரிந்த சூழல்

2) கற்பில் பிரிவிடை ஆற்றாத சூழல்

3) பருவம் கண்டு தலைவி ஆற்றாத சூழல்

ஆகியனவாகும். அகத்திணை மாந்தர்களின் செயல்கள் குறித்துக் கூறும்போது,

"தொல்காப்பியர் களவில் தலைவன் வரைவிடை வைத்துப் பிரிந்த போதும் கற்பில் பரத்தையின் பிரிவின் போதும் கற்பில் பரத்தையற் பிரிவின் போதும் தோழி தலைவியை ஆற்றுவிப்பதாகச் சுட்டுவர்"[12]

என இராமகிருஷ்ணன் தனது அகமாந்தர்கள் குறித்த ஆய்வில் எடுத்துரைப்பது நோக்கத்தக்கது. கற்பில் தலைவன் கொள்ளும் பிற பிரிவின் போது தலைவியை ஆற்றுவித்ததைத் தொல்காப்பியர் சுட்டாமையின் இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் பிற என்னும் மிகைச் சொல்லைப் பயன்படுத்திக் கற்பில் பிரிவிடை வருந்தும்போதும், பருவம் கண்டு ஆற்றாதபோதும் தலைவியைத் தோழி ஆற்றுவித்தலையும் தொல்காப்பியர்க்கு உடன்பாடாகக் கொள்வர்.

கற்பில் ஓதல், பகை, தூது, பொருள்வயிற் பிரிவு ஆகிய நான்கு வகைப்பிரிவு பற்றித் தொல்காப்பியர் குறிப்பிடுகிறார். இவற்றுள் ஓதல் பிரிவு பற்றி இலக்கியங்கள் சுட்டவில்லை. இந்நான்கு பிரிவுகளும் முன்கூட்டித் திட்டமிட்டு வரையறுக்க இயல்பவை திரும்பும் காலமும் வரையறுக்க இயலும் இவை போன்று திட்டமிட்டு வரையறுக்க இயலாததும், சொல்லிப் பிரியமுடியாததுமாக அமைதலின் பரத்தையிற் பிரிவைப் பிரிவு வகைகளுள் உட்படுத்தாது தொல்காப்பியர் விடுத்தார் எனக் கொள்ளுதல் வேண்டும்.

ஓதல், பகை, தூது, பொருள் ஆகிய பிரிவுகளில் தலைவன் திரும்பிவரும் காலத்தைக் குறித்துச் செல்லுதலின் அக்காலம் வரும்வரை தலைவி ஆற்றியிருக்க இயலும்.

இலக்கியங்களில் தலைவனின் பரத்தையிற் பிரிவின்போது தலைவியைத் தோழி ஆற்றுவித்ததாகச் சான்று இல்லை. இவ்வாறு மேற்கூறிய முறைகளில் தோழி தலைவிக்கு உரைப்பனவாகப் பத்துப்பாடல்கள் அமைந்துள்ளன. அவை,

1. தோழி தலைவியை ஆற்றுவித்தல்

2. தலைவன் வரவு உணர்த்தல்

என்ற நிலையில் பொதுவாக அமைந்துள்ளது.

சூழலை விளக்கி மணம் புரியுமாறு தலைவனைத் தோழி வேண்டுவது வரைவுகடாதல் எனப்படும். இது களவைக் கற்பாக்கத் தோழி எடுக்கும் முன் ஏற்பாடு தோழி வரைவுகடாவும் சூழலைத் தொல்காப்பியர் பின்வருமாறு வரையறுப்பர்.

1. இற்செறிப்புக் கடுமையால் தலைவியின் காதல் மிகும் சூழல்.
2. தலைவனின் ஆற்றாமை அறிந்து தலைவி கலங்கும் சூழல்.
3. தலைவனது நாடு, ஊர், இல், குடி, பிறப்பு, சிறப்பு ஆகியன கூறித் தோழி வரைவுவேண்டும் சூழல்

இவற்றுள் முதலிரண்டும் வரைவு கடாதல் எழும் சூழலை சுட்டுவதாகும். இறுதிவரைவு கடாவும் முறையைச் சுட்டும்.

"யாங்கு வருவது கொல்லோ தீம்சொல்
செறிதோட்டு எல் வளைக் குறுமகள்
சிறுபுனத்து அல்கிய பெரும் புறநிலையே" (நற்.306)

எனும் இப்பாடல் வழி தினை முற்றியதால் அறுவடைக்குரியதாயிற்று. இனித் தலைவன் காவல் காக்க வேண்டியதின்று எனும் இனித் தலைவனைத் தலைவி கான இயலாது தலைவன் தலைவியைச் சந்திக்க வரஇயலாத நிலையில் தோழி கலக்கமடைகிறாள். ஆகவே தலைவனை விரைவில் மணந்துகொள்ள வேண்டும் எனக் இக்கூற்று அமைந்துள்ளது. இதனை 'யாங்கு வருவது கொல்லோ' என்ற அடி இதனைச் சுட்டுகிறது. மேற்கூறிய பாடல்அடிகள்,

"தலைவனைப்போலப் புணர்வு வேட்கையேயன்றி வரைவு வேட்கையும் உடன் நிற்பது தலைவியின் மனநிலை, தலைவிக்குத்தன்னை நினையும்போது புணர்வு வேட்கையும்

சமுதாயத்தை நினையும் போது வரைவு வேட்கையும் உடன் எழுகின்றன"[13]

இங்கு தோழி கலக்கம் சமுகத்தை எண்ணியும் வரைவு வேட்கையினாலும் புலம்பினாள் எனலாம்.

"ஆயமொடு குற்ற குவளை
மா இதழ் மாமலர் புகைஇய கண்ணே" (நற்.317)

தலைவியை திருமணம் செய்துகொள்ளாமல் களவிலேயே வந்து ஒழுகும் தலைவனிடம் தோழி மலைநாடனே! நீ தலைவிமேல் கொண்ட காதல் ஒழுக்கத்தை எங்கள் அன்னை அறிந்தால். இவளில் கண் நீர் வடியப் பெற்று சிவந்து வேறுபாடு அடைந்து எந்த நிலையை அடையுமோ என்று அஞ்சுகிறேன். ஆகையால் விரைவில் மணம்புரிவாயாக என வருந்திக் கூறுகிறாள்.

"கனை இருள் புதைத்த அஞ்சுவரும் இயவில்
பாம்பு உடன்று இரிக்கும் உருமொடு
ஓங்கு வரை நாடநீ வருதலானே" (நற்.383)

என்ற பாடல் அடியில் தலைவியைச் சந்திக்க தலைவன் இரவில் வருகிறான். அதனால் தலைவனுக்கு இருள் மற்றும் கொடிய விலங்குகளால் துன்பம் ஏற்படும் என வருத்தமுறுகிறாள் தோழி. எனவே தலைவனை விரைவில் வரைந்துகொள்ள வேண்டும் என அறிவுறுத்துகிறாள். இதனை "இருள் புதைத்த அஞ்சுவரும்" என்ற பாடல் வெளிப்படுத்துகிறது.

"நின் மார்பு அணங்கிய செல்லல் அருநோய்
யார்க்கு நொந்து உரைக்கோயானே"

என்ற பாடலில் களவுக் காலத்தில் தலைவனைச் சந்தித்த தலைவி தலைவனின் பிரிவால் வருத்தமுற்று உடல் மெலிவுகின்றாள். இதனைக்

*கண்டதோழி தலைவியின் காம நோயினை யாரிடம் கூறி நொந்துகொள்வேன் என்று எண்ணி வருந்துகிறாள். இதனை,*

*"காமம் செப்ப நாணின்று கொல்லோ"[14] (அகம்.**330**)*

*என்ற அகநானூற்றுப்பாடல் அடியும் உணர்த்தி நிற்கிறது. மேற்கூறிய நற்றிணைப்பாடல் தோழி மனக்கலக்கத்தை வெளிப்படுத்துகிறது.*

*இவைபோன்று **103, 368, 376** ஆகிய பாடல்களிலும் தோழி தலைவனுக்குச் சில கடுமொழிகளைக் கூறி நிற்கிறாள். அவை அனைத்திலும் தலைவன் தலைவியை வரைந்துகொள்ள வேண்டும் என்ற எண்ணமே மேலோங்கி நிற்பதைக் காணமுடிகிறது.*

*"சுடர் புரை திரு நதல் பசப்ப,*

*தொடர்பு யாங்கு விட்டனை நோகோயானே!" (நற்.**108**)*

*எனும் பாடலில் தலைவன் களவு காலத்தில் புணர்ந்தபின் தலைவியின் சந்திப்பைக் கைவிட்டான். அதனால் தலைவி நுதல் பசந்து காணப்படுகிறது. இதனை எண்ணித் தோழி கலங்கி தலைவனை நோக்கி "தொடர்பு யாங்கு விட்டனை" என தலைவனைக் கடிந்து வரைவுக்கு உடன்படத் தூண்டுகிறாள்.*

*"வட புல வாடைக்குப் பிரிவோர்*

*மடவர் வாழிஇவ் உலகத்தானே" (நற்.**366**)*

*என்ற பாடல் அடியில் தோழி தலைவனின் பிரிவைத் தடுக்கும் நோக்கில் உள்ளது. தலைவன் பொருள் காரணமாகப் பிரியும் போது அப்பிரிவால் தலைவி வருந்துவாள். தலைவியிடம் இன்பம் நுகரவேண்டும் என்ற நிலையில் தனது உள்ளக் கலக்கத்கதை நினைக்கிறாள். இங்குத் தலைவியின் நலனையும் அவளின் மகிழ்வையும் உள்ளத்தில் நினைத்துப் பிரிவைத் தடுக்கிறாள்.*

"பொருள் வேண்டிச் செல்வது தலைவனின் உள்ளம், அவன்
அருள்வேண்டி நிற்பது தலைவியின் உள்ளம்"[15]

என்ற சான்று மேற்கூறிய கருத்தைத் தெளிவுபடுத்துகிறது.

"வறும் புனம் காவல் விடாமை
அறிந்தனிர் அல்லிரோ அறன் இல்யாயே?" (நற்.376)

தோழி! கிளிகளை நோக்கி! தலைவி காவலில் வைக்கப்பட்டாள். அன்னை வெறியாட்டு எடுக்கப்போகிறாள், தெய்வம் என்னைத் துன்பப்படுத்தும். ஆகவே தலைவனைக் கண்டால் தலைவியை வரைந்துகொள்ள வேண்டும் எனக் கூறுங்கள் எனத் தன் கூற்றுப் பாடலில் அவளின் கலக்கமும் பயமும் வெளிப்படுகின்றன.

**தோழி தலைவியை கலக்கம் மறைத்து அவளை ஆற்றுவித்தல்**

தலைவியை ஆற்றுவிக்கும் தோழி தான் மனத்துள் கலங்கினாலும் தலைவியைத் தேற்றுவதற்குப் பின்வரும் அணுகுமுறைகளைக் கையாளுகிறாள்.

1. தலைவன் குறித்துச் சென்ற பருவ வரவைக் காட்டித் தேற்றுதல்.
2. தலைவி பருவம் கண்டு அழிந்தபோது இது பருவம் அன்று என மறுத்தல்.
3. நன்னிமித்தங்களைச் சுட்டி ஆறுதல் அளித்தல்.
4. சுரத்தில் இணைந்துநிற்கும் இயற்கை உயிர்களைத் தான் காணும் வாய்ப்பினை எடுத்துரைத்த தலைவன், வரவிற்கான காரணத்தைச் சுட்டல்.
5. தலைவனின் நற்பண்புகளை எடுத்துரைத்து வருவார் என நம்பிக்கை ஊட்டடல்.

இச்செய்கைகள் தலைவியை ஆற்றுவிப்பதாக இருப்பதாலும், மறைமுகமாக தோழியின் வருத்தமும், தலைவி மீது அவள் கொண்ட

அன்பையும், தலைவிக்கு யாதும் நேர்ந்து விடக்கூடாது என்ற தவிப்பிலுமாக அமைகிறது.

பருவம் கண்டு அழிந்த தலைவியைத் தேற்றும் தோழி பருவ வரவின் அளவிற்கேற்பத் தேற்றும் முறைகளைக் காணமுடிகிறது. இக்கூற்றுமுறைகள் தலைவியைச் சந்திக்க சிறைப்புறமாக நிற்கும் தலைவனைச் சாடுவதாகவே அமைகின்றன. அக்கூற்றில் வரைவு நோக்கமாகவே அமைவதைக் காணமுடிகிறது.

"உருகி உகுதல் அஞ்சுவல், உதுக்காண்
தம்மோன் கொடுமை நம் வயின் எற்றி
யாம்செய் தொல் வினைக்கு எவன் பேதுற்றனை?
வருந்தல் ; வாழ்! - தோழி - யாம் சென்று
..........................................................
உருகி உருதல் அஞ்சுவல் : உதுக்காண்
தம்மோன் கொடுமை நம் வயின் எற்றி
நயம் பெரிது உடைமையின் தாங்கல்செல்லாது
கண்ணீர் அருவியாக
அழுமே, தோழி! அவர் பழம் முதிர் குன்றே" (நற்.88)

என இடம்பெறும் பாடலில், நெடுங்காலமாக வரைந்துகொள்ளாது களவு நீடித்ததால் அதனைத் தலைவனுக்கு எடுத்து இயம்பும் நோக்கிலும், வரைவில் தலைவன் தலைவியைத் திருமணம் நிகழ்த்தல் வேண்டும் என்ற நிலையிலும், தலைவியின் கலக்கங்களை எடுத்துக்கூறி கூற்று நிகழ்த்துகிறாள். இதனை 'உருகி உருதல் அஞ்சுவல்' என்ற அடி எடுத்துக்காட்டுகிறது. இதனை,

"உப்பியல் பாவை உறைஉற்றதுபோல
உக்குவிடும் என் உயிர்"[16] (கலி.138)

என்ற கலித்தொகைப்பாடலும் வெளிப்படுத்துகிறது.

*"மலை இமைப்பதுபோல் மின்னி*

*சிலை வல் ஏற்றொடு செறிந்த இம் மழைக்கே" (நற்.112)*

*என்ற பாடல்அடி பருவ வரவால் தலைவன் வர இயலாத நிலையில் துன்பமடையும் தலைவியைத் தோழி ஆற்றிவிக்கும் நிலையில் அமைகிறது. கருமேகம் கொண்டு மழைபெய்த பின்னர் தலைவி வருந்துகிறாள். அதனால் தோழி மழையை நோக்கி தலைவியின் துன்பத்திற்குகான காரணத்தை எண்ணி கலங்கியதை 'செறிந்த இம் மழைக்கே' என்ற அடியின் மூலம் அறியமுடிகிறது.*

*"கருவி மாமழை வீழ்ந்தென அருவி*

*விடரகத்து இயம்பும் நாட! - எம்*

*தொடர்பும் தேயுமோ, நின் வயினானே?"[17] (குறு.42)*

*என்ற குறுந்தொகைப்பாடல் தோழியின் கலக்க நிலையைச் சுட்டுகிறது.*

*"அழுந்துபட விடரகத்து இயம்பும்*

*எழுந்து வீழ் அருவிய மலை கிழவோனே?" (நற்.228)*

*என்ற பாடல் வழி களவு காலத்தில், சிறைப்புறமாக வந்து நிற்கும் தலைவனை வரைவுசெய்தல் வேண்டும் என்னும் நிலையில் இக் கூற்று அமைகிறது. களவு வெளிப்பட்டு அலர் ஏற்படும். அதற்கு முன்பே தலைவியை வரைந்துகொள்ள வேண்டும் என்னும் நோக்கில் அச்சத்துடன் தோழி கூறும் முறை இப்பாடலில் வெளிப்படுகிறது.*

*"தலைவன் களவின்பமே விரும்பி திருமணம் செய்யாது கால நீட்டிப்பு செய்துகொண்டு இருக்கும் தோழி அவனுக்கு விரைவில் திருமணம் செய்யவேண்டும்"[18]*

*என்ற தோழியின் நோக்கம் வெளிப்படுகிறது.*

"அரிய போலக் காண்பேன்

கடல் பெயர்ந் தனைய ஆகி,

புலர் பதம் கொண்டன ஏனற் குரலே?" (நற்.259)

என்ற பாடல் மூலம் தோழியின் நெஞ்சம் வெளிப்படுகிறது. இதனைப் போன்ற ஒரு பாடலைக் குறுந்தொகையிலும் காணமுடிகின்றது. தினை முற்றியது. அதனால் நாம் காவலுக்குச் செல்லமுடியாது. ஆகவே நாம் தலைவனைச் சந்திக்க முடியாது. இனி என்ன செய்தல் வேண்டும் என்று தோழி கலக்கமுறுகிறாள். இதனை

"பிடிக்கை அன்ன பெருங்குரல்

உண்கிளி கடியும் கொடிச்சிகைக்குளிரே"[19] (குறுந்.360)

என்ற குறுந்தொகைப் பாடல் எடுத்து இயம்புகிறது.

"குன்ற நாடனை உள்ளுதொறும்

நெஞ்சு நடுக்குறூஉம், அவன் பண்பு தரு படரே?" (நற்.273)

என்ற பாடலில், தலைவன் சந்திப்பால் தலைவிக்கு உடல் வேறுபட; அதனை அன்னை காண்பாள் என எண்ணி இனி என்ன ஆகும் எனத் தோழி வருந்துகின்றாள். இதனை, "மனத்தில் நிலைபெற்றக் காதலால் வருந்தி ஏமாற்றம் அடைந்து புலம்புதல் அகமாந்தர்களுக்கு இருப்பதை மாந்தர் உணர்வுகள் குறித்து ஆராயும் திறனாய்வாளர் சுட்டுகிறார்."[20]

"களவுக் காலத்தில் தலைவியின் உணர்வுப் போராட்டம் மிகுந்து காணப்படும். இதன் காரணமாக அவளது விருப்பம் நிறைவேறத் தடை ஏற்படும்"[21]

என்பதும் திறனாய்வாளர்கள் சிந்தனை. இச்சூழலில் தலைவி வருத்தம் மீதுர நிற்க அதுகண்ட தோழியும் கலங்கியுரைப்பது நிகழும்.

"உடுப்பின், யாய் அஞ்சுதுமே; கொடுப்பின்

கேளுடைக் கேடு அஞ்சுதுமே;" (நற்.359)

தலைவன் தழையினைத் தோழியிடம் கொடுக்க அதனைத் தோழி

பெற்றுக்கொண்டு தலைவியிடம் அதனை அணிந்தாள் அன்னை வினாவுவாள் என்று கூறி அச்சம் அடைகிறாள். இதனை 'அஞ்சுதுமே' என்ற அடி உணர்த்துகிறது. இச்செய்தியை ஐங்குறுநூற்றிலும் காணமுடிகின்றது."[22]

"தலைவியின் களவொழுக்கத்திற்கு அன்னை தடையாக அமைந்து தலைவியை வீட்டுக்காவலில் வைப்பது அன்றைய நற்றாய்க்குரிய மரபாக இருந்துள்ளது."[23]

தோழி! இன்று நம் அன்னை நம்மைக் காவலில் வைக்கக் கருதினள். வீட்டு முற்றத்தில் உள்ள பலாமரம் பழுத்துள்ளது. புல்லிய தலையை உடைய பெண்குரங்கு பலாச் சுளைகளைத் தின்று கொட்டைகளைக் கீழே உதிர்க்கும். அருகில் நின்றுகொண்டிருந்த குறமகளானவள் தந்தையது பெரிய மேகம் தவழும் மலையின் வளத்தினைப் போற்றி வெண்ணெல்லை உரலில் இட்டுக் குற்றுவாள். அத்தகைய வளநாட்டிற்குத் தலைவன், அவனோடு அருவி ஆடி வேங்கை மரத்தில் மலர்ந்துள்ள மலர்களைக்கண்டு அதன்மேல் அமைந்த பரண்மீது இருந்து கொண்டு கிளிகள் தினைக்கதிர்களைத் தின்னாமல் பார்த்துக் கொள்ளும் இப்பணி நாளையும் தொடருமா என்பது ஐயத்திற்குரியது என்று தோழிகூறினாள்.

"பா அமை இதனம் ஏறி பாசினம்
வணர் குரற் சிறுதினை கடிய,
புணர்வது கொல்லோ நாளையும் நமக்கே?" (நற்.373)

எனும் பாடலும் தலைவியின் காதலையும், தோழியின் அச்சத்தையும், சுட்டுவதாக உள்ளது. தலைவி இச்செறிப்பு பெற்ற பின்னர் தலைவனைச் சந்திக்க இயலாத நிலைகளைக் கண்டு தோழி அச்சமுறுகிறாள். தினை உண்ணவரும் கிளியினத்தை ஓட்டும் செயல் நமக்கு நாளையும் வாய்க்காது. எனவே, தலைவனைச் சந்திக்க இயலாது என்ற நிலையைத்

*தோழி எண்ணி வருத்தம் அடைகிறாள். தனது மனநிலை கடிய காவலில் இருத்தலால் தனது உணர்வுப் போராட்டத்திற்குத் தீர்வு காண்பதற்குத் தலைவி விரும்புகின்றாள். தன்னைப் பெற்று வளர்த்தவர்களைக் கைவிட்டுத் தலைவனுடன் சென்றுவிட முன்வருகிறாள்.”[24] தலைவனுடன் இணைய வேண்டும் என்னும் துடிப்பும் வேட்கையும் தலைவியிடம் நிறைந்து காண்பதே தோழியின் கலக்க மொழிகளால் அறியமுடிகின்றது.*

*“மா மலை நாடன் நயந்தனள் வரூஉம்*
*பெருமை உடையள் என்பது*
*தருமோ - தோழி - நின் திரு நுதல் கவினே?” (நற்.399)*

*எனும் பாடல்வழி களவு வாழ்வில் ஈடுபட்டுத் திருமணம் செய்யாமல் இருந்த தலைவனை நோக்கி, தலைவியின் நெற்றி அழகு கெட்டுவிடும் முன் வரைதல் வேண்டும் எறும் கூறும் நிலையில் தோழி கலக்கம் வெளிப்படுகிறது. தலைவியின் அழகு கெட்டுவிடும் என்று அதனால் அன்னை வெறியாட்டு நிகழ்த்துவாள் என்ற நிலையில் தோழி எண்ணமும் அச்சமும் வெளிப்படுகிறது. இதனை “திரு நுதல் கவினே” என்ற நற்றிணைப்பாடல்அடி வெளிப்படுத்துகிறது.*

**தோழி பிறமாந்தர்களிடம் கலங்கி மொழிவது**

*பெருமளவில் தோழி தலைவனின் வரைவு கடாயது தலைவனைப் பிரிந்த தலைவியை ஆற்றிவித்தல் என்ற நிலையிலே பாடல் காணப்பட்டாலும் (34, 128, 301). பிற கூற்றுகளாக வெறியாட்டின் போது தோழி செவிலிக்குச் கூறுதல், தலைவி தோழியிடம் அறத்தோடு நிற்றல், தோழி தன் நெஞ்சிற்குக் கூறுதல் என்ற நிலைகளில் தோழியின் கலக்க நிலை வெளிப்படுகிறது.*

*“வேலன் வேண்ட, வெறி மனை வந்தோய்!*
*கடவுள் ஆயினும் ஆக;*
*மடவை மன்ற, வாழிய முருகே!” (நற்.34)*

*என்பதில் தலைவிக்கு வெறியாட்டு எடுக்கும் செவிலியை நோக்கி, நின் மகளின் நோய்க்குக் காரணம் முருகன் அல்ல. தலைவனே காரணம் என்ற இடத்தில் தோழி உள்ளக் கலக்கம் வெளிப்படுகிறது. இது அறத்தோடு நிற்றலாகும். இங்கு தலைவியின் காதலை அறியாமல் வெறியாட்டு நிகழத்துவதால் தலைவி மேலும் துன்பமுறுவது கண்டு, தொடர்ந்து அச்செயல் நடக்குமோ என்ற நிலையிலே செவிலி அறிய உண்மையை உரைத்துவிடுகிறாள். ஆதலால் இந்நிகழ்வும் கலங்கி மொழிதலுள் வைத்து நோக்க இடமுண்டு. அருவி இன் இயத்து ஆடும் நாடன் என்ற பாடல் அடிமூலம் தலைவனை அடையாளம் காட்டுகிறார்.*

*"அஃதே நினைந்த நெஞ்சமொடு*
*இஃது ஆகின்று யான் உற்றநோயே" (நற்.128)*

*எனும் பாடல் மூலம், தலைவி தனக்கு ஏற்பட்ட துன்பம் தலைவனால் வந்தது. எனக் கூறும் இப்பாடல், தலைவிக்கு ஏற்ப நோய்க்காரணத்தைத் தலைவியே இரு உடலாய் இருக்கும் என்னிடம் மறைத்தாய் என்று தோழிகூறும் இடத்தில் தோழியின் வருத்தம் வெளிப்படுகிறது. "நினைக்கு யான் உயிர் பகுத்தன்ன" என்ற பாடல் அடிமூலம் விளக்குகிறாள்.*

*"தலைவியின் துன்பத்திற்குக் காரணம் தலைவனின் பிரிவு, தோழியின் துன்பத்திற்குக் காரணம் தலைவி தன் காதலை ஓர் உடலாய் இருக்கும் தன்னிடத்தில் மறைத்தது. இங்கு அன்பே அனைத்துப் புலம்புதலுக்கும் காரணமாகின்றது."[25]*

*"காமர் நெஞ்சமொடு பல பாராட்டி*
*யாய் மறப்பு அறியா மடந்தை*
*தேம் மறப்பு அறியாக் கமழ் கூந்தலளே" (நற்.301)*

*என இடம்பெறும் பாடலில் தோழி தன் நெஞ்சிற்குக் கூறுவதாய்*

அமைந்துள்ளது. அழகு பொருந்திய தலைவியைத் தலைவனோடு கூட்டுவிப்பதை என் அன்னை அறிந்தால் என்ன ஆகுமோ என என் நெஞ்சம் அஞ்சுகிறது என்ற இடத்தில் தோழியின் கலக்கம் வெளிப்படுகிறது.

**நெய்தல் திணையில் கலங்கிமொழிதல்**

நெய்தல் திணையில் தோழி கலங்கி மொழிவதாக 44 பாடல்கள் இடம்பெற்றுள்ளன. அவற்றில், தோழி தலைவனுக்கு உரைப்பவையாகவும், தோழி தலைவிக்கு உரைப்பவையாகவும், தோழி தன்நெஞ்சிற்கு உரைப்பவையாகவும் தோழி பாணனுக்கு உரைப்பதுமாக அமைந்துள்ளன. இக் கலக்க மொழிகள் அனைத்தும் களவு, கற்பு என இருநிலைகளில் அமைந்துள்ளன.

**தோழி தலைவனுக்கு உரைப்பவை**

தொல்காப்பியர் தோழி, தலைவி, தலைவன், செவிலி, நற்றாய், காமக்கிழத்தி, வாயில்கள் ஆகிய அகத்திணை மாந்தர்களின் கூற்று பற்றிக் குறித்துச் செல்கின்றார். தோழி கூற்றுக்கள் அகத்திணையில் களவியல், கற்பியல் ஆகிய மூன்றிலும் இடம்பெறுகின்றன. அகத்திணையில் பிறமாந்தர்கள் இடம்பெறும் சூழல்களிலும் முன்நிற்பவள் தோழியாவாள். களவை வரைவிற்கு ஆற்றுப்படுத்தும் வரைவுகடாதல் துறை, களவையும் கற்பையும் இணைத்து நிற்கும் அறத்தொடு நிற்றல் துறை, களவு கற்பாக மாறும் சூழல் தெளிவில்லாதபோது தோன்றும் உடன்போக்குத்துறை ஆகிய கருவான திருப்புமுனைகளில் எல்லாம் தோழி ஆதிக்கம் செலுத்துகின்றாள்.

தோழி தலைவனுடன் தொடர்புகொண்டு அவன் தந்த உறவாலும் பிரிவாலும் தலைவி ஏங்குவதாகச் சுட்டுகிறாள். “தோழி தலைவனுடன் உறவு கொண்டவளாகக் காட்ட முயலுதற்கு இரு நோக்கங்கள் காணப்படுகின்றன. தலைவியின் களவு தனக்குப் புலனாவதை வெளிப்படுத்துவது ஒன்று. தலைவி தன் களவைத் தானே

*வெளிப்படுத்துமாறு செய்வது மற்றொன்று"*[26] *எனத் தோழி களவு கற்பு இரு வாழ்வு முறைகளிலும் முக்கிய பங்கு வகிப்பது திறனாய்வாளர்களால் சுட்டப்படுகிறது.*

**அலரில் தோழி கலங்கி மொழிதல்**

*தலைவனோடு தலைவி, காதல் கொள்கிறாள். இந்நிலையில் தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்துசென்றான். அப்பிரிவின் காரணமாகத் தலைவியின் உடல் வாடி மெலிந்து பசலைபடரும். தலைவியின் தோற்றம் பொலிவிழந்து காணப்படும். இம்மாறுபாட்டினைக் கண்ட ஊரார் தலைவியின் உடல் மாறுபாட்டிற்குக் காரணம் தலைவனோடு அவளுக்குள்ள தொடர்பு என்பதை அறிந்து பழிதூற்றுவர். இப்பழிச் சொல்லே அலர் எனப்படும்.*

*"சேணும் எம்மொடு வந்த*
*நாணும் விட்டேம்; அலர்க, இவ் ஊரே!" (நற்.15)*

*என சுட்டப்பெறும் பாடலில் தலைவன் தலைவியைச் சந்தித்து வரைந்துகொள்ளாத நிலையில் அலர் ஏற்படும் என்ற அச்சம் தோழிக்கு ஏற்படுவதை விளக்குகிறது. குற்றமற்ற கற்புடையவளைப் பற்றி இவ்வூர் அலர் பேசப்படும் என்று தோழி வருத்தமுறுகிறாள். அலர் என்பது உண்மை மட்டுமன்றி உண்மையரில்லாததையும் திரித்து உரைப்பது. ஆதலால் அத்கைய அலர்குறித்து தோழி புலம்புகிறாள். அலர் என்பது வருந்தும் அளவிற்குக் கொடுமையானது என்பதை,*

*"நம் தலைவனொடு ஒரு நாளேனும் சிரித்து மகிழ்ந்து விளையாடிய பழி இல்லையெனினும் இவ்வூரிலுள்ளோர் தமக்கியல்பான கொடுமையுள்ளத்தால் அலர் தூற்றுகின்றனரே"*[27]

*என்ற கருத்தும் தெளிவுபடுத்தும்.*

*"முழங்கு திரை இன் சீர் தூங்கும்*
*அழுங்கல் மூதூர் அறிந்தன்றோ இன்றே" (நற்.138)*

என்பது வரைவு நோக்கியபாடலாகும். தலைவன் பிரிவால் மேனி வேறுபாடு அடைந்த தலைவியினைக் கண்ட ஊரார் அலர் தூற்றினர். அதனை அறிந்த தோழி சிறைப்புறமாக நிற்கும் தலைவனுக்கு அலர் நிலையினை எடுத்து இயம்புகிறாள். தலைவனுக்கு அலர் நிலையினை எடுத்துக்காட்டுவதன் நோக்கம் தலைவன் தலைவியை வரைந்துகொள்ள வேண்டும் என்ற எண்ணம் ஆகும். மேலும் அலரின் தன்மைக்கு அஞ்சி வரைந்து மணம் செய்க என்று அறிவுறுத்துதலும் ஆம். இந்நிகழ்வும் தலைவியின் நலம் குறித்தக் கலக்கமேயாம்.

**குறியிடத்தில் தோழி கலங்கி மொழிதல்**

குறித்த இடத்தில் தலைவியைக் காண்பதற்குத் தலைவன் வரும் இடங்கள் குறியிடம் எனப்படும். இதை இருவையாகத் தொல்காப்பியர் குறிப்பர் ஒன்று பகற்குறி, பகலில் சந்திப்பு நிகழும் இடம். அவை அருகில் உள்ள சோலை, தினைபுனம் முதலிய இடங்களில் நடைபெறும். இரவில் சந்திப்பது இரவுக்குறி எனப்படும். இவை வீட்டின் அருகில் நடைபெறும்.

"யான் எழில் அறிதலும் உரியள், நீயும்; நம்
பராரைப் புன்னைச்சேரி, மெல்ல" (நற்.145)

என்பதில் இரவுக்குறி வந்த தலைவனை நோக்கி, தோழி களவு வாழ்வை எம் அன்னை அறிந்து, அவன் எங்கே உள்ளான் என வினவினாள். ஆகவே நீ எம் தலைவியை வரைந்து மணந்துகொள்ள வேண்டும் என்கிறாள். அன்னையை இதனை 'அறன் இல் அன்னை' என்றும் உணர்த்துகிறாள். இங்கு அன்னை அறிந்து கொண்டதால் ஏற்படும் விளைவுகளுக்கு அஞ்சி தோழி கூறுவது அறியப்படுகிறது. இதுவும் கலக்கத்தின்பாற்பட்டதேயாம். இதனை, "தலைவியின் தோற்ற மாறுபாட்டுக்கு உண்மையான காரணம் அறியாது அவளது நலிவு

நீங்குவதற்காகப் பெற்றோர் வெறியாட்டெடுத்தல் போன்ற செயலால் தோழிக்கு அச்சம் ஏற்படுகிறது"[28] என்ற கருத்தும் உணர்த்தும்.

"ஏமுற விளங்கிய சுடரினும்,

வாய்மை சான்ற நின் சொல் நயந்தோர்க்கே?" (நற்.283)

எனும் இப்பாடலில் பகற்குறியில் வந்த தலைவனை வரைவுகடாயதாக அமைந்துள்ளது. உண்மைமிக்க உன் சொல்லை விரும்பினோம். ஆனால் தலைவியை விரைந்து மணம் கொள்ளாது காலம் தாழ்த்துகிறாய். இதனால் தலைவியின் உடல் பசந்து காணப்படுகிறது. ஆகவே நீ வரைதல் வேண்டும் எனத் தோழி கலங்கிக் கூறுகிறாள்.

"சில விளங்கு எல் வளை ஞெகிழ,

அலவன் ஆட்டுவோள் சிலம்பு ஞெமிர்ந்து எனவே" (நற்.363)

எனும் பாடலில் பகற்குறியின் போது தலைவி கடல் நீரில் விளையாடி நிலையில் அவள் சிலம்பு உடைபட்டது. அதனை அன்னை அறிந்தாள். தலைவியை இச்செறிப்பு செய்தாள். ஆகவே நீ அவ்வருத்தத்தைப் போக்க வேண்டும் என்னும் கூற்றில் தோழி கலங்கி மொழிகிறாள். இவ்வாறு 'களவு காலத்தில் தோழி உள்ளத்தில் பல்வேறு காரணங்களினால் கலக்கமும் போராட்டமும் ஏற்படுகிறது'[29] என்பது உளவியல் நோக்கில் ஆராய்ந்த திறனாய்வாளர்களின் கருத்து. அவை மேற்கண்ட பாடல்களில் மெய்ப்பிக்கப்பட்டுள்ளது.

**பிரிவின் போது கலங்கி மொழிதல்**

பொருள் தேடுதல், பகைதணிவினை போன்ற கடமைகளுக்காகத் தலைவன் பிரியும் போது அவன் நெஞ்சில் கலக்கம் உண்டாகிறது. தலைவியைப் பிரிந்து கிடத்தற்கரிய வழிகளில் பொருள்தேடச் செல்லத் துணிவதால் தலைவி கலக்கமடைகிறாள். தலைவி மனத்தில் உணர்வுப் போராட்டம் ஏற்படுகிறது. அவ்வேளையில் தோழி தலைவியைப் பருவ

வரவு அல்லது தலைவனைத் தலைவியின் உடல் வனப்பை எடுத்துக்கூறிப் பிரியும் தலைவனைத் தடுத்து நிறுத்துகிறாள்.

"தெண் நீர்க் குமிழி இழிதரும்

தண்ணீர் ததை இ நின்ற பொழுதே" (நற்.124)

பொருள் காரணமாகபிரியும் தலைவனைத் தோழி, நீ பிரிந்தால் தலைவி வருத்தமுறுவாள். குளிர்பருவம் வந்துவிட்டது. ஆகவே நீ தலைவியை விட்டுப் பிரிதல் கூடாது என, பருவ வரவைக் காட்டித் தலைவன் பிரிவைத் தவிர்க்கின்ற நிலையினை 'தெண்நீர்க்குமிழி' என்ற வரி உணர்த்துகிறது.

"இன்பமா கடமையா என்ற உணர்வு போராட்டம் அவன் நெஞ்சில் உண்டாகிறது."[30]

இங்கு தோழி உள்ளம் தலைவியை நினைத்துக் கலக்கமுறுவதைக் காணமுடிகின்றது.

**வரைவு கடாயது**

தலைவன் பொறுப்புணராது திருமணம் செய்துகொள்ளக் காலந்தாழ்த்துவதால் தலைவி உள்ளத்தில் கலக்கம் ஏற்படுகிறது. தலைவியின் மனமும் இயல்பும் வேறு. தலைவன் வரைதல் வேண்டிய பாடல் நற்றிணையில் ஒன்று தவிர வேறு இல்லை. அவன் வரைதல் வேட்கை உருவாக்கப்படவேண்டிய நிலையில் தோழி தலைவியைச் சந்திக்க வரும் இடங்களில் வரையவேண்டும் என்ற எண்ணத்தை உருவாக்குகிறாள். இந்நிகழ்வு அனைத்தும் களவு வாழ்வில் நிகழ்கின்றன.

"வால் உளைப் பொலிந்த புரவித்

தேரோர் நம்மொடு நகாஅ ஊங்கே" (நற்.135)

என்பதில் தலைவன் மணம் புரிந்துகொள்ளாது இருப்பதால் ஊரார் பழிகூறுவர் என்ற நிலையில் தோழி உள்ளத்தில் அச்சம் ஏற்படுவது குறிப்பிடப்படுகிறது.

"களவில் மெய்யுறு புணர்ச்சி நிகழ்ந்தால் அவள் உடல் மாற்றம் விரைவில் நிகழ்ந்து பழிப்புக்கு ஆளாக நேரிடும்."[31]

இக்காரணத்திற்காகவே தோழி கலங்கித் தலைவனை விரைவில் வரைந்து கொள்ள வேண்டும் என எண்ணுகிறாள் என்னும் கருத்து இங்கு ஒப்புநோக்கத்தக்கது.

"நீர் அலைத் தோற்றம் போல,

ஈரிய கலுழும், நீ நயந்தோள் கண்ணே" (நற்.195)

தலைவன் வரைந்துகொள்ளாது களவை நீட்டியமையால் தலைவியின் கண்கள் கலங்கிக்காண்பதைத் தோழி எண்ணிக் கலங்குகிறாள். 'நீ நயந்தோள் கண்ணே' என்ற அடிமூலம் தோழி வரைவின் முக்கியத்துவத்தை எடுத்து இயம்புகிறாள். வரைவு நீட்டிப்பதால் தலைவி வருந்துவதை,

"தலைவன் வரைதலில் காலம் தாழ்த்துவதால் தலைவி உள்ளத்தில் அச்சமும், கலக்கமும் ஏற்படுகிறது."[32]

என்ற கருத்தும் வலியுறுத்தும். இதனைப்போல தலைவியை நினைத்துத் தோழி உள்ளம் கலக்கமடைவதைப் பாடல்அடி இங்கு உணர்த்தி நிற்கிறது.

"செய்த தன் தப்பல் அன்றியும்

உயவுப் புணர்ந்தன்று இவ் அழுங்கல் ஊரே" (நற்.293)

எனும் பாடலில் தலைவன், மணம் புரியாமல் காலந்தாழ்த்தியமையால் ஊரில் ஏற்படும் அலர். தலைவனால் ஏற்பட்ட காதலால் தலைவிக்கு ஏற்படும் துன்பம் முதலிய காரணத்தை முன்னிருத்தித் தோழி கலக்கமுறுகிறாள். இதனை "ஒரு நாள் பிரியினும்" என்ற அடி உணர்த்துகிறது.

"கானல் அம் கொண்கன் தந்த

காதல் நம்மொடு நீங்கா மாறே" (நற்.231)

எனும் மற்றொரு பாடலில் தலைவன் சிறைப்புறமாக வந்து நிற்க அதனை அறிந்தத் தோழி, காலந்தாழ்த்தாமல் தலைவியை

வரைந்துகொள்ள வேண்டும் எனக் கூறு மொழியில் தோழி தலைவிமீது கொண்ட நல் எண்ணம் வெளிப்படுகிறது. "தோழி தலைவியின் துயர் கண்டு அவளை ஆற்றாது தானே கலங்கி நிற்பது ஒன்று"[33] இங்கு வருத்தமுறும் தலைவியை ஆற்றாது தோழி கலக்கமுறுவதைக் காணமுடிகிறது.

"முயங்கு எனக் கழழ்ந்த இவ் ஊர்

எற்று ஆவது கொல், யாம் யாம் மற்றொன்று செயினே?" (நற்.239)

என்ற பாடல் அடி களவுக் காலத்தில் வரைந்துகொள்ள காலம் தாழ்த்திய நிலையினையும் ஊரில் ஏற்படும் பழிச்சொல்லையும் கருத்தில் கொண்டு தோழி கலங்கி தலைவனை விரைவில் வரைந்துகொள்ள வேண்டும் என கூறுமிடத்து தோழி உள்ளம் வெளிப்படுகிறது.

"கரப்பவும் கரப்பவும் கைம்மிக்கு

உரைத்த - தோழி! - உண்கண் நீரே" (நற்.263)

என இடம்பெறும் பாடல் அடியில் தலைவன் தலைவியை வரைந்து கொள்ளாத நிலையில், தலைவியின் கைவளையல்கள் கழன்று வீழ்ந்தன. கண்களில் கண்ணீர் வழிந்து வருத்தமுறும் தலைவியைக் கண்டத் தோழி கலக்கமடைகிறாள். இதனை,

"வளை நெகிழ்தல் இறையிறந்து இலங்குவளை"[34] (குறு.50)

என்ற குறுந்தொகைப் பாடல் அடியும் வெளிப்படுத்துகிறது.

"இள நலம் இற்கடை ஒழியச்

சேறும் ; வாழியோ! முதிர்கம் யாமே" (நற்.295)

இற்செறிக்கப்பட்ட நிலையில் தலைவியின் நலன் கெட்டொழியும், அவள் உயிர் வாழாள் என்ற தோழி கூற்றில் தோழியின் கலக்கம் வெளிப்படுகிறது. தோழி தலைவியின் துன்பம் கண்டு தானும் வருந்துவாள் என்பதற்கு,

"இற்செறிப்பு அலர் வேற்றுவரைவு ஆகியவை தோழி உள்ளத்தில் கலக்கத்தையும் உணர்வுப் போராட்டத்தை ஏற்படுத்துகிறது."[35]

என்ற கருத்து வலு சேர்க்கின்றது.

தலைவி வேற்று மணத்திற்கு அஞ்சி தலைவனிடம் தன்னை மணந்துகொள்ள வேண்டும் என்று கூடி, தோழி தலைவனிடம் தலைவியின் உடல் அழகைத் தந்து செல். மாறாகத் திருமணம் செய்துகொள்ளவேண்டும் எனக் கூறும் தோழி கூற்றிலும் தலைவிமீது கொண்ட அன்பு வெளிப்படுகிறது.

**இற்செறிப்பில் தோழி கலங்கி மொழிதல்**

தலைவி இற்செறிக்கப்படுதலால் அவளைத் தலைவன் காணமுடியாமல் ஏமாற்றமும் கலக்கமும் அடைந்து உணர்வுப் போராட்டத்தில் உழலவேண்டிய நிலை ஏற்படுகிறது. இதனால் தலைவனுக்குக் காதல் வேட்கை மிகுகின்றது. எனவே தனது காதல் நோய் மறுமையிலும் தொடருமாதலால் அவளை அப்பிறவியில் அடைவது உறுதி என தன்னுள் கூறி ஆறுதல் அடைகிறான். இந்நிலையில் தோழியின் பங்கு இன்றியமையாததாக அமைகிறது. தலைவியை இற்செறிப்பு செய்வதன்முன்பு தலைவனிடம் விரைவில் வரைந்துகொள்ள வேண்டும் எனவும், இற்செறிப்பு செய்தபின்னர் இருவரையும் உடன்போக்கிற்கும் உட்படுத்துகிறாள்.

"ஒன்று எறி பாணியின் இரட்டும்;

இன்று கொல், அளியேன் பொன்றும் நாளே?" (நற்.132)

எனும் இப்பாடலில் தலைமகள் இற்செறிக்கப்பட்டு, காவல் மிகுதியால் தலைவனைக் காணுதல் இயலாது வருந்துவதும். அது கண்ட தோழி, நம் காவல் மிகுதியை எடுத்துக்கூறி நம் தலைவரை நம் அடையாதபடி

நாம் இறந்துபடும் நாள் இன்று தானோ எனத் தோழி கூறுவதும் அமைகிறது. இக் கூற்றுப்பாடலில் அவளின் அச்சமும் புலம்பலும் பாடல் அடிமூலம் வெளிப்படுகிறது. "ஏக்கமும் ஏமாற்றமும் தன்னைத்தானே குறைகாணத் தூண்டுகின்றன"[36] என்ற கருத்து இங்கு நோக்கத்தக்கது.

"நறும் பூங் கானல் வந்து, அவர்
வறுந் தேர் போதல் அதனினும் அரிதே" (நற்.191)

எனும் பாடல்அடி இற்செறித்தல் ஒரு துன்பமெனில் அவர் தேரில் வந்த என்னைக் காணாமல் போவது மிகுந்த துன்பத்தைத் தருகிறது என்பதைத் தோழி கூற்றுப் பாடல் சுட்டுகிறது.

"தலைவி இற்செறிப்பு செய்தபின்னர் தலைவி தன்னோடு சேர்த்துக்கொள்வதே ஒரு நல்ல முடிவு என எண்ணி வரைவுக்கு உடன்பட இற்செறிப்பு ஒரு காரணமாக அமைகிறது."[37]

**தோழி பாணனுக்கு உரைப்பவை**

தலைவியது ஆற்றாமைகண்டு தோழி தூதுவிடல், பருவ வரவின்கண் தலைவனின் தூதாக வருதல், தலைவனின் வரவு உணர்த்துதல், தலைவிக்கு அருளுமாறு தலைவனைப் பாணன் வேண்டுதல் இவை அனைத்தும் பாணன் தோன்றும் பின்புலங்கள். பாணனது கூற்றாலும் தலைவி தோழியர் பாணனிடம் கூறும் கூற்றாலும் பாணனது கடமையையும் மன ஓட்டமும் தோழியின் மன நிலையும் தெளிவுப்படுத்தப்படுகிறது.

"எல்லித் தரீஇய இன நிரை
பல் ஆன் கிழவரின் அழிந்த இவள் நலனே?" (நற்.291)

எனும் பாடல் தோழி பாணனிடம் வருந்திப் பேசும் பாடலிலும் பரத்தையிற் பிரிந்து வந்த தலைவன் பாணனை வாயிலாக

அனுப்புகிறான். இவ்விடத்தில் தோழி பாணனிடம் தலைவியின் உடல் நலன்களை எடுத்துக்கூறி தலைவியிடம் வந்து சேருதல் வேண்டும் எனத் தோழி கூறும் இடத்தில், தோழியின் உள்ளம், வெளிப்படுவதோடு, தலைவி உடல் நலம் குறித்த பயம் வெளிப்படுகிறது. இதனைப் போன்ற ஒருபாடல், குறுந்தொகையிலும் (2) காணப்படுகிறது."[38]

தன் கலக்கத்தைத் தலைவனிடம் பாணன் சென்று உரைக்கவேண்டும் என்பது இங்கு தோழியின் எதிர்பார்ப்பாக அமைகின்றது."[39]

**தோழி தலைவியிடம் கலங்கி மொழிதல்**

தலைவன் சந்தித்த பின்னர் பிரிந்துசெல்லும் பொழுது ஏற்படும் துன்பம், கலக்கம், ஏக்கம் தலைவிக்கு ஏற்படுகிறது. கடிய காவலினால் தலைவி இருந்தாலும் நினைவுகள் எல்லாம் தலைவனிடமே செல்கிறது. இந்நிலையில் தலைவன் வரவு உணர்த்தல், தலைவன் விரைந்து வரைந்துகொள்வான் முதலிய நிலையில் தனது அன்பு மொழிகளால் தோழி தலைவியைத் தேற்றும் இடங்களில் தோழி உள்ளம் வெளிப்படுகிறது.

"யாமம் கொள்பவர் நெடு நா ஒண் மணி
ஒன்று எறி பாணியின் இரட்டும்;
இன்று கொல், அளியேன் பொன்றும் நாளே" (நற்.132)

என்ற பாடல் அடியில் தலைமகள் இற்செறிக்கப்பட்ட நிலையில் தோழி கலங்கும் மொழியைக் காணமுடிகிறது. நம் தலைவர் நம்மை அடையாத நிலையில் யாவரும் கண்டு இறந்துபடும் நாள் இது தானே! எனத் தலைவி உள்ள மொழிகளைத் தோழி தமது கூற்றாகக் கூறுகிறாள். இற்செறிப்பாள் ஏற்படும் துன்பத்தைத் தோழி எண்ணித் தனது கலக்கத்தை வெளிப்படுத்துகிறாள்.

"*மனத்தில் நீங்காது நிலைபெற்ற காதலுறவை நினைக்கவும் கூடாது எனத் தடைசெய்வதால் கலக்கம் உண்டாகிறது*"[40]

*என்று கலக்கத்திற்கான காரணம் சுட்டப்படுகிறது.*

"*நடு நாள் வரூஉம் இயல்தேர்க் கொண்கனொடு*
*செலவு அயர்ந்திசினால் யானே;*
*அலர் சுமந்து ஒழிக இவ் அழுங்கல் ஊரே!*" *(நற்.149)*

*என்னும் தலைவிக்காக வருந்தும் பாடலேயாம். தலைவி தலைவனுடன் உடன்போக்கு மேற்கொள்ளவேண்டும் எனத் தோழி கருதினாள். துன்பம் நீங்குமாறு நள்ளிரவில் தலைவன் வருவான், அங்ஙனம் வரும் தலைவனோடு செல்லவேண்டும். நீ சென்ற பின்னர் பேரொலிமிகுந்த இவ்வூர் என்ன செய்துவிடமுடியும் என்று தோழி கூறுவதாக இப்பாடல் அமைகின்றது. இங்கு அலரினால் தலைவிக்கு இற்செறிப்பு போன்ற துன்பங்கள் ஏற்படக் கூடும். மேலும் தலைவனைப் பிரிந்தாலோ தலைவி துன்புறுவாள். இவற்றை மனதில் நினைத்து வருந்திய தோழி தலைவியை உடன்படுத்துகிறாள். இங்கு தலைவியின் சூழலை எண்ணி வழிப்படுத்தும் தோழியைக் காணமுடிகிறது.*

"*தலைவி அவனைக் காணும் வேட்கை நிறைவேராததால் உள்ளத்தில் தவிப்பும் ஏக்கமும் ஏமாற்றமும் ஏற்படுகிறது.*"[41]

*என்று தலைவிக்குரிய துன்பம் சுட்டப்படுகிறது. இங்கு தலைவியைவிட அவள்மீது அன்பு கொண்ட தோழிக்கு தவிப்பும், கலக்கமும் ஏற்பட்டு தலைவியை உடன்போக வலியுறுத்துவதை உணரமுடிகின்றது.*

"*பெருங் கழிப் பாக்கம் கல்லென*
*வருமே - தோழி! கொண் கன் தேரே*" *(நற்.111)*

*எனும் பாடலில் தலைவியின் தலைவனின் பிரிவை எண்ணி வருந்தி நிற்கும் தலைவியின் வருத்தம் உணர்ந்து, தலைவன் மீண்டும் வருவான்*

என்றும், மணிகள் ஒலிக்கும் தேர்வரும், நீ கலங்குதல் வேண்டாம் எனத் தோழி ஆறுதல்மொழிகளில் அவளின் உள்ள அன்பு வெளிப்படுகிறது. "தவிப்பும் சிக்கலும் நிறைந்த உள்ளத்தில் அமைதியை உண்டாக்குமாறு தோழி செயல் காணப்படுகிறது."[42] இவைபோன்று தலைவி கலங்கி நிற்கும் இடத்தில் தன்நெஞ்சிற்கும் கூறும் புலம்பல் நிலையிலும் தோழியின் கலக்கம் வெளிப்படுகிறது.

"வண்டு படு வான்போது வெரூஉம்

துறை கெழு கொண்கண் துறந்தனன்" (நற்.211)

எனவே தலைவன் மணம் புரிந்துகொள்ளாது காலம் தாழ்த்துதலால் தலைவி வருத்தமுற்ற நிகழ்வை எண்ணி, சிறைப்புறமாக நின்ற தலைவனுக்குக் கூறும் மொழியாகத் தன்நெஞ்சிற்குக் கூறுகின்றாள். உம்மைப் பிரிந்து வருத்தமுறும் தலைவியின் நிலையை யாரிடம் உரைப்பேன் என்ற இடத்தில் தலைவியின் துன்ப நிகழ்வால் தோழி கலக்கமடைகிறாள். "தலைவனுடன் இணையவேண்டும் என்னும் துடிப்பும் வேட்கையும் தலைவியிம் நிறைந்து இருக்கும்"[43] இவ்ஒழுக்கமேதோழி உள்ளத்தில் கலக்கத்தை ஏற்படுத்துகிறது.

**பாலைத்திணையில் தோழி கலங்கி மொழிதல்**

ஐந்துவகைத் திணைகளுள் பாலை தனித்த இடம்பெற்றுள்ளது. ஐந்து திணைகளுக்கும் நிலம் வகுத்த தொல்காப்பியர் பாலைநிலத்திற்கு நிலம் வகுக்கவில்லை. பாலைக்குரிய நிலத்தைச் சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள் குறிப்பிடுவர். முல்லையும் குறிஞ்சியும் தன் நிலையிலிருந்து மாறி ஏற்படும் நில அமைப்பு பாலைக்குரிய நிலமாகச் சுட்டுவர். பெரும்பாணாற்றுப்படையில் பாலை நிலமக்களையும் அவர்கள் வசிக்கும் வீடு அமைப்பையும் இந்நூல் விரிவாகச் சுட்டுகிறது.

பாலைக்குரிய உரிப்பொருள் பிரிதலும் பிரிதல்நிமித்தமாகும். இவ்வுரிப்பொருளுக்கு ஏற்றாற்போல் பாலைநிலத்தில் நிகழும்

கூற்றுக்கள் அனைத்தும் பிரிநிலையிலேயே அமைகிறது. பொருள் காரணமாக பிரியும் தலைவனைத் தலைவியின் உடல் அழகுகளை உணர்த்தியும் பாலை நில கொடுமைகளையும் எடுத்துக்காட்டி பொருளைவிட இன்பமே சிறந்தது என்ற நிலையிலும் தலைவன்பிரியும் குறிப்பை அறிந்த தலைவி வருத்தமுறும் நிலையிலும் எடுத்துக்கூறி ஆற்றிவிக்கும் நிலையில் தோழியின் கலக்கமொழிகளைக் காணமுடிகின்றது.

அகத்திணை மாந்தருள் தோழிக்கெனத் தனிச்சிறப்பிடம் உண்டு. தலைவியின் இன்ப வாழ்வு அவளது குறிக்கோள் அவளது இனிய நினைவு முதலிய நிலைகளில் தோழி கூற்று முக்கிய இடம்பெறுகிறாள். தலைவுயுடன் உடன்இருந்து அவளது மனம் முழுவதும் நிறைந்து காணப்படுவாள்.

களவு கற்பு என இரு நிலைகளில் தோழியின் பங்கு முக்கிய இடம்பெறுகிறது.

> "தலைவியைத் தேற்றத் தோழி கைக்கொள்ளும் அணுகுமுறைகள் இருவகை. தோழி தலைவியின் துயர்கண்டு அவளை ஆற்றாது தானே கலங்கிநிற்பது ஒன்று. ஆற்றுக எனக்கூறி வற்புறுத்துவது மற்றொன்று"[44]

என்ற மேற்கண்ட இருநிலைகளில் தோழி கலங்கி மொழிகிறாள்.

இவ்வாறாகத் தோழி கலங்கிமொழியும் இடங்கள் பாலைத்திணையில் 16 பாடல்களில் இடம்பெற்றுள்ளன. தோழி தலைவனுக்குக் கூறியது தலைவனிடம் பிரிந்த தலைவியை ஆற்றிவிப்பது என அமையும் இப்பாடல்களில் தோழி கலக்க மொழிகள் இடம்பெறுகின்றன.

**தோழி தலைவனிடம் கலங்கி மொழிதல்**

தோழி தலைவனுடன் உறவுகொண்டவளாகக் காட்ட முயலுதற்கு இரு நோக்கங்கள் காணப்படுகின்றன. தோழி தலைவனுடன்

தொடர்புகொண்டு அவன் தந்த உறவாலும் பிரிவாலும் ஏங்குவதாகச் சுட்டுகிறாள். தலைவனுடன் களவொழுக்கம் கொண்டு அதனை மீண்டும் பெற விரும்பும் ஆசை உணர்விற்கும் அச்ச மனநிலையால் தன் ஆசைகளை அடக்கி நிற்கும் ஏக்க உணர்விற்கும் இடைநின்று தலைவி கொள்ளும் தவிப்பைத் தவிர்ப்பது தோழியின் நோக்கமாகும். ஆதலின் அத்தவிப்புத் தலைவனுக்கு உணர்த்தி நிற்கிறாள். அவை இரவுக்குறிதல் வரைவு கடாயது எனும் நோக்கில் அமைகிறது.

*"தண்நறுஞ் சிலம்பில் துஞ்சும்*
*சிறியிலைச் சத்தின வாடுபெருங் காட்டே" (நற்.7)*

எனும் இப்பாடலில் பொருள் காரணமாக பிரிந்த தலைவன் பருவம் வந்த நிலையில் வருந்துமிடத்தில் தோழி தலைவியைத் தேற்றும் இடத்தில் தோழி உள்ளம் வெளிப்படுகிறது.

மழைபெய்யவேண்டி இடிஓசை முழக்கம் செய்யும் இப்பொழுதே மழைபெய்யும் அறிகுறியாக மின்னும் இக்காலத்தை நோக்கியவுடன் தலைவர் வந்து நின்னை விரைந்து வரைந்துகொள்வான் என்று தோழி தலைவியைத் தேற்றும் இவ்விடத்தில் தோழியின் கலக்கம் வெளிப்படுகிறது.

> "தலைவியின் உணர்வுப் போராட்டத்தால் தோழியின் உள்ளத்தில் ஏற்படும் பிரிவு தோழியின் மனத்திலும் உணர்வுப் போராட்டமாக எதிரொலிக்கும்."[45]

*"நல்அக வனமுலைக் கரைசேர்பு*
*மல்குபுனல் பரந்த மலர்ஏர் கண்ணே" (நற்.33)*

பொருள் காரணமாக தலைவன் பிரியும் இடத்தில் தலைவி கண்ணீர்மல்க வருத்தமுறுகிறாள். இவ்விடத்தில் மலர் போன்ற அவளுடைய கண்களிலிருந்து பரந்த புனல் போலும் கண்ணீர் வடிந்து அவள் தன் மார்பகத்தை நனைத்தது என்ற இடத்தில் தலைவி கலங்குவதோடு அக்கலக்கத்தால் தலைவியும் கலங்குகிறாள்.

*“தலைவனைச் சந்தித்த பின்னர் பிரிந்து செல்லும் பொழுது ஏற்படும் துன்பம் கலக்கத்தையும் ஏக்கத்தையும் தலைவிக்கு உண்டாக்குகிறது.”[46] இது தோழிக்கும் துன்பத்தைத் தருவதாயிற்று,*

*“ஆர்வ நெஞ்சமொடு அளைஇ*

*மார்பு உறப்படுத்தல் மரீஇய கண்ணே” (நற்.17)*

*என்ற இப்பாடல் அடியில் தலைவன் பொருள்காரணமாக பிரிவதால் அதனால் தலைவி வருந்துகின்றாள்.*

*ஆசை நெஞ்சொடு கலந்த உணர்வினராய், மார்பின் மேல் தலைவைத்துப் படுத்தலால் பொருந்தும் கண்கள் இனி துயில்கொள்ளாது என்ற இடத்தில் தலைவி கலக்கமுறும் நிலையில் தோழியும் வருத்தம் அடைந்து தலைவியைத் தேற்றுகிறாள். இதனை,*

*“மருந்து பிறிதில்லை அவள் மணந்த மார்பே”[47] (குறு.248)*

*என்ற குறுந்தொகைப் பாடலில் தலைவன் மார்பை அடையாத தலைவியின் உள்ளம் வெளிப்படுகிறது.*

*“சிலம்பி அம்சினை வெரூஉம்*

*அலங்கல் உலவை அம்காடு இறந்தோரே?” (நற்.189)*

*தலைவனைப் பிரிந்த தலைவியின் மெலிவுகண்ட தோழி கலக்கம் அடைவதை இப்பாடல் சுட்டுகிறது. கங்கை ஆற்றின் ஓடுகின்ற மரக்கலத்தில் ஏறி சென்றிருப்பார் எனக் கருதுகின்றயோ? அவர் ஓரிடத்தும் போகமாட்டார். வேறு செயலும் செய்யமாட்டார். அவர் இப்போதேவருவார். நீ கலக்கம் அடையவேண்டாம். எனத் தோழி கூறும் இவ்விடத்தில் தோழி கலக்கம் அடைவதை மேற்காட்டிய பாடல் வெளிப்படுத்துகிறது.*

"பிரிந்த நம்மினும் இரங்கி, அரும் பொருள
முடியாது ஆயினும் வருவர்; அதன் தலை,
இன் துணைப் பிரிந்தோர்" (நற்.208)

தலைவன் தலைவியைப் பிரிந்தான் என்பதை அறிந்த தோழி ஆற்றுவிக்கும் நிலையில் தலைவன் பிரிவைப் பிரியார் என்று கூறி தலைவியைத் தேற்றும் நிலையினைப் பாடல் அடிஉணர்த்துகிறது.

காட்டுவழியில் இரக்கம் மிகுந்தவராய் தாம் தேடிய பொருள்முற்றம் பெறாத நிலையில் மீண்டுவருவார் ஆகவே நீ கலக்கம் அடைதல் வேண்டாம். எனக் கூறும் தோழி பாடலில் அவளின் கலக்கம் வெளிப்படுகிறது. இதனை,

"நீளிடை இறந்தனராயினும் காதலர்
நம் வயின் மறந்து கண் படுதல் யாவது"[48] (அகம்.237)

என்ற அகநானூற்றுப்பாடல் அடியும் உணர்த்தி நிற்கிறது.

"ஆடிய இள மழைப் பின்றை,
வாடையும் கண்டிரோ, வந்து நின்றதுவே?" (நற்.229)

தோழி, தலைவியைத் தலைவன் பிரிய உடன்பட்டதும் செலவழுங்குவித்ததும் என்று இருநிலைகளில் அமைந்துள்ளன. அகன்ற இடந்தோறும் பரவியதாச் செறிந்தும் குளிர்ந்தும் மழைபெய்யும். மழையினைத் தொடர்ந்து வந்து நின்ற வாடையையும் கண்டீர் அவை இவளைத் தனித்து வருந்தச் செய்யும். ஆகவே நீ பிரிதல் வேண்டாம், சென்றாலும் வரைவில் வருதல் வேண்டும் என இவ்விடத்தில் தலைவியின் உடல் நிலையைக் கண்டு வருத்தம் அடைகிறாள்.

"தலைவன் பிரிந்தால் தலைவி இறந்துபடுவாள் எனத் தோழி
தெளிவுபட உரைத்து நிற்கும்"[49]

என்ற சான்று மேற்காட்டிய பாடல் அடியோடு ஒத்துக் காணப்படுகிறது.

"இரும்புலி வழங்கும் சோலை,

பெருங் கல் வைப்பின் சுரன் இறந்தோரே?" (நற்.274)

தலைவன் பொருள் காரணமாகப் பிரிய அவன் செல்லுங் காடு கொடிது என்று தலைவி வருந்துகிறார். தலைவி துயர் கண்டத் தோழி. மழை பெய்வதால் கடுமையாகாது என்ற இடத்தில் தோழி உள்ளம் வெளிப்படுகிறது.

> "தலைவனின் பிரிவைக் கேள்வியுற்றதுமே தலைவிக்கு வளைகழல்வதாகவும், நுதல் பசப்பதாகவும் தோழி எடுத்துரைக்கிறாள்."[50]

"வீங்கு நீர் வாரக் கண்டும்

தகுமோ? பெரும! - தவிர்க்க நம் செலவே" (நற்.325)

பொருள் காரணமாக பிரியும் தலைவனிடம், தோழி உன் பிரிவினை அறிந்த தலைவியின் கண்களில் நீர் பெருகுவதைக் கண்டும் நீ பிரிய எண்ணுவது தகுமோ? எனக் கலக்கம் அடைகிறாள்.

> "தலைவன் பிரிந்தால் தலைவி நிறந்துபடுவாள் எனத் தோழி தெளிவுபட உரைத்து நிற்கும் அல்லது உணர்த்தி நிற்கும் காட்சிகள் செலவழுங்கற் பாடல்களில் பல்கிக் கிடக்கின்றன"[51]

என்பதில் தலைவியின் கலக்க நிலையில் தோழி கலங்குவதையும் அறியமுடிகின்றது.

தோழி பிற அகமாந்தர்களிடம் கூறும் கூற்றுக்கள் உளவியல் நோக்கில் அணுகப்பெறுகின்றன. இரந்து பின் நிற்கும் தலைவன் தலைவியின் நினைவால் தன் மனநிலையையும் தன்னைப்பெறுவதற்குத் தோழி தலைவனிடம் செய்யும் வேண்டுதல்களையும் இணைந்து நிற்பதைக் காணமுடிகிறது. தலைவனிடம் கூற்று நிகழ்த்துவதாகத் தோழிக் கூற்றுப்பாடல்கள் மூன்று இடங்களில் காணமுடிகிறது.

*"நும்மொடு வரவு தான் அயரவும்,*

*தன் வரைத்து அன்றியும் கலுழ்ந்தன கண்ணே!" (நற்.12)*

*தலைமகனோடு தலைமகள் செல்லத் தோழி உடன்படுத்தினாள். பின்புதலை மகளிடம் உடன்போக்கு வேண்டாம் என நிறுத்தினாள். இவ்விடத்தில் தோழி தலைவிக்கும் நற்றாய், செவிலிக்கும் ஏற்படும் துன்பநிகழ்வை எண்ணி கலக்கமடைகிறாள்.*

*"தலைவனின் ஆற்றாமையை எண்ணிக் கவலும் போது தலைவியின் ஆற்றாமையில் தோழியும் பங்கு கொள்ளும்போது தலைவனுக்கு ஒருவகையின ஆறுதல் கிடைக்கிறது."[52]*

*"நள்ளென் கங்குலும் வருமரோ -*

*அம்ம வாழி! - அவர் தேர் மணிக் குரலே!" (நற்.145)*

*இரவுக் குறியில் வரும் தலைவனை ஊரார் கண்டுகொள்வார்கள் எண்ணித் தோழி கலக்கமுறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது. அன்னை நம் களவு ஒழுக்கத்தை அறிந்தவள் போல் அவன் எங்கிருப்பவன் என வினவுகிறாள். நம் சேரியில் தலைவன் வரும் தேர்மணி ஓசையும் ஒலிக்கும். இந்நிலையில் நான் என் செய்வேன் என்ற இடத்தில் தலைவன் வரவால் ஏற்படும் துன்பத்தை எண்ணி தோழி கலக்கமுறுகிறாள்.*

*"தலைவியோடு பேச வேண்டும் என்ற வேட்கை தலைவன் மனதில் நிறைந்து நிற்கிறது."[53]*

*"யாரோ பிரிகிற்பவரே - குவளை*

*நீர் வார் நிகர் மலர் அன்ன, நின்*

*பேர் அமர் மழைக் கண்தெண் பனி கொளவே?" (நற்.391)*

*களவுக் காலம் நீடிப்பதால் தோழி தலைவனிடம் வரைவு உணர்த்திய நிலையில் மேற்காட்டிய பாடல் அமைந்துள்ளது. தலைவன் மணம் புரியாமல் பொருள் தேடிச் செல்வதால் தலைவி கலக்கமுறுகிறாள்.*

தோழி தலைவனைச் சந்தித்து தலைவியை வரைவில் வரைந்துகொள்ள வேண்டும் எனக்கூறும் இடத்தில் தோழியின் கலக்கமனம் வெளிப்படுகிறது.

தோழி தலைவியின் கலக்கமொழியால் துன்பமடைகிறாள். அவை களவுக் காலத்தில் வரைந்துகொள்ளத் தாமதம் ஏற்படுதல், பொருள் காரணமாகத் தலைவியைவிட்டுப் பிரிதல் போன்ற நிலைகளில் தலைவியின் கலக்கமொழிகள் அமைகின்றன.

**முல்லைத்திணையில் கலங்கி மொழிதல்**

சங்க இலக்கியங்கள் கூறும் பொருளும் அவற்றைக் கூறும் முறையும் குறிப்பிட்ட வரண்முறைக்கு உட்பட்டு விளங்குதலைக் காணமுடியும். அகப்பாடல்களில் இடம்பெறும் உணர்வுகள், உளவியலில் பொதுத்தன்மை கொண்டு விளங்குகின்றன. அவற்றை அகமாந்தர்கள் வெளியிடும் முறை, நாடகப் பாங்கு கொண்டு விளங்குகின்றது. இங்ஙனம் உளவியலும், நாடகப் பாங்கும் கொண்டு விளங்கும் இலக்கியங்கள் முன்னோர்களின் உயிர்ப்பூட்டிய எண்ணங்கங்களையும், உணர்வுகளையும் இலக்கியத்தின் வாயிலாக பயில்வோரின் உள்ளத்தில் பதியவைக்கின்றன.

அக இலக்கியங்களில் இடம்பெறும் உணர்வு மோதல்களும் அக மாந்தர் கூற்றில் அப்படியே இடம்பெறுவது இல்லை. தேவையான இடங்களில் கண்டெடுத்துப் பதிவுசெய்யப்பட்டுள்ளன. தலைவனிடம் வரைவுகடாவும் தோழி கூற்றில் களவை அன்னை அறிந்த செய்தியும், அலர் பரவிய சூழலும் பெரிதும் எடுத்துரைக்கிறது. எனினும் தலைவியிடம் தாயோ, தமரோ நேர்நின்று களவைக் கண்டதாகவோ, கடிந்துகொள்வதாகவும் பாடல்கள் யாக்கப்படவில்லை. தாய் தமர்கூறுதல், தோழியின் கூற்றில் கண்டெடுத்து மொழியப்படுவதாக அமைகின்றது. இவ்வியலில் முல்லைத்திணையில் இரண்டு பாடல்கள் (115, 266), இடம்பெற்றுள்ளன. அவற்றின் கற்பு காலத்தில் பொருள் காரணமாகப் பிரியும் தலைவனின் பிரிவைத் தாங்காத தலைவியின்

*உள்ளம் கலக்கம் அடைகிறது. இக்கலக்கத்தினால் தோழியின் உள்ளமும் கலக்கம் அடைந்து தலைவியிடத்துப் புலம்புவதாய் அமைகிறது.*

**தோழி நெஞ்சத்தைத் தேற்றுதல்**

*அகத்திணைப் புலவர்கள் திணைகளின் உணர்வினை வெளியிடும் பாங்கிற்குச் சிறப்பிடம் தருகின்றனர். அகமாந்தர்கள் அனைவரும் எல்லாச் சூழல்களிலும் உள்ளத்தை வெளிப்படுத்துகின்றனர். முல்லைத்திணையில் இடம்பெறும் இரு பாடல்களிலும் தன்னைவிட்டுப் பிரிந்த தலைமகனை நினைத்துக் கலக்கமுறும் தலைவியைத் தோழி தேற்றுவதாய் அமைந்துள்ளது.*

> *"தலைவனின் பிரிவை ஆற்றாத தலைவியின் உணர்வு ஓட்டங்கள் துன்பியல் மனநிலையை விளக்கி நிற்கின்றது. இவ்விடத்தில் தோழியின் அன்புமொழிகள் தலைவனின் உள்ளத்தை தேற்றுகின்றது."*[54]

> *"கார் எதிர்ந்தன்றால் காலை; காதலர்*
> *தவச் சேய் நாட்டர் ஆயினும், மிகப்பேர்*
> *அன்பினர் - வாழி, தோழி!" (நற்.115)*

*எனும் இப்பாடலில் நினைவிற் பிரிந்த தலைமகன் வருவேன் என குறித்துச்சென்ற பருவம் வந்தும் அவன் வரவில்லை. பருவம் கண்டும் வருந்துதலும், தலைவியைத் தோழி தன் தலைவர் சொன்ன கார்பருவம் இப்பொழுதுதான் தொடங்குகின்றது. நம் காதலர் வெகு தொலைவில் இருப்பினும் நம் மீது மிகுந்த அன்புடையவர் எனவே, தவறாது வருவார் எனக் கூறும் தோழி கூற்று தலைவி கலக்கம் அடைந்ததைக்கண்டு அவளும் கலக்கமுற்று அன்புமொழிகளால் தேற்றுகிறாள்.*

> *"இச்சூழலில் துயரினை ஆற்றாது புலம்பும் தலைவி தன் உயிர்வாழ்தல் அறிது என்னும் உணர்வினைப் பெரும்பாலும்*

வெளியிடுகிறாள். தலைவன் பிரிவால் என் உயிர்பிரியும் நிலை கூறி தலைவனிடம் கொண்ட அன்பின் ஆழத்தைச் சுட்டுகின்றாள்"[55]

எனக் கூறும் இச்சான்றுவழி தலைவியின் உள்ளம் கலக்கமடைவதையும், அதனைக்கண்ட தோழி மனம் கலங்குவதையும் பாடல் அடி வெளிப்படுத்தி நிற்கின்றது.

"எம் விட்டு அகறிர் ஆயின், கொான் ஒன்று
கூறுவல் - வாழியர், ஐய! - வேறுபட்டு" (நற்.266)

என இடம்பெறும் இப்பாடல் அடிகள் முன்பெருகாலத்தில் தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்து செல்கையில் தலைவி கலக்கம் அடைந்த நிலையை எடுத்துக்கூறி இப்போது பிரியும் தலைவனிடம் நீ தலைவியை விட்டுப் பிரிந்து செல்வாயானால் முன்பு பிரியும்போது எவ்வாறு கலக்கமடைந்தாலோ அதேபோல் இப்போதும் கலக்கமடைவாள் என இடம்பெறும் தோழி கூற்றில், தோழியின் கலக்கமொழி இடம்பெறுகிறது.

"தலைவனைப் பிரிந்து தலைவிபடும் துயரநிலை அளவிறந்து காட்டப்படுகின்றது"[56]

இத்தகைய அவலம் அடையும் தலைவியின் கலக்க உள்ளம் தோழியையும் கலக்கமுறச் செய்கின்றது.

அகமாந்தர் வெளிப்பட கூறமுடியாமல் மறைவாகச் சுட்டும் கருத்துக்களைக் கேட்போர் புரிந்துகொள்ளும் வண்ணம் உள்ளுறை, இறைச்சி வாயிலாக சங்கப் புலவர்கள் உள்ளக் கலக்கத்தினைப் பாடல்களில் பதிவுசெய்துள்ளனர். தலைவியின் ஆற்றாத நிலைகளைக் கண்டு தோழியும் கலக்கமுறுவதாகச் சங்கப்பாடல்கள் வெளிப்படுத்து நிற்கின்றன.

**மருதத்திணையில் கலங்கிமொழிதல்**

மருதத்திணையில் இடம்பெறும் தோழி கலங்கி மொழிவதாக எட்டுப் பாடல்கள் அமைகின்றன.

"பலர் கொள் பலகை போல

வாங்க வாங்க நின்று ஊங்கு அஞர்நிலையே" (நற்.30)

மேற்சுட்டப்பெறும் பாடலடி மூலம் பரத்தையர் நின் கையைப்பற்றி அவர் தம்பாள் இழுக்க அதனால் நீ பரத்தையிடம் செல்வதை நான் என் கண்களால் கண்டும் நின்னை நான் என்னசெய்வேன். என்ற இவ்விடத்தில் பரத்தையர் சேரியில் இருந்து வந்த தலைவன் நான் யாரை அறியேன் எனக் கூறும் மொழியில் தோழி கலக்கமடைகிறாள்.

"தலைவனின் பரத்தமையைச் சாடவிரும்பும் தோழி, தலைவியர் தாங்கள் சாடவிரும்பும் அவனது பண்பினையும் தலைவன் நன்கு உணருமாறு கூறுவர்."[57]

இச்சான்றுவழி தெரிந்துகொண்டதுபோல் பரத்தையிடம் சென்று திரும்பிவந்த தலைவனைத் தோழி வினவும் இடத்திலும், அவனது புற ஒழுக்கத்தை சுட்டும் இடத்திலும் தோழியின் கலக்கமொழிகள் மேலோங்கி நிற்கிறது.

"இரு பெருவேந்தர், பொரு களத்து ஒழித்த

புன்னை விருமம் போல,

என்னொடு கழியும் - இவ் இருவரது இகலே" (நற்.180)

என்ற பாடல் அடி தலைவனும் தன் பரத்தை நிலையிலிருந்து நீங்காமலும், தலைவியும் வாயில்களின் செயலுக்குச் சம்மதியாமலும் காணப்படும் இடத்தும் தோழி யாது செய்யக்கூடும் என புலம்பும் இடத்தும் தோழி கலக்கமொழிகள் இடம்பெறுகிறது.

"பரத்தையர் பிரிந்து ஒழுகும் தலைவனைத் தலைவி வாய்களிடம் சாடுகிறாள். தலைவனை நேர்முகமாகச்

*சாடுவதால் தலைவி உள்ளத்து கசப்பான உணர்வு மேலோங்கி நிற்கின்றது”*[58]

என இடம்பெறும் இச்சான்றுமூலம் பரத்தையரை விட்டு நீங்காத தலைவனை நினைத்தும், வாயில்களுக்குச் செவிகொடுக்காமல் இருக்கும் தலைவியை நினைத்துத் தோழி உள்ளத்தில் போராட்ட உணர்வுகள் மேலோங்கி நின்று அவள் மன கலக்கமுறுவதைப் பாடல் அடி வெளிப்படுத்துகின்றது.

**தொகுப்புரை**

தலைவன், தலைவி ஆகிய இரு தலைமாந்தர்களின் களவு வாழ்விலும், கற்பு வாழ்விலும் பாலம் போன்று இணைப்பாக நின்று அவர்களின் வாழ்வு செம்மையுற பலவகையில் தோழி கூற்று நிகழ்த்துகிறாள்.

அவ்வாறு கூற்று நிகழும் நிலையில் சில நேரங்களில் அன்பு மொழியிலும் பல நேரங்களின் கடுமொழியிலும் தனது உள்ள உணர்வை வெளிப்படுத்துவதைத் தோழி கூற்றுப்பாடல்களில் காணமுடிகின்றது.

நற்றிணையில் தோழி கலங்கி மொழிதல் எனும் நோக்கில் ஆராய்வதால் தோழியின் பயம், அச்சம், நடுக்கம் மற்றும் தலைவி மீதுகொண்ட வற்றாத அளவற்ற அன்பு முதலிய காணமுடிகின்றது.

குறிஞ்சித்திணையில் கலங்கி மொழிதல் எனும் தலைப்பில் தோழியின் கலக்க மொழியாக 46 பாடல்கள் அமைந்துள்ளன. அவற்றில் தோழி தலைவனுக்கு உரைப்பதாகவும் தலைவிக்கு உரைப்பதாகவும், செவிலிக்கு உரைப்பதாகவும், தன் நெஞ்சிற்கு உரைப்பதாக பாடல்கள் இடம் பெற்றுள்ளன.

தோழி தலைவனுக்கு உரைப்பவை பெருமளவில் களவு, காலத்திலேயே நிகழ்கின்றது. அவை இரவுக்குறியிடத்திலும் பகற்குறியிடத்திலும் மற்றும் வரைதல் வேண்டும் என்ற எண்ணப் போக்கிலும் அமைகின்றது. இக் கூற்றுகள் அனைத்திலும் தோழியின் கலக்க மொழிகளைக் காணமுடிகின்றது. இக்கலக்க மொழிகள் அனைத்தும் களவு நீடிக்காமல் தலைவியின் உடல்நிலைகளைக் கருத்தில் கொண்டு விரைவில் வரைந்துகொள்ள வேண்டும் என்ற நோக்கில் அமைந்துள்ளது.

தலைவன் தலைவி களவு வாழ்வு வெளிப்பட்டால் அதனால் தனக்கும் துன்பம் ஏற்படும் என்ற எண்ணத்தைத் தோழி பாடல்களில் காணமுடிகின்றது.

தோழி தலைவிக்கு உரைப்பனவற்றைக் களவு, கற்பு என்ற இரு நிலைகளில் காணமுடிகின்றது. களவுக் காலத்தில் தலைவனோடு புணர்ந்த நிலையிலும் தலைவனைச் சந்திக்க முடியாத நிலையிலும் வருத்தமுறும் தலைவியைத் தோழி ஆறுதல் மொழிக்கூறி ஆற்றுவிக்கிறாள். கற்பு வாழ்வில் இயற்கை நிகழ்வுகளையும் தலைவனின் அடையாள மொழிகளையும் எடுத்துக்கூறி தலைவன் வரவை உணர்த்துகிறாள்.

செவிலிக்கு உரைப்பனவாக அமைந்த பாடலில் தலைவியின் உடல்மெலிவிற்குத் தெய்வம் அல்ல; தலைவனே என்ற நிலையிலும், தலைவியின் களவு வாழ்வு வெளிப்பட்டால் யான் என்ன செய்வேன் என தன்நெஞ்சிற்கும் கூறும் இடத்தில் தலைவியின் கலக்கமொழிகள் இடம் பெற்றுள்ளன.

தலைவன், தலைவி களவு வாழ்விலும் கற்பு வாழ்விலும் தலைவனை வரைவுகடாயது முதல் தலைவியை அன்பு மொழிகளால் தேற்றுதல் வரையிலும் தோழி கூற்று முக்கியத்துவம் அடைகிறது. தலைவிமீது மிகுந்த அக்கரைக் கொண்டவளாக நடத்தும் கூற்றில் பயம், அச்சம், கலக்கம் முதலிய உணர்வுகள் மேலோங்கி நிற்கின்றன.

தோழி நெய்தல் திணையில் கலங்கி மொழியும் இடங்களாகக் குறியிடத்தில் கலங்கிமொழிதல், இற்செறிப்பில் கலங்கி மொழிதல், தலைவன் பொருள் காரணமாகப் பிரியும் போது கலங்கி மொழிதல், வரைவுகடாயது நிலையில் கலங்கி மொழிதல் எனும் நிலைகளி தலைவனிடம் கலங்கி மொழிகின்றாள்.

தலைவன் இயற்கைப் புணர்ச்சியின்போதும், பகற்குறி மற்றும் இரவுக்குறியிலும், தோழி தலைவனைக் களவு நீடிக்கும் பொழுதும் தலைவியை வரைந்து கொள்ளவேண்டும் என்ற நிலையிலும் தோழி கூற்றுக்கள் அமைகின்றன.

அலர் நிலையில் தலைவிக்கு ஏற்படும் பழிச்சொல்லைத் தலைவனுக்குச் சுட்டித் திருமண முக்கியத்துவத்தை எடுத்துக்கூறுகிறாள்.

இற்செறிப்பு, வரைவு கடாயது போன்ற இடங்களில் தலைவன் துன்ப நிகழ்வுகளை எடுத்துக்கூறி; அவற்றால் தான் அடையும் துன்பத்தைத் தமது கூற்றுமூலம் வெளிப்படுத்துகிறாள். தலைவனை விரைவில் திருமணம் செய்துகொள்ளவேண்டும் என்ற நோக்கம் மேலோங்கி நிற்கிறது.

கற்பு வாழ்வில் பரத்தையர் பிரிவில் தலைவிக்குரிய துன்ப நிகழ்வுகளைப் பாணனிடம் கூறித் தனது கலக்கத்தை வெளிப்படுத்துகிறாள். தன் துன்பத்தையும் கலக்கத்தையும் எடுத்துக்கூறா நிலையில் தன் நெஞ்சிற்கே கூறும் பாடலில் தோழி நெஞ்சத்தைக் காணமுடிகிறது.

தோழி தலைவிக்குக் கலங்கி மொழியும் இடங்களிலும் களவுக் காலத்தில் சந்திப்பு இடையீடு ஏற்படும் போது தலைவி தலைவனை சந்திக்க முடியாமல் அடையும் துயரத்தைக் கண்டு தலைவியை ஆற்றிவிக்கும் இடத்திலும் தோழி உள்ளம் வெளிப்படுகிறது.

பொருள் காரணமாகப் பிரியும் இடத்தில் தலைவி பிரிவு ஆற்றாத நிலையில் அவளின் துயரத்தால் தோழியும் கலக்கமடைந்து, பொருளைவிட தலைவியின் உடல்நலமே முக்கியம் என்பதைத் தலைவனுக்கு எடுத்துக்காட்டும் இடத்தில் தோழியின் கலக்கமொழி வெளிப்படுகிறது.

தலைவிமீது கொண்ட உண்மை அன்பை வெளிப்படுத்துவதைத் தோழி கூற்றுகள் வெளிப்படுத்தி நிற்கின்றன.

பாலைத் திணையில் தோழி கலங்கி மொழிவதாக 16 பாடல்கள் இடம்பெற்றுள்ளன. அவற்றில் தோழித் தலைவியிடம் கலங்கிமொழிவதாக தலைவனிடம் கலங்கி மொழிவதாக பாடல்கள் அமைந்துள்ளன.

தோழி தலைவனிடம் கலங்கி மொழிவதாக அமையும் பாடல்களிலும் தலைவன் பொருள் காரணமாக பிரிய நினைக்கும் இடத்திலும், பிரிந்து போகும் இடத்தில் தலைவியின் கலக்க நிலைகளைக் கண்டு செலவைத் தவிர்த்தல் நிலையிலும் அமைகிறது.

இச்செலவைத் தவிர்த்தலுக்குப் பாலைநிலத்தின் கொடுமைகளை எடுத்துக்கூறியும் தலைவியின் அழகு நலன் கெட்டுவிடும் என்று கூறியும் செலவைத் தடுக்கின்றாள்.

அவைமட்டுமன்றி களவுக் காலத்தில் வரைவிடைவைத்து பொருள் காரணமாக பிரியும் இடத்திலும், தலைவி தலைவனை இடித்துரைத்து ஏற்றகாலத்தில் தலைவியை வரைந்து கொள்ள வேண்டும் எனக் கூறும் இடத்திலும் தோழியின் கலக்கநிலை வெளிப்படுகிறது.

தோழி தலைவனிடம் கலங்கிமொழியும் இடங்களில், களவுக் காலத்தில் தலைவியைச் சந்திக்க வரும் தலைவனை இடித்துரைத்து விரைவில் வரைந்துகொள்ளவேண்டும் எனக் கூறும் இடத்தில் தோழியின் கலக்கமொழி வெளிப்படுகிறது.

இரவில்தலைவியைச் சந்திக்க வரும் இடங்களில் அலர்அச்சம், தலைவனுக்கு ஏற்படும் துன்ப நிகழ்வு போன்ற காரணங்களால் தோழி கலக்கமுறுகிறாள். பாலைத்திணையில் தோழி கலக்கமுறும் இடங்கள் களவு வாழ்வைவிட கற்புவாழ்வில் மிகுதியாகக் காணப்படுகிறது.

சங்க இலக்கியங்கள் தலைவன் தலைவியரின் ஒழுக்கத்திற்குத் துணைபோகும் தோழியின் மன உணர்வுகளையும், அன்பு உணர்வுகளையும், அச்ச உணர்வுகளையும், கலக்க உணர்வுகளையும் வெளிப்படுத்தி நிற்கின்றன.

## சான்றெண் விளக்கம்

1. டாக்டர் இராமகிருட்டினன், அகத்திணை மாந்தர்கள் ஓர் ஆய்வு, ப.39
2. மேலது, ப.39
3. மேலது, ப.41
4. குறுந்தொகை, பா.244
5. டாக்டர் இராமகிருட்டினன், அகத்திணை மாந்தர்கள் ஓர் ஆய்வு, ப.44
6. மேலது, ப.44
7. அகநானூறு, பா.183
8. மேலது, பா.120
9. முனைவர் காஞ்சனா, இலக்கியமும் உளவியலும், ப.46
10. மேலது, ப.49
11. டாக்டர் தெ.கலியாணசுந்தரம், சங்க இலக்கிய அகப்பாடல்களில் உணர்வு போராட்டம், ப.95
12. டாக்டர் இராமகிருட்டினன், அகத்திணை மாந்தர்கள் ஓர் ஆய்வு, ப.90
13. மேலது, ப.46
14. அகநானூறு, பா.330
15. டாக்டர் இராமகிருட்டினன், அகத்திணை மாந்தர்கள் ஓர் ஆய்வு, ப.84
16. கலித்தொகை, பா.138
17. குறுந்தொகை, பா.42
18. டாக்டர் தெ.கலியாணசுந்தரம், சங்க இலக்கிய அகப்பாடல்களில் உணர்வு போராட்டம், ப.95
19. குறுந்தொகை, பா.360
20. டாக்டர் தெ.கலியாணசுந்தரம், சங்க இலக்கிய அகப்பாடல்களில் உணர்வு போராட்டம், ப.92
21. மேலது, ப.107
22. ஐங்குறுநூறு, பா.187

23. டாக்டர் தெ.கலியாணசுந்தரம், சங்க இலக்கிய அகப்பாடல்களில் உணர்வு போராட்டம், ப.120

24. டாக்டர் இராமகிருட்டினன், அகத்திணை மாந்தர்கள் ஓர் ஆய்வு, ப.112.

25. டாக்டர் ஆ.இராமகிருஷ்ணன், அகத்திணை மாந்தர் ஓர் ஆய்வு, ப.40

26. டாக்டர் தெ.கலியாணசுந்தரம், சங்க இலக்கிய அகப்பாடல்களில் உணர்வு போராட்டம், ப.117

27. மேலது, ப.109

28. மேலது, ப.9

29. மேலது, ப.103

30. மேலது, ப.124

31. முனைவர் க.காஞ்சனா, இலக்கியமும் உளவியலும், ப.100

32. மேலது, ப.98

33. மேலது, ப.50

34. டாக்டர் தெ.கலியாணசுந்தரம், சங்க இலக்கிய அகப்பாடல்களில் உணர்வு போராட்டம், ப.108

35. மேலது, ப.100

36. மேலது, ப.100

37. குறுந்தொகை, பா.2

38. ஆ.இராமகிருஷ்ணன், அகத்திணை மாந்தர் ஓர் ஆய்வு, ப.213

39. தெ.கலியாணசுந்தரம், சங்க இலக்கிய அகப்பாடல்களில் உணர்வுப் போராட்டம், ப.92

40. மேலது, ப.123

41. மேலது, ப.120

42. மேலது, ப.90.

43. ஆ.இராமகிருஷ்ணன், அகத்திணை மாந்தர் ஓர் ஆய்வு, ப.125

44. மேலது, ப.114

45. மேலது, ப.92

46. குறுந்தொகை, பா.248

47.அகநானூறு, பா.237

48. க.காஞ்சனா, இலக்கியமும் உளவியலும், ப.112

49. ஆ.இராமகிருஷ்ணன், அகத்திணை மாந்தர் ஓர் ஆய்வு, ப.86

50. மேலது, ப.86

51. மேலது, ப.125

52. கலியாணசுந்தரம், சங்க இலக்கிய அகப்பாடல்களில் உணர்வுப் போராட்டம், ப.95.

53. ஆர்.இராமகிருட்டிணன், அகத்திணைமாந்தர் ஓர் ஆய்வு, ப.221

54. மேலது, ப.221

55. மேலது, ப.194

56. மேலது, ப.227

57. மேலது, ப.222.

சங்க இலக்கிய அகப்பாடல்களில் பெரும்பான்மையாக இடம் பெறும் நிகழ்வுகள் தலைவன், தலைவி மற்றும் தோழி ஆகிய மூவரைச் சுற்றியே நடைபெறுகின்றன. பெரும்பான்மையாக இவர்களுக்கே முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ளது. இம்மூவரைத் தவிர மற்றவர்களுக்கு கூற்று நிகழ்த்தப்பட்டாலும் பெரும் இடம் தரப்படவில்லை. அவ்வகையில் நற்றிணையில் பிறமாந்தர் கூற்றில் கலங்கிமொழிதல் என்னும் இவ்வியலில் பதினொன்று பாடல்களில் கலங்கி மொழியும் பிறர் கூற்றுப் பாடல்கள் விளக்கிக் காணப்படுகின்றன. இவற்றில் பரத்தை இரண்டு பாடல்களில் கலங்கி மொழிகின்றாள். அதில் மருதநிலத்தில் ஒரு பாடலும், நெய்தல் திணையில் ஒருபாடலுமாக அமைந்துள்ளன. செவிலித்தாயும், நற்றாயும் ஒன்பது பாடல்களில் கலங்கி மொழிவதாய் அமைந்துள்ளது. இப் பதினொன்று பாடல்களைப் பற்றி ஆராய்வது இவ்வியலின் நோக்கமாகும்.

**செவிலித்தாய் - நற்றாய்**

அகத்திணை மாந்தர்களுள் தலைவியை பெற்றத் தாய் நற்றாய் எனவும், தோழியின் தாய் செவிலித்தாய் எனவும் அழைக்கப்படும் மரபினைத் தொல்காப்பியர் சுட்டுகின்றார். மேலும் நற்றாய் நிலை பற்றி கூறும் பொழுது

"கிழவன் தன்னொடும் கிழத்தி தன்னொடும்
நற்றாய் கூறல் முற்றத் தோன்றாது"[1] (தொல்.1439)

என்னும் நூற்பா விளக்கும்போது தலைவனோடும், தலைவியோடும் பெற்றத் தாய் (நற்றாய்) பேசுவதாகிய கூற்று பெரும்பாலும் நிகழ்வதில்லை என்று கூறுகின்றார்.

செவிலித்தாய் பற்றி விளக்கும்போது தொல்காப்பியர் தாயினும் இனியவள் செவிலி என்றும்,

*"ஆய்பெரும் சிறப்பின் அருமறை கிளத்தலின்*

*தாய் எனப்படுவாள் செவிலி ஆகும்"*[2] *(தொல்.களவு.1068)*

*என்கிறார். அறிவில் சிறந்த பெரியோர்கள் ஆராய்ந்தறிந்த மிகப்பெரும் சிறப்புடைய அரிய விழுப் பொருள்களை எல்லாம் எடுத்துச் சொல்லி ஒரு பெண்ணை வளர்ப்பவள் என்ற பெருமைக்குரியவள் பெற்ற தாயைவிட செவிலியே ஆவாள். ஆதலால் செவிலியே தாய் என்னும் பெருமைக்குரியவளாவாள் என்று தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார். அவ்வகையில் நற்றிணையில் செவிலியானவள் பாலைத்திணையில் கலங்கி மொழிவதைக் காணமுடிகின்றது.*

*செவிலிக்கும், நற்றாய்க்கும் கூற்று நிகழ்த்துவதில் உள்ள உள்ள வேறுபாடுகளைத் தொல்காப்பியம் வழி அறிந்தாலும், நற்றிணையை பொறுத்தவரையில் இவர்கள் இருவருக்கும் ஒன்பது பாடல்கள் மட்டுமே கலங்கி மொழிவதாக அமைந்துள்ளன.*

*தலைவனோடு உடன்போக்கு நிகழ்த்திய தலைவியைக் குறித்து நற்றாய் வருந்தி கூறுவதை நற்றிணை 29 ஆம் பாடல் விவரிக்கின்றது.*

*"நின்ற வேனில் உலந்த காந்தள்*
*அழல் அவிர் நீள்இடை நிழலிடம் பெறாஅது*
*ஈன்றுகான் மடிந்த பிணவுப் பசி கூர்ந்தென*
*…………………………………………*
*வளைந்து ஏந்து இளமுலை நோவ கொல் என*
*நினைந்து கைந்நெகிழ்ந்த அணைத்தற்குத் தன் தான்*
*பேரமர் மழைக்கண் ஈரிய கலுழ*
*வெய்ய உயிர்க்கும் சாயல்*
*மை ஈர் ஓதி பெருமடத் தகையே" (நற்.29)*

*என்பது அப்பாடலாகும்.*

*பருத்த தனங்களையுடைய என் மகளை அணைத்தவாறு உறங்கிய போதும் கைநெகிழ்தால் பிரிவை எண்ணிவளாய்க் கண்ணீர் சொரியும் தன்மையுடையவள் அவள், மென்மையும் கருமையான கூந்தலும் உடைய அவள் நெருப்பு போன்ற வெம்மை உடைய பாலை நிலத்தின் சிறிய வழியில் சென்றனள். குட்டிகளைப் பெற்றுக் காட்டில் வாழும் பெண்புலிப் பசியொடு இருக்க அப்பசியைப் போக்கும் ஆண்புலி மாலைப் பொழுதில் வருவோரை கொல்வதற்கு பதுங்கி இருக்கும் அச்சிறு வழியில் என் மகள் நடந்து செல்லுதற்கு எங்ஙனம் வல்லவளோ! என்று வருத்தமடைகிறாள் நற்றாய்.*

*தன் மகள் தான் விரும்பிய தலைவனோடு உடன் போக்கு நிகழ்த்தியது அறிந்து மென்மையுடைய அவள், வெஞ்சுரத்தை எவ்வாறு கடந்து செல்வாள் என்று கலங்கிய நிலையில் நற்றாயின் புலம்பல் வெளிப்படும் பாடலொன்று,*

*"மிளகு பெய்து அனைய சுவைய புன்காய்*
*உலறுதலை உகாஅய்ச் சிதர் சிதர்ந்து உண்ட*
*புலம்பு கொள் நெடுஞ்சினை ஏறி நினைந்து தன்*
*பொறி கிளர் எருத்தம் வெறிபட மறுகி*
*புன்புறா உயவும் வெந்துகள் இயவின்*
.......................................................
*கோதை மயங்கினும் குறுந் தொடி நெகிழினும்*
*காழ் பெயர் அல்குல் காசு முறை திரியினும்*
*மாண் நலம் கையறக் கலுழும் என்*
*மாயக் குறுமகள் மலர் ஏர் கண்ணே?" (நற்.66)*

*என்பதாகும்.*

*மிளகினைப் போன்ற சுவை உடையது உகாய் மரத்தின் காய். அக்காயினைப் புறா உண்டது. தான் உண்டதற்காக வருந்தி தவறென*

*உணர்ந்தது. அத்தகைய பாலை வழியே தான் விரும்பிய காதலனுடனே சென்றனள். ஆயினும் தன் முடியில் பூமாலை சிக்கினாலும் கைவளை நழுவினாலும் தன் இடையில் அணிந்த காஞ்சியணியின் பொற்காசு தலைகீழாய் மாறிக் கிடந்தாலும் அதனைத் திருத்தத் தெரியாது அழுவாள். இவ்வாறு ஒன்றும் அறியாதவளாக வளர்ந்த என் மகள் பாலைநிலத்தின் வழியே செல்லும் யாது வெய்யிலின் கொடுமையால் நான் சிவந்து அழுவாளோ! என்ற வருத்தம் ஏற்படுகிறது என்று மகளின் மீது கொண்ட அன்பால் புலம்புவதாக இப்பாடல் அமைகின்றது. தின்னத் தகாத காயைத்தின்று மயக்கமுற்று வருந்தும் புறா போல தன் மகள் முன்பின் அறியாத ஒருவனோடு சென்று வருந்தி நிற்பளோ! என்ற தாயின் அன்புள்ளம் இப்புலம்பலில் வெளிப்படுகின்றது.*

*தலைவியை நனிபேதையாகக் கூறுதல் தாயர் வழக்கமெனப்படுகிறது.*

*"அறிவும் ஒழுக்கமும் யாண்டு உணர்ந்தனள் சொல்"[3] (நற்.110)*

*எனும் பாடலிலும் இதனைக் காணமுடிகின்றது.*

*நற்றாய் தன்மகள் தான் விரும்பியவனோடு உடன்போக்கு சென்றமையை அறிந்தனள். இது அறத்திற்குப் புறம்பான செய்கை இல்லை என்று கருதினாள். ஆனாலும் தலைவி தோழிகளுடன் விளையாடிய இடத்தையும், அவள் வளர்த்த கிளி பேசுதலையும் கண்ட தலைவியின் தாய் துயர் தாங்காமல் அழுதனள். தன் மகள் குற்றமற்றவள் என்று கருதினாலும், அயலவன் ஒருவனுடன் சென்றதை நினைத்து வருந்துகிறாள். 'ஊரில் பிறர் பழிச்சொல் உரைக்கும் போதும், அதை உணராத தானே குற்றம் உடையவள்' என்று தன்மீது பழிசொல்லும் நற்றாய் புலம்பலை நற்றிணையில் காணமுடிகின்றது.*

*இங்கு நற்றாயின் அன்பும், உடன்போக்கு அறம் என ஏற்கப்பட்டதும், ஊரில் அலர் ஏற்பட்டபோதே அறியாது போன*

*அறியாமை கொள்ளும் பெற்றோர் மனநிலையும் எடுத்துரைக்கப் பட்டுள்ளது. அப்பாடலாவது,*

*"ஐதே கம்மி யானே ஒய்யெனத்*
*தருமணல் ஞெமிரிய திருநகர் முற்றத்து*
*ஓரை ஆயமும் நொச்சியும் காண்தொறும்*
*நீர்வார் கண்ணேன் கழூலும் என்னினும்*
*.................................................*
*அம்பல் மூதூர் அலர் வாய்ப் பெண்டிர்*
*இன்னா இன்னுரை கேட்ட சின்னாள்*
*அறியேன் போல உயிரேன்*
*நறிய நாறும் நின் கதுப்பு என்றேனே" (நற்.143)*

*எனும் பாடலாகும்.*

*தலைவனொடு உடன்போக்கு நிகழ்த்திய தலைவியை எண்ணி நற்றாய் புலம்புவதையும், மென்மையும், இளமையும் உடைய தன் மகள் எங்ஙனம் வழிநடைப்பயணம் மேற்கொள்வாளோ என்பதை,*

*"இல்லெழு வயலை ஈற்று ஆ தின்றெனப்*
*பந்துநிலத்து எறித்து பாவை நீக்கி*
*அவ்வயிறு அலைத்த என் செய் வினைக் குறுமகள்*
*மான்அமர்ப் பன்ன மையல் நோக்கமொடு*
*யானும் தாயும் மடுப்ப தேனொடு*
*.................................................*
*அருஞ்சுரம் இறந்தனள் என்பதன்*
*முருந்தேர் வெண்பால் முகிழ்நகை திறந்தே"*

*என்று (நற்.179) பாடல் கூறுகின்றது.*

*மகளின் உடன் போக்கு தாயின் நெஞ்சில் ஏமாற்றத்தை உண்டாக்கியதால் அவள் உள்ளத்தில் பாசம் காரணமாக ஆற்றாமையும்*

இரக்கமும் தோன்றுகின்றன. மகளின் பிரிவால் உயிர் துறக்கத் துணியும் அன்னையின் நிலையை விளக்கும் விதமாய் கீழ்க்காணும் பாடல் மொழிகின்றது.

"இரும்புனிற்று எருமைப் பெருஞ்செவிக்குழவி
பைந்தாவ எருவின் வைகு துயில் மடியும்
செழுந் தண் மனையொடு எம் இவண் ஒழிய
..................................................
மாயிருந் தாழி கவிப்ப
தாவின்று கழிக எற் கொள்ளாக் கூற்றே" (நற்.271)

என்னும் அப்பாடலாகும்.

அண்மையில் ஈனப்பெற்ற கரிய செவியையுடைய எருது கன்று பசுமையான பூந்துகள் உதிர்ந்து எருவாகக் கிடக்கும் தொழுவத்தே தங்கித் துயில் கொள்ள விளங்குவது செழுமையும் தண்மையும் உடைய இந்த மனையாகும். இங்கு எம்மைத் தனியே இருக்கச் செய்துவிட்டு என் மகள் தன்னோடு சார்ந்த காளை ஒருவனுடைய பொய் வாசகத்தினில் மயங்கி ஆட்பட்டு அவனோடு நெடுந்தொலைவு சென்றனள் குவளை மலரைப் போன்று மையுண்ட கண்களை உடைய என் மகள் சென்ற வாழ்க்கை தொடர்ந்து தேடிப் பின்னே சென்றவர்கள் அவளை மீட்டுக் கொண்டு வரக் காண்பதற்கும் என்னை விதி தடுத்துவிட்டதே! அதற்கு முன்னமையே என்னுடைய உயிர்பிரிந்து தாழியிட்டுப் புதைக்கப்படுமாறு ஆகுக என்று நற்றாய் கலங்கி மொழிகின்றாள். இதனைப்போல், "மகளின் உடன்போக்கு தாயின் நெஞ்சில் ஏமாற்றத்தை உண்டாக்கியதால் அவள் உள்ளத்தில் பாசம் காரணமாக ஆற்றாமையும் இரக்கமும் தோன்றுகின்றன"[3] என்பதை,

"கயந்தலை மடப்பிடி பயம்பில் பட்டென
களிறு விளிப்படுத்த கம்பலை வெரிஇ

……………………………………………

ஆயமும் அணி இழந்து அழுங்கின்று ; தாயும்

இன்தோள் தாராய், இறியஇயர் என்உண்! என

கண்ணும் நுதலும் நீவி தண்ணென

தடவுநிலை நொச்சிவரி நிழல் அசைஇ

……………………………………………

தருமணற் கிடந்த பாவை என்

மரு மகளே எனமுயங்கினள் அடுமே" (அகம்.165)

எனும் அகநானூற்றுப் பாடல் சுட்டுகின்றது.

வேம்பம் பழத்தைத் தின்னுதலை வெறுத்து இடுப்பையின் இனிய பழத்தைத் தின்ன விரும்பி அதனால் பணியிலும் சென்று வருந்திய வெளவால் மீது மரக்கிளையிலிருந்து விழுந்த பனித்துளிகள் நெய்தோய்ந்த தன்மையாக விழுந்தபடி இருக்கும் அத்தகைய விடியற்காலையில் சுரத்திடைச் சென்று வருந்தியவள் என் மகள், வாள் போலும் கொம்பினையுடைய யானையோடு புலியும் போரிட அதனால் யானையின் கால்கள் புண்ணாக பசி மிகுந்த பெண் யானை ஓமை மரத்தின் அடிமரத்தைச் சாய்த்து அதனை உண்ணும் காலைப்பொழுதில் ஓமைமரம் வெயிலில் அடிப்பகுதி காய்ந்து நின்று, தன் வெவ்விய நிறத்தால் பாலையின் கொடுமையை வெளிப்படுத்தும். அத்தகைய கொடிய பாலை வழியே சென்ற என் மகளின் சிலம்புகழி நோன்பினை (திருமணத்திற்கு முன்பு செய்யப்படும் சடங்கு) நாம் காண்பதற்கு வாய்க்கவில்லையே என்று நற்றாய் வருந்தும் நற்றிணைப் பாடலொன்று,

"வேம்பின் ஒண்பழம் முணைஇ இருப்பைத்

தேம்பால் செற்ற தீம்பழன் நசைஇ

……………………………………………

*நாட்சுரம் உழந்த வாள்கேழ் ஏற்றையொடு*

*..................................................*

*அதர் உழந்து அசையின கொல்லோ! ததர்வாய்ச்*

*சிலம்பு கழீஇய செல்வம்*

*பிறருழைக் கழிந்த என் ஆயிழை அடியே?" (நற்.279)*

*என்பதாகும். நற்றாயின் மனநிலையை முனைவர் தட்சிணாமூர்த்தி "மகள் தன்னோடிருக்கும் வரை, அவளிடம் கண்டிப்புடன் நடந்து கொள்ளுகிறாள் தாய் என்றும், அவள் தன் காதலனுடன் ஊரை விட்டு போனதன் பின்னர் முற்றிலும் மாறிவிடும் நிலையைக் காணமுடிகின்றது"[6] என்று குறிப்பிடுகின்றார்.*

*"மணிக்குரல் நொச்சித் தெரியல் சூடி,*

*பலிக்கள் ஆர்கைப் பார்முது குயவன்*

*..................................................*

*பெருவிதுப்புறகமாதோ- எம்இற்*

*பொம்மல் ஓதியைத் தன் மொழிக் கொளீஇ,*

*கொண்டு உடன் போக வலித்த*

*வன்கண் காளையை ஈன்ற தாயே" (நற்.293)*

*என்னும் பாடலில், பெரும் துன்பத்தால் நற்றாய் கலங்குவதை விளக்குகின்றது.*

*தன் மகள் விரும்பிய காதலனோடு உடன்போக்கு நிகழ்த்தியதால் மனத்துயரம் அடைந்த அன்னை தோழியிடத்து புலம்புவதை கயமனார் (நற்.305) பாடல் வழி விளக்குகின்றார்.*

*"வரியணி பந்தும் வாடிய வயலையும்*

*மயிலடி யன்ன மாக்குரல் நொச்சியும்*

*கடியுடைய வியல் நகர்க் காண்வரத் தோன்ற*

*..................................................*

*வரிப்புறப் புறவின் புலம்புகொள் தெள்விளி,*
*உருப்பவிர் அமையத்து அமர்ப்பனள் நோக்கி*
*இலங்கிலை வெள்வேல் விடலையை*
*விலங்குமலை ஆரிடை நலியும் கொல் எனவே" (நற்.305)*

*வரிந்து கட்டப்பெற்ற பந்தும், வாடிய வயலைக் கொடியும், மயிலின் காலடி போலும் கரிய கொத்தையுடைய நொச்சியும் காவலையுடைய நம் அகன் மாளிகையிடத்தே விளங்க, அவள் இல்லாத அக்குளிர்ந்த சோலை என்னைப் பெரிதும் வருத்துகின்றது. சூரியனின் வெம்மை தணிந்திருக்கும் மாலைப் பொழுதில் இலைகள் அற்ற மரக்கிளையில் அமர்ந்தபடி இருக்கும் வரிகள் மிக்க முதுகுப் புறத்தையுடைய புறாக்கள் வருத்தம் மிகுதியால் கூவும் குரலையும் கேட்பாள். அவள் வெப்ப மிகுந்த நிலையில் கையில் வேலை ஏந்தியபடி உடன் வருகின்ற தன் காதலனை நோக்கி மலை குறுக்கிட்ட வழியிடையே துன்புறுவளோ? என்று தோழியிடத்து நற்றாய் புலம்பும் நிலையை இப்பாடலில் காணமுடிகின்றது.*

**காதற்பரத்தை கலங்கிமொழிதல்**

*பரத்தையர் எனபவர்களுடன் கூடிப் பழகும் வழக்கம் பண்டைத் தமிழர்களிடம் இருந்து உள்ளது. ஆயினும் அதனை அறிஞர்களும் நிலமகளிரும் ஆதரிக்கவில்லை. பரத்தையருடன் தொடர்பு, ஆகாத செயல் என்று வெறுத்து வந்துள்ளனர். பரத்தையர் கூடுதலால் ஏற்படும் பழியையும் அவ்வப்போது எடுத்துக்காட்டி அறிவுறுத்தி வந்துள்ளனர். இதற்குப் பல உதாரணங்கள் நற்றிணையில் காணப்படுகின்றது. அவ்வகையில் நற்றிணையில் பரத்தை வருத்தமுறுவதாக இரண்டு பாடல்கள் அமைந்துள்ளன. அவை திணை அடிப்படையில் மருதம் ஒன்று நெய்தல் ஒன்றுமாக காணப்படுகின்றது.*

மேலும் "பரத்தையிடம் அமைந்துள்ள பொறாமையும் தாழ்வுமனப்பான்மையும் அவளது உணர்வுப் போராட்டங்களும் அடிப்படையாக அமைகின்றன. தன் பொறாமையுணர்வினைப் பண்பாடில்லாத முறையில் பரத்தை வெளிப்படுத்துவதாகப் பரணர் பாடல் ஒன்று கூறுகின்றது." தலைவனைப் பற்றிக் கொள்வதாக இங்கு பரத்தை பேசுகின்றாள்.

"நீள் இரும் பொய்கை இரை வேட்டு எழுந்த
வாளை வெண் போத்து உணிஇய நாருங்
..................................................
மார்பு கடி கொள்ளேன் ஆயின், ஆர்வுற்று
இரந்தோர்க்கு ஈயாது ஈட்டியோன் பொருந்போல்
பரந்து வெளிப்படாது ஆகி
வருந்துகதில்ல யாய் ஓம்பிய நலனே"[6] (அகம்.276)

காதல் பரத்தையின் மெய்யன்பை மருதனிளநாகனார் கூறும் அடிகள்,

"துனிநீர் கூட்டமொடு துன்னார் ஆயினும்
இனிதே காணுநர்க் காண்புழி வாழ்தல்;
கண்ணுறு விழுமம் கைபோல் உதவி
நம்முறு துயரம் களையார் ஆயினும்
..................................................
ஏதிலாளன் கவலை கவற்ற,
..................................................
வேட்டோர் அல்லது பிறற் இன்னாரே" (நற்.216)

என்பதாகும். இப் பாடலில் ஊடலை உணர்த்திக் கூடும் தன்மையிலரானாலும் காண்பதற்கு இனிய தலைவனைக் கண்டு இனிமையோடு கூடி வாழ்ந்திருத்தல் இனிமையுடையதாகும். கண்ணில் விழும் சிறு துகளை அப்போது அகற்றச் செய்யும் கைபோல

*நம்மிடைத்தேயுள்ள காமநோயை அவர் விலக்கவில்லையானாலும், அவர் இல்லாத ஊரின் யான் இருப்பது மேலும் துன்பத்தைத் தருவதாகும் நெருப்பினை ஒத்த பூக்களையுடைய வேங்கை மரத்தே உறையும் கடவுள் காத்தலைச் செய்யும்! குருகுகள் ஆரவரிக்கும் வயலில் பரணின் கண் உள்ள நடுவன் வருத்துதலால் ஒரு மார்பகத்தை அறுத்துக் கொண்ட மாவுண்ணியின் கதை போன்று நம்மைக் கைவிட்டால் நானும் நம் விரும்பும் அவரையன்றிப் பிறர் யாவராயினும் நமக்கு வேண்டாதாரோ. இங்கு வலி என்பது புலவித்துன்பம் என்றும், துயரம் என்பது காதல் நோயை குறிப்பிடுகின்றது. தலைமகனைப் பெரிதும் விரும்பும் காதற்பரத்தை, தலைவியின் தோழிகள் கேட்குமாறு தான் கொண்ட காதலை உணர்ததுவதாக இப்பாடல் அமைகின்றது. மேலும் நற்.315வது பாடலில் மனைவியைப் பிரிந்து பரத்தையின்பாற் சென்ற தலைவன் மீளவும் மனைவியை கூடினான். அதனை அறிந்த பரத்தை தலைவனால் நொந்து கூறும் விதமாய்,*

> *"ஈண்டுபெருந் தெய்வத்து யாண்டு பல கழிந்தெனப்*
> *பார்த்துறைப் புணரி அலைத் தலின் புடை கொண்டு*
> *.............................................................................*
> *ஞெகிழ் தோள் கலுழ்ந்த கண்ணர்*
> *மலர் தீயந்து அனையர் நின் நயந்தோரோ" (நற்.315)*

*நன்கு உழைத்த எருது நடைச் சிறப்பை இழந்த போது உழவர்கள் அதனைப் புல்லையுடைய தோட்டத்தில் மேயவிடுவர். அத்தன்மையுடைய நீர்த்துறைக்கு உரியவன் நம் தலைவன், பெருஞ்சிறப்பினையுடைய நின் மனைவியோடு சிறு தவறும் வராது பார்த்துக் கொள்ளுதல் வேண்டும். அதனை நீ அறிந்திலையானல் எம்மைப் போலும் நெகிழ்ந்த தோள்களும், கலங்கிய கண்களும் கொண்ட மகளிர் நிலை யாதொகுமே என்ற தலைவனை நொந்து பரத்தை (காமக்கிழத்தி) மொழிவதாகும்.*

பரத்தையிடமிருந்து பிரிந்த தலைமகன், மீண்டும் தன் தலைவியிடம் வருகின்றான். தலைவி அவனோடு ஊடல் கொள்ளுகிறாள். அங்கு வந்த அவனுடைய முதுமையுற்ற காமக்கிழத்தி தலைவியைச் சினமுறாதவாறு அறிவுறுத்துகிறாள். தலைவனோடு அவளை உடன்படுத்தி ‘துறைவனே! முதிர்ச்சியுற்ற பின்னால் என்னைப்போல் இவளும் உன்னால் கைவிடப்படுவாள்’ என்ற உள்ளுரை வழி அவனுக்கு உணர்த்துகிறாள். மேலும் நீ உன்னுடைய நட்பை நன்கு ஆராய்ந்து குற்றம் நேராமல் அவளைப் பிரியாது இருப்பாயாக. இல்லாவிடில் உன்னை விரும்பிய தலைவி தீயிலே இட்ட மலர்போல் கருகிப்போவாள் என்று வருந்திக் கூறும் பாடல் இதுவாகும்.

இங்கு, தலைவனால் தான் ஒதுக்கப்பட்ட நிலையைக் குறிப்பாகச் சுட்டும் காமக்கிழத்தி, தலைவனின் குணத்தையும், தலைவியின் அருமையையும் இங்கு உணரவைக்கின்றாள்.

**தொகுப்புரை**

*பிறர் கூற்றில் கலங்கி மொழியும் கூற்றுகளாக 11 பாடல்கள் அமைகின்றன.*

*அவற்றுள் ஒன்பது பாடல்கள் நற்றாய், செவிலிக்குரியதாகும். இரு பாடல் பரத்தையருள் காமக்கிழத்தி, காதற்பரத்தை எனப் படுவோருக்காக அமைகின்றது.*

*நற்றாய், செவிலி கூற்றுகள் பெரும்பாலும் தலைவி உடன்போக்கு சென்றபின் நிகழ்வதாக உள்ளன.*

*தலைவியானவள் இல்லத்தில் குறையில்லாமல் செல்வச் செழிப்போடு வாழ்ந்தமையும், அவளை யாதுமறியாதவள் என்று தாயர் அறியாமை கொள்வதும், எதுவும் அறியாத தம் மகள் இடைச்சுரத்துள் எவ்வருத்தம் கொள்வளோ! என முன்நிகழ்வுகளையும், பின்னால் நிகழப்போவனவற்றையும் நினைத்து வருந்தும் பாடல்களாக இவை அமைகின்றன.*

*அலர் கேட்டும் அறியாத தன் அறியாமை உணர்ந்து குற்றவுணர்ச்சி கொள்ளும் தாயாரையும், தன் மகள் பிரிவால் உயிர் இழக்கத் துணியும் தாயாரையும், தன் மகள் திருமண நிகழ்வை காண இயலாத நிலை குறித்து வருந்தும் தாயாரையும் இப்பாக்களில் காணமுடிகின்றது.*

*நற்றாய், செவிலி, பரத்தை இம்மூவர் கூற்றின் வழி, பண்டைக்காலச் சமூக நிலை அறியப்படுகின்றது.*

## சான்றெண் விளக்கம்

1. *தொல்காப்பியம், கூற்று, பா.1439*
2. *தொல்காப்பியம், களவியல், பா.1068*
3. *அகம்.165*
4. *அகம்.276.*

# முடிவுரை

காலத்தை வென்றன சங்க இலக்கியங்கள் பண்டையத் தமிழ்மக்களின் பண்பாட்டைப் பழக்க, வழக்கங்களை, சங்ககாலச் சமுதாயச் சூழலை அறிந்து கொள்ள பெரிதும் துணையாய் இருப்பன இவ்விலக்கியங்கள். தமிழின், தமிழ் மக்களின் பெருமையை இன்று செம்மொழியென அறியவைத்தமைக்கு இவ்விலக்கியங்களும் சிறந்ததொரு காரணமாய் அமைகின்றன. இத்தகைய பெருமைகள் மிக்க இலக்கியங்களை எக்கண்கொண்டு ஆய்ந்து பார்க்கினும் புலப்படும் செய்திகள் ஏராளமானவை. ஆய்வு என்பது மக்களுக்குப் பயன்படும் செய்திகளைத் தருவனவாக இருத்தல் வேண்டும். அறிவியல் ஆய்வுகள் மக்களின் பயன்பாட்டுக்கு உதவுவதுபோல், இலக்கிய ஆய்வுகள் மக்களின் பண்பாட்டை மேம்படுத்த உதவுவனவாகும்.

இன்றையோர் அறிந்து, தெரிந்து போற்றிப் பரவ வேண்டிய எத்துணையோ செய்திகள் சங்க இலக்கியங்களுள் காணப்படுகின்றன. அறிவியல், அரசியல், வானியல், உளவியல், பயிரியல் போன்று உளவியல், சமூகவியல் அடிப்படையிலும் இவ்விலக்கியங்களை ஆய்ந்து நோக்கக் கிடைக்கும் சிந்தனைகள் மக்களை நல்வழிப்படுத்துவதும் சிறந்த காரணிகளாய் உள்ளன.

இந்நோக்கத்தில் அமைந்தது ‘நற்றிணையில் மொழிதல்’ எனும் இவ்வாய்வேடு சங்க இலக்கியங்களுள் நற்றிணை தனக்கென தனித்துவம் பெற்றது. எட்டுத்தொகையுள் முதலாவதாக வைத்து எண்ணப்படும் இவ்விலக்கியம் அகமாந்தர்களின் வாழ்வியலை ஐந்திணைகளில் எடுத்துரைக்கும் பல்வேறு புலவர்களால் பல காலங்களில் பாடப்பட்டப் பாக்களின் தொகுப்பு நூலாகும். ஒவ்வொரு பாடலும் உணர்த்தும் வாழ்வியல் பதிவுகள், வெளிப்படுத்தியிருக்கும் விதம்,

பாடலாசிரியர்களின் தனித்திறன் போன்றவற்றில் இவ்விலக்கியம் சிறப்படைகின்றது.

இத்தகைய சிறப்புடைய இலக்கியத்தின் ஆய்வுப்பொருள் 'கலங்கி மொழியும்' கூற்றுகள் மட்டுமேயாகும். சங்கப் பாக்களின் தனிச்சிறப்பு, கூற்று அடிப்படையில் காணப்படுவது. நாடகக் காட்சிபோல் கண்முன் நிகழ்வுகளை விரியவைப்பது இக்கூற்றுகள் அடிப்படையிலான பதிவுகளேயாம். அகமாந்தர்களாகச் சுட்டப்பெறும் தலைவன், தலைவி, தோழி, நற்றாய், செவிலி, பாணன், பாங்கன், பரத்தை போன்றோர்களின் கூற்றுகளாய் அமைந்துள்ள பாடல்கள் அன்றைய மக்களின் வாழ்வியலை மட்டும் சுட்டாமல் 'சுட்டி ஒருவர் பெயர் கொளப்பெறார்' என்ற அக இலக்கண முறைப்படி பெயர் இடாத தன்மையில் எக்காலத்தோரும் தம்மோடு பொருந்திப் பார்க்கத்தக்கவகையில் அமைந்துள்ளமை இவ்விலக்கியங்களின் தனிச்சிறப்பு. உளவியல் நோக்கில் எல்லோரும் ஏற்கும் வகையில் பாடல்களை அமைத்தமையே சங்ககாலத் தமிழர்களின் தனிச்சிறப்பினைப் பறைசாற்றுவனவாய் உள்ளன.

அகஉணர்வில் இன்பமும், துன்பமும் இரண்டறக் கலந்தது. இன்பத்தைவிட துன்பமான சூழலில்தாம் அன்பினைப் புலப்படுத்தும் சூழல் அமைகின்றது. 'அன்பிற்கும் உண்டோ அடைக்கும் தாழ்' என்பதற்கிணங்க, அன்பின் மிகுதியால் தாம் அடைந்து துன்ப உணர்வை தம் மொழிகளால் வெளிப்படுத்துவது மனித இயல்பு. இத்தகைய கலங்கும் மொழிகளே அன்பின் பெருக்கத்திற்கும், அகவாழ்வின் செழுமைக்கும், ஒருவரையொருவர் புரிந்து கொள்வதற்கும் பேருதவி புரிவனவாகும். இன்ப உணர்வு தம்மில் மட்டும் நிறைந்து மகிழ்வது, துன்பம் என்று வருகையில் அதனை வெளிப்படுத்தி, அதன் வழியில் அன்பை அடுத்தவருக்குப்புரிய வைப்பதுடன், தானும் அன்பின்

அளவில் மேலும் பெருகவும் இக்கலக்க மொழிகள் உதவுவன. உளவியல் அடிப்படையிலான இச்சிந்தனைகளை உய்த்துணர்ந்த சங்கப்புலவர் பெருமக்கள், இக்கலக்கமொழிகளுக்குத் தம் படைப்பாக்கத்தில் பெரியதொரு இடம்கொடுத்துப் பதிவுசெய்துள்ளனர் என்பதனை இவ்வாய்வின் வழி உய்த்துணர முடிகின்றது.

இதன்வழி பண்டையத்தமிழ் மக்களின் அகவாழ்வு குறித்த வரையரைகளும், பின்பற்றப்பட வேண்டிய ஒழுக்கலாறுகளும் புலப்படுகின்றன. நற்றிணையில் தலைவன், தலைவி இருவரது அன்பு வாழ்க்கையும், களவு வாழ்விலும், கற்பு வாழ்விலும் அவர்களில் வாழ்வில் ஏற்படும் நிகழ்களையும், கலங்கக்கூடிய இவர்களது வாழ்வியற் சூழல்களும், அந்நிலையில் அவர்களுக்கு உறுதுணையாய் நின்று உதவும் பண்புடையவர்களையும், இனம் காண முடிகின்றது. இதற்கு தொல்காப்பியர் உரைக்கும் அகமாந்தர்கள் குறித்த இலக்கண வரையறை பெரிதும் உதவுகின்றது. இவ்விலக்கியத்தில் 244 பாடல்கள் கலங்கிமொழியும் பாடல்களாக அமைந்துள்ளன. இவற்றுள் தலைவன் கலங்கிமொழியும் இடங்கள் 32 ஆகும். ‘பெருமையும் உரனும் ஆடுஉமேன’ என்பதற்கேற்ப சங்க காலத்துத் தலைவனைக் காணமுடிகின்றது. இருப்பினும் அத்தகையோன் அகவாழ்வு என்று வருகையில் அன்பின் வயப்படுவதால் ஓர் ஆண்மகனின் உள்ளக் கிடக்கை எவ்வாறு இருக்கும் என்ற நிலை பெறப்படுகின்றது.

எத்தகைய பெருமையும், உரனும் கொண்டவனாக இருந்தபோதிலும் காதல் வாழ்வு என்று வகையில் கலங்கி நிற்கும் நிலையை இப்பாக்களில் காணமுடிகின்றன. தலைவன் கூற்றுகளில் பெரும்பாலும், நெஞ்சிடம் கூறுவனவாக அமையும் பாக்களே நற்றிணையில் காணப்படுகின்றன. இதற்கு ஆண் என்கிற உணர்வு காரணமாக இருந்திருக்க வாய்ப்புண்டு. இருப்பினும் வெளிப்படுத்தாவிட்டால் அன்பு புலப்படுவதில்லை

என்பதுணர்ந்து தோழிகேட்கத் தானே புலம்புவது, பாணனிடம் புலம்புவது எனப் பலநிலைகளில் கூற்று அமைகின்றது. இக்கூற்றுகள் அனைத்தும் தான் தலைவிமீது கொண்ட விருப்பம், காதல், அவள் புணர்வு வேண்டுதல் என்று களவுநிலையிலும், கற்பு நிலையிலும் தலைவியைப் பிரிந்த போது அவள் நினைவால் கலங்குவதும் அமைகின்றது. களவில் கலங்கிமொழியும் கூற்றுகள் தலைவனின் அன்பு தலைவியைக் கூடுதற்கு மட்டுமோ என்று நினைக்கப்படும் சூழலில், உடன்போக்கு செல்கையில் தலைவி படும் துன்பம் கண்டு வருந்தும்போதும், பொருள்வயிற் பிரிந்தபோதும் உயிரினங்களின் அன்பு வாழ்வு கண்டு, தம் காதல் வாழ்வை ஒப்பிட்டு வருந்தும் சூழலில் அவன் கொண்ட அன்பு மேலோங்கி நிற்பது புலப்படுகின்றது. ஆண்மகனுக்கேயுரிய காதல், விருப்பம், வேட்கை, தவறிழைத்தல், தவற்றுக்கு வருந்துதல், இல்லறம் என்று வந்தபோது, பொறுப்புணர்ந்து செயல்படுதல் போன்ற நிலைகளில் சங்ககால ஆண்மக்களின் வாழ்வியலை இதன்வழி அறிவதுடன், இன்றைய நிலையில் ஒப்பிட்டுக் காண ஆண்மக்களின் உளவியல் அறிந்து இதுபோன்ற இக்கூற்றுகள் பெரிதும் உதவும் தன்மையில் அமைந்துள்ளன.

நற்றிணையில் தலைவி கலங்கியிரைக்கும் 65 பாக்கள் குறிப்பிடத் தக்கவை. இவை சங்ககாலப் பெண்கள் பற்றிய சமூகப்பார்வையில் காண பெரிதும் உதவுகின்றன. தொல்காப்பியம் தலைவிக்கான வரையறைகளைத் தந்துள்ளன. குறிப்பாகக் கூற்றுகள் நிகழ்த்தவும், உவமை உரைக்கவும் யாரிடம் பேசுவது என்ற வரையறையிலும் தலைவி என்பவளுக்கான கட்டுப்பாடுகள் காணப்பட்டதை அறியமுடிகின்றது. இருப்பினும் ஆடவன் ஒருவனை விரும்பவும், உடன்போக்கு நிகழ்த்தவும் செய்துள்ளார்கள் என்பது அவர்களுக்கு இருந்த சுதந்திரமான சூழலையும் சுட்டுவதாய் உள்ளன.

இருப்பினும் இல்லம் என்கிற கட்டுக்குள் அவர்கள் பாதுகாக்கப் பட்டத் தன்மையை தலைவி நிகழ்த்தும் கலங்கி மொழியும் கூற்றுகளில் அறியமுடிகின்றது. விரும்பிய தலைவனைப் பகற்குறி, இரவுக்குறியில் சென்று கண்டமையும், அத்தகைய சூழல் அதிகம் வாய்க்காத நிலையில் அதனை எண்ணி புலம்பியும், தலைவன் வரைவு நீட்டிப்பதைக் கண்டு வருந்தியும், இறைக்குறியில் வரும்வழியில் அவர்கள் அமையும் துன்பம் நினைந்தும், ஊரின் அலர்கண்டும், இற்செறிப்பு நிகழுமே என்று அஞ்சியும் தலைவி தன்நெஞ்சிடத்து, தோழியிடத்து தலைவன் கேட்கப் புலம்புதல் எனப் பல நிலைகளில் கூற்றுகள் அமைந்துள்ளன.

இவை, தலைவி தலைவன் மீது கொண்ட அன்பு புலப்பட காரணமாய் நிற்கின்றன. தலைவன் வருதலைத் தவிர்க்க நினைப்பதும், இயலாத சூழ்நிலையில் துன்புறுவதும், அவனுக்கு ஏதேனும் ஆகிவிடுமோ என்று அஞ்சுவதும், அலர் கண்டும், இற்செறிப்பு அச்சமும், பெண்மைக்கேயுரிய பண்புநலன்களைச் சுட்டுவதாய் உள்ளன. கற்பு வாழ்வில் தலைவன் பிரிவு தாங்காது வருந்துதலும், அஃறிணைப் பொருள்களைகூட தனக்குரிய அமைதியைத் தருவதாக எண்ணிப் புலம்புதலும், தவறிழைத்த கணவன் வாயில் நேர்ந்தபோது அவன் தவறுகளைச் சுட்டிக்காட்டியுரைத்தலும், மீண்டும் அத்தவறு செய்துவிடாமல் சேர்ந்து வாழ எண்ணுதலுமாகப் பண்டைக் காலப் பெண்களின் காதல், அன்பு, பொறுமை, போன்றனவற்றை ஒருசேரப் புலப்படுத்தும் கூற்றுகளை இவ்விலக்கியத்தில் காணமுடிகின்றன.

தோழி கலங்கி மொழியும் கூற்றுகள் ஒப்பற்றவையாகும். சங்க இலக்கியங்களில் தோழிக்கென முக்கியத்துவம் உண்டு. நற்றிணையிலும் *116* இடங்களில் தோழி கலங்கிமொழியும் இடங்களைக் காணமுடிகின்றது. தனக்கென வாழா பிறருக்கென வாழும் பண்புடைய தோழியை நற்றிணையில் காணமுடிகின்றது. தான் எப்போது

உடனிருக்கும் தலைவியின் நல்வாழ்க்கைக்காகவே வாழும் மாந்தராகத் திகழும் தோழியை எல்லா இலக்கியங்களும் திறனுடையதாகப் படைத்துள்ளன. இது சங்ககால வாழ்வியலை மட்டுமல்லாமல், ஒருவருடைய இன்பமான வாழ்விற்கு உடனிருப்பவர்கள் எவ்வண்ணம் துணைநிற்கவேண்டும் என்பதற்கான உதாரணப் படைப்பும் கூடவாகும் என்பது தவறில்லை.

நற்றிணைத் தோழியும் தலைவிக்காக தலைவியிடம், தலைவனிடம் செவிலியிடம் வாயில்களிடம், நெஞ்சிடத்துப் புலம்பியுரைக்கும் கூற்றுகள் அவள்தம் அன்பைப் புலப்படுத்துகின்றன. இவை தலைவியோடு தலைவனை இணைந்து வைக்க எடுக்கும் முயற்சியாகவே உள்ளன. தலைவனை நினைத்துக் கலங்கும் தலைவியை ஆறுதல் படுத்தும்போது, தான் கலங்கினாலும் அதனை வெளிப்படுத்தாது அமைதிப்படுத்தும் தோழியை இப்பாக்களுள் காணமுடிகின்றது.

தலைவன் குறியிடம் தவறுதலையும், அவன் வரும் வழி குறித்து அச்சப்பட்டும், வரைவை நீட்டிக்கும் அவன்செயல் கண்டும், ஊர் அலர் தூற்றுவதனால் தலைவி இற்செறிக்கப்படும் நிலை உணர்ந்தும், நற்றாய் தலைவி நிலை உணராது வெறியாட்டு நிகழ்த்துவதால், தலைவியின் உடல், உள்ளம் படும் துயரம் உணர்த்தும் பல்வேறு நிலைகளில் புலம்புவதோடு, அவற்றைத் தலைவன் முதலானோர் அறியும்படிச் செய்து தங்கள் துன்பத்தை உணரவைத்து, தலைவன், தலைவி இருவரும் இன்பமான இல்வாழ்வைத் தொடங்கக் காரணமாய் நிற்கும் தோழியை இப்பாடல்களில் காணமுடிகின்றன.

இவை அக்காலத்து இருந்த நல்லுள்ளங்களைச் சுட்டுவதோடு, தவறிழைக்கும் நேரங்களில் அவற்றை இடித்துரைத்துத் திருத்தும் பண்பும் கொண்டவர்களாகத் திகழ்ந்த சங்கச் சூழலைக் கண்முன்

நிறுத்துகிறது. தலைவியும், தோழியும் ஈருடல் ஒருயிராய் வாழ்ந்த தன்மையினை அவர்கள் கொண்ட தூய்மையான அன்பினை இப்பாக்கள் சுட்டுகின்றன.

இதனைப்போல் செவிலி, நற்றாய், பரத்தை கூற்றுகலும் சங்கச் சமூகத்தைச் சுட்டுகின்றன. இவர்களுக்குரிய கூற்றுகளாக நற்றிணையில் 11 பாடல்கள காணப்படுகின்றன. ஆனால் அவையும், கருத்தாழமிக்கப் பாடல்களேயாகும். அன்போடு வளர்த்த மகளின் உடன்போக்கு அறிந்த தாயர் கூற்று அன்னையர் தமக்கே உரிய அன்புணர்வாகும். தாங்கள் பாதுகாப்புடன் செல்வச்செழிப்போடு வளர்க்கும் மகளை சிறுபிள்ளை என நினைத்திருப்பதும், அவர்கள் உடன்போக்கு சென்றபோது வீட்டிலிருந்த நிலையை ஒப்பிட்டு இப்போது என்ன துன்பப்படுவாளோ என்று வருந்தும் இவர்தம் அன்பும், அறியாமையும், பேதமையும் தாய்மைக்கேயுரிய பண்பாகும். இத்தகைய பண்பு கொண்ட தாயரை இப்பாக்களில் காணமுடிகின்றன.

பரத்தையர் கூற்றுகள் அவர்கள் சங்ககாலத்தில் பெற்றிருந்த இடத்தைப் புலப்படுத்துகின்றது. காதற்பரத்தையராகவும், காமக் கிழத்தியாகவும் இவர்கள் காணப்பட்டமையும், தாய்க்கு நிகராக இவர்கள் இருந்தமையும், இருந்தபோதும் சமூகத்தில் ஏற்றுக்கொள்ளப்படாத தன்மையும் கொண்டிருந்தமை இவர்கள் தம் கூற்றுகள் வழி அறியமுடிகின்றது. தலைவிக்கே தலைவனின் பண்பை எடுத்துக் கூறும் பரத்தையின் கூற்றுகள் அவர்கள் தம் வாழ்வினைச் சுட்டுவதாய் உள்ளன.

இவ்வாறு நற்றிணையில் அமைந்துள்ள கலங்கிமொழிதல் என்னும் நிலையில் அமைந்த கூற்றுகள் சங்ககாலச் சமூகச் சூழலையும், உளவியல் நோக்கில் அகவாழ்வில் மாந்தர்தம் பண்புகளை எடுத்துக்கூறுவதுமாகவும் காணப்படுகின்றன. தொல்காப்பியர்

அகமாந்தர்களுக்குரிய வரையறையைத் தந்திருந்தாலும், நற்றிணையில் அக்கூற்றுகள் சில மட்டுமே இடம்பெற்றுள்ளன. பெரும்பாலும் இக்கூற்றுகள் அன்பை, வேட்கையை, விருப்பத்தைப் புலப்படுத்துவதாக அமைந்துள்ளன. மேலும் பண்டைக்கால மக்களின் வாழ்வியலைப் புலப்படுத்துவனவாகவும் உள்ளன.

இலக்கியங்கள் கொண்டு சமூகச் சூழலை அறுதியிட முடியாது என்றாலும் பண்டைக்காலத்து அகவாழ்வு எப்படி இருத்தல் வேண்டும் என்பதற்கு மாதிரியாக படைக்கப்பட்டன இலக்கியங்கள் என்று கொண்டாலும் இவ்விலக்கியங்கள் கூறும் கருத்துகள் எக்காலத்தும் போற்றப்படவேண்டியவை. பாதுகாக்கப்படவேண்டியவை. இத்தகைய பண்படுத்தப்பட்ட உணர்வுகள் ஏற்கப்படவேண்டியவை. பின்பற்றப்படவேண்டியவை, அன்பு, பொறுமை, விட்டுக்கொடுத்தல், அறிவுறுத்தல், பழிக்கு அஞ்சுதல், பெரியோருக்கு அடங்கி நடத்தல், ஆண்மக்கள் பெண்மக்கள் பொறுப்புணர்தல் போன்ற பல நற்பண்புகளை இம்மாந்தர்களின் கூற்றுகள் வெளிப்படுத்துகின்றன. உளவியல் நோக்கில் பதிவுசெய்யப்பட்டுள்ள இக்கூற்றுகள், சங்ககாலத்தில் மக்கள் பின்பற்றப்படவேண்டிய ஒழுக்கலாறுகளாகப் புலவர் பெருமக்களால் படைக்கப்பட்டுள்ளன. இவை சங்க மக்களின் வாழ்வியலை மட்டுமல்லாமல், எப்படி சமூகமாய் வாழவேண்டும் என அறிவுறுத்தி நல்வழிப்படுத்தும் சமூகச்சிந்தனையும், படைப்புத்திறனும் கொண்ட புலவர் பெருமக்கள் நிறைந்த சமூகத்தையும் சுட்டுவனவாய் உள்ளன. இத்தகைய இலக்கியங்களை பண்பாட்டு நிலையிலும், உளவியல் நிலையிலும், சமூக நிலையிலும் மேன்மேலும் ஆராய்ந்து நோக்க இடமுண்டு. இத்தகைய ஆய்வுகள் வரும் சமூகத்தை நெறிப்படுத்த உதவும் என்பதில் ஐயமில்லை.

# துணைநூற்பட்டியல்

***முதன்மைச் சான்றாதாரங்கள்***


*பாலசுப்பிரமணியன், கு.வெ. (உரை.)* *நற்றிணை (மூலமும் உரையும்),*
*பரிமணம், அ.மா. (ப.ஆ.)* *நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,*
*41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,*
*அம்பத்தூர், சென்னை,*
*முதற்பதிப்பு, ஏப்ரல் 2004.*


***துணைமைச் சான்றாதாரங்கள் :***


*அமிர்தகௌரி, ஆ.* *சங்க இலக்கியத்தில் உரையாடல்,*
*பாரிநிலையம்,*
*184, பிரகாசம் சாலை,*
*சென்னை - 18,*
*திசம்பர் 1989.*

*இராமகிருட்டிணன், ஆ.* *அகத்திணைமாந்தர் ஓர் ஆய்வு,*
*தியகராசர் கல்லூரி,*
*மதுரை,*
*ஜனவரி 1982.*

*இலக்குமணப் பெருமாள், சு. (து.ஆ.)* *தொல்காப்பியப் பொருளதிகாரக் கோட்பாடு,*
*லோகாம்பாள் பதிப்பகம்,*
*161, மல்லிகைநகர்,*
*ஆனையூர், மதுரை - 14,*
*முதற்பதிப்பு, செப்டம்பர் 1997.*

கலியாணசுந்தரம், தெ. சங்கஇலக்கிய அகப்பாடல்களில்
உணர்வு போராட்டம்,
வாணி பதிப்பகம்,
நெ.402, அளகேசன் சாலை,
கோவை - 11.

காஞ்சனா, இரா. இலக்கியமும் உளவியலும்,
விஷ்ணுபிரியா பதிப்பகம்,
141, குமாரசாமி இராஜாதெரு,
மதுரை - 19,
2000.

சண்முகம், செ.வை. பொருளிலக்கணக் கோட்பாடு,
தொல்காப்பியம் முதல்தொகுதி,
(இறைச்சியும் தொடையும்),
மெய்யப்பன் பதிப்பகம்,
2009.

சிவராசன், து. சங்க இலக்கிய வாழ்வியல்,
சிவம் பதிப்பகம்,
2/82 & 9, காந்திநகர்,
விருபாட்சிபுரம், வேலூர் - 2,
முதற்பதிப்பு 1998.

சுந்தரபாண்டியன், க. தமிழில் பொருளிலக்கண வளர்ச்சி,
அய்யனார் பதிப்பகம்,
சென்னை - 88,
முதல்பதிப்பு, ஏப்ரல் 2010.

சுப்புரெட்டியார், ந. தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை,
பழனியப்பா பிரதர்ஸ்,
கோனார் மாளிகை,
25, பீட்டர்ஸ் ரோடு,
சென்னை - 14,
நான்காம் பதிப்பு, 2002.

செயபால், இரா. (உ.ஆ.) அகநானூறு மூலமும் உரையும்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41-பி, சிட்கோ இண்டர்ஸ்டிரியல்
எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை.

தட்சிணாமூர்த்தி, அ. சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித
உறவுகள்,
மங்கையர்க்கரசி பதிப்பகம்,
மனைஎண் 205, புட்பம் குடியிருப்பு,
அருளானந்தர் நகர்,
பத்தாம் குறுக்குத்தெரு,
தஞ்சாவூர் - 7,
2001.

நச்சினார்க்கினியர் (உரை.) தொல்காப்பியம் பொருளதிகாரம்,
நச்சினார்க்கினியர் உரை,
கழக வெளியீடு,
சென்னை - 1,
1966.

| | |
|---|---|
| நடராசன், தி.சு. | திறனாய்வுக்கலை,<br>கொள்கைகளும் அணுகுமுறைகளும்,<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,<br>41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல்<br>எஸ்டேட்,<br>அம்பத்தூர், சென்னை. |
| நாராயணசாமி ஐயர், அ.<br>பின்னத்தூர் (உ.ஆ.) | நற்றிணை மூலமும் உரையும்,<br>சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,<br>சென்னை - 1,<br>1957. |
| நாகராசன், வி. (உ.ஆ.) | குறுந்தொகை மூலமும் உரையும்,<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,<br>41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல்<br>எஸ்டேட்,<br>அம்பத்தூர், சென்னை. |
| மகாதேவன், கதிர்<br>தமிழண்ணல்<br>அண்ணாமலை, சுவ.(உ.ஆ.) | நற்றிணை (மூலமும் உரையும்),<br>கோவிலூர் மடாலயம்,<br>கோவிலூர்,<br>முதற்பதிப்பு, 2003. |
| மாணிக்கவாசகன், ஞா.<br>(ப.ஆ.) | தொல்காப்பியம் மூலமும் விளக்க<br>உரையும்,<br>உமாபதி பதிப்பகம்,<br>18, பவளக்காரத்தெரு,<br>சென்னை - 01,<br>முதற்பதிப்பு 2006. |

மீனாட்சிசுந்தரம், தெ.பொ. நற்றிணைச் சொற்பொழிவுகள், திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை - 1, ஜனவரி - 1950.

ராசகோபாலன், சரளா. சங்கஇலக்கியத்தில் தோழி, ஒளிப்பதிப்பகம், 63, ரங்காச்சாரி சாலை, சென்னை - 18, முதற்பதிப்பு 1986.

வரதராசன், மு. இலக்கியமரபு, பாரிநிலையம், 59, பிராட்வே, சென்னை - 1, இரண்டாம் பதிப்பு, 1968.

விசுவநாதன், அ. (உ.ஆ.) கலித்தொகை மூலமும் உரையும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., 41-பி, சிட்கோ இண்டர்ஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை.

**அகராதி**

அங்கமுத்து, ந.
கலைவாணி, ந. நர்மதாவின் தமிழ் அகராதி, நர்மதா பதிப்பகம், 16/7, பாண்டி பஜார், சென்னை.

அருணாச்சலம், ப. — சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம்,
தொகுதி மூன்று,
முதற்பதிப்பு, 1988.

கதிரைவேற்பிள்ளை, ந. — தமிழ்மொழி அகராதி,
சாரதாபதிப்பகம்,
ஜி-4, சாந்தி குடியிருப்பு,
நெ.3, கிருஷ்ணாபுரம் தெரு,
இராயப்பேட்டை,
சென்னை - 14,
முதற்பதிப்பு, 2003.

சாரங்கபாணி, இரா. — சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம்,
தொகுதி - 2,
முதற்பதிப்பு, 1980.

................................ — சங்கஇலக்கியப் பொருட்களஞ்சியம்,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
மறுதோன்றி அச்சகம்,
தஞ்சாவூர்.

................................ — பெருஞ்சொல்லகராதி,
தமிழ்ப்பல்கலைக்கழகம்,
முதற்பதிப்பு, 1988.

**ஆய்வேடுகள்**

சத்தியமூர்த்தி, கா. — நற்றிணையில் தோழி கலங்கி மொழிதல்,
ஆய்வியல் நிறைஞர்பட்ட ஆய்வேடு
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி,
2010.

சுந்தரமூர்த்தி, மு. எட்டுத்தொகை அக இலக்கியங்களில் தலைவன் நெஞ்சுக்கு சொல்லுதல், ஆய்வியல் நிறைஞர்பட்ட ஆய்வேடு அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி, சூலை 2012.

செண்பகவள்ளி, மு. குறுந்தொகையில் துன்பியல் மெய்ப்பாடுகள், ஆய்வியல் நிறைஞர்பட்ட ஆய்வேடு அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி, 2012.

தமிழ்இலக்கியா, மா. நற்றிணையில் எண்வகை மெய்ப்பாடுகளும் சமூகக் கட்டமைப்புகளும், ஆய்வியல் நிறைஞர்பட்ட ஆய்வேடு அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி, 2013.

பாலகிருட்டிணன், நா. தொல்காப்பியப் பொருளதிகார வழி நற்றிணை - ஓர் ஆய்வு, முனைவர்பட்ட ஆய்வேடு, சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை - 35, டிசம்பர் 1988.

முத்தமிழ்ச்செல்வன், சோ. சங்க இலக்கியத்தில் நெஞ்சொடு கிளத்தல், முனைவர்பட்ட ஆய்வேடு, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி.

முத்துக்கருப்பன், ஆறு. பரணர் ஔவையார் பாடல்களில் உள்ளப் போராட்டம், முனைவர்பட்ட ஆய்வேடு, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி, 2010.


**இதழ்கள்**

பதிப்பாசிரியர் குழு வளர்தமிழ் ஆய்வு மன்றம், 5வது கருத்தரங்கு, 2008.

மேலது சங்க இலக்கிய ஆய்வு மையம், குறிஞ்சி, HIG - 17, வீட்டுவசதி வாரியக் குடியிருப்பு, தோப்பூர், மதுரை, 2008.

மேலது வளர்தமிழ் ஆய்வுமன்றம், (கட்டுரைத் தொகுப்பு), வளர்தமிழ் ஆய்வுமன்றம், பூங்குன்றன் பள்ளி வளாகம், திண்டுக்கல், 2011.

| | |
|---|---|
| மேலது | இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம், *44*ம் பன்னாட்டுக் கருத்தரங்கு, *2013.* |
| மேலது | இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம், *38*ம் கருத்தரங்கு ஆய்வுக்கோவை, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், *2007.* |